| | | | |
|---|---|---|---|
| Acc.No: | 78109 | | |
| Title: | இந்தியச் சரித்திரம் | | |
| Vol: | No: | Month&Year: 1917 | |
| Author: | | | |
| Year & Publication | 1917 MACMILLAN & CO., LIMITED MADRAS | | |
| Call No: | V2 N17 | | |
| Total Pages: | ~~III to~~ viii, 271 | | |
| Missing Pages: | i-ii | | |
| Date of Lamination: | 14/10/14 | | |
| Preservation Clerk Sign: | T. SENTHIL NAYAKI | | |
| Remarks(if any): | | | |
| Librarian | [signature] 14/10/14 | | |

# HISTORY OF INDIA

FOR JUNIOR CLASSES.

NEW AND REVISED EDITION

TAMIL

E. MARSDEN, B.A.

# இந்துதேச சரித்திரம்.



MACMILLAN & CO., LIMITED
OMBAY, CALCUTTA AND LONDON
1917

 [விலை, ௰௨ அணா

# இந்துதேச சரித்திரம்.



கீழ் வகுப்புகளுக்கு உபயோகமாகும்படி

நூதன முறைகளை அநுசரித்தும்

பல புதிய சரித்திரங்களைச் சேர்த்தும்

சுலபமான நடையில் எழுதப்பட்டது.



MACMILLAN & CO., LIMITED

MADRAS, BOMBAY, CALCUTTA AND LONDON

1917



Price 12 Annas.] [விலை, ௧௨ அணா.

## சூசிபத்திரம்.

### முதற்பாகம்.



பாடம். பக்கம்.

## இரண்டாம் பாகம்.



## மூன்றாம் பாகம்.

## நான்காம் பாகம்.

1

# HISTORY OF INDIA.

## PART I.

# இந்துதேச சரித்திரம்.

## முதற் பாகம்.

### 1. இந்தியா: அதன் மலைகளும் நதிகளும்.

நாம் வசிக்கும் தேசத்துக்கு இந்தியா என்று பெயர். ஆசியாகண்டத்தின் தெற்கில் அது சமுத்திரத்துக்குள் பிரவேசித்து, பார்வைக்கு முக்கோண வடிவமாக உள்ளது. அதன் வடக்கே மிக உன்னதமான ஹிமாலயம் என்னும் மலைத்தொடர் இருக்கிறது. ஹிமாலயம் என்பதற்கு 'பனிவீடு' என்பது பொருள்; உலகத்தில் இந்த மலையைக் காட்டிலும் உயரமான மலை வேறு இல்லை; ஆசியாவின் மற்றப் பாகங்களிலிருந்து இந்தியாவைப் பிரித்து அதற்கு ஒரு பெரிய கோட்டை மதிலைப்போல் இது விளங்குகிறது. இதன் சிகரங்களில் பனி நிறைந்திருக்கும்; ஒருபோதும் உருகுவதில்லை; குளிரின் மிகுதியால் ஜனங்கள் இங்கே வசிக்கமாட்டார்கள்; பிராணிகளும் தென்படா; புல் பூண்டு முதலியவைகளும் முளைப்பதில்லை.

வடமேற்கிலும் வடகிழக்கிலும் இமயமலையின் கிளைகளாகிய சில குன்றுகள் வடக்கேயிருந்து தெற்கே சமுத்திரம் வரையிலும் பாவியிருக்கின்றன. இந்தக் குன்றுகளில் பல கணவாய்கள் உண்டு. அவை மிகவும் உயரமாக இருப்பதால் பனி நிரம்பியிருக்கும். ஆனாலும் அவற்றின் வழியாக அயல் நாடுகளிலிருந்து இந்தியாவுக்கு ஜனங்கள் வரக்கூடும்; அவற்றில் முக்கியமானது கைபர்கணவாய். படத்தைப் பார்த்தால் இது நன்றாக விளங்கும்.




வடகிழக்கிலுள்ள மலைகளுக்கும் இமயகிரியின் கிழக்குக் கோடிக்கும் நடுவில் பிரம்மபுத்திரா என்னும் பெரியநதி உற்பத்தியாகி, அம்மலையிலேயே உற்பத்தியாகி ஓடிவரும் கங்கா நதியோடு பிறகு சேர்ந்துவிடுகிறது. சிந்து என்னும் பெரிய நதியும் இமயமலையிலேதான் உற்பத்தியாகிறது.

## ஸிந்து கங்கை மைதானம்.

இது இமயமலைக்குத் தெற்கேயுள்ள விசாலமான தாழ்ந்த வெளி. இதற்கு 'இந்துஸ்தானம்' என்றும் பெயர் உண்டு. மேலே சொன்ன பிரம்மபுத்திரா, கங்கை, சிந்து ஆகிய மூன்று நதிகளும் இதன் வழியாக ஓடுகின்றன. இது மிகவும் செழிப்பான பிரதேசம்; அதனால் இங்கே ஜனங்கள் மிகுதியாக வசிக்கிறார்கள்; அவர்கள் தக்க செல்வவான்களாகவும் இருக்கிறார்கள். பழையகாலந் தொடங்கி இது மிகவும் பிரசித்தி பெற்றது. இந்தியாவின் ராஜதானியாகிய டில்லி நகரமானது இதன் மத்தியிலேதான் இருக்கிறது.

## பீடபூமி.

இதற்குத் தெற்கில் விந்தியமலையானது இந்தியாவின் குறுக்கே, மேற்கிலிருந்து கிழக்குநோக்கி வியாபித்திருக்கிறது. இது வர வர உயரத்தில் குறைந்துகொண்டே வந்து கிழக்குக் கோடியில் ஒரு பீடபூமியாகவுள்ளது. இதற்கு, சூடிய நாகபுரி (Chota Nagpur) என்று பெயர். விந்தியமலையும் மேற்சொன்ன பீடபூமியும் ஸிந்து கங்கை மைதானத்திலிருந்து இந்தியாவின் தென்பாகமாகிய தக்காணத்தை (Deccan) ப் பிரிக்கின்றன. சமுத்திரத்துக்கும் விந்தியமலையின் கிழக்கு முனைக்கும் மத்தியிலுள்ள நிலத்தின் வழியாக இந்துஸ்தானத்திலிருந்து தக்காணத்துக்கு எளிதில் போய் வரலாம். பூர்வகாலத்தில் தக்காணத்துக்கு இந்த வழியாகத்தான் பல ஜாதியார்களும் வந்தார்கள்.

## தக்காணம்.

இந்துஸ்தானத்துக்குத் தெற்கேயுள்ள இந்தியாவின் பாகத்துக்கு 'தக்காணம்' (தெற்கிலுள்ளது) என்று பெயர். இதன் வடக்கெல்லை யாது? உண்மையாகச் சொல்லுமிடத்து இந்தியாவில் முக்கோண வடிவமாகவுள்ள நிலப்பகுதி தக்ஷிணதேசந்தான். இதன் மேற்கிலும் கிழக்கிலும் சமுத்திரம் இருக்கிறது. இதற்குத் தெற்கே கடலில் இலங்கைத்தீவு உள்ளது. பல்லாயிரம் வருஷங்களுக்கு முன் நம்முடைய முன்னோர்கள் தக்காணத்திலிருந்து இலங்கைக்குப் போய்வருவது வழக்கம். மேற்கிலும் கிழக்கிலும் உள்ள கடல்கள் இந்துமகா சமுத்திரத்தின் பிரிவுகள். இந்தியாவுக்கு ஐரோப்பியர்கள்

இந்தக் கடல்கள் வழியாகத்தான் வந்தார்கள். ஒரு தேசத்திலிருந்து மற்றொரு தேசத்தைப் பிரித்தாலும் சமுத்திரமானது ஜனங்களுக்கு மிகவும் உபயோகமாக உள்ளது. ஆங்கிலேயர்கள் இந்தியாவை அயல் நாட்டாருடைய கைக்கு அகப்படாமல் பாதுகாத்து வருவது சமுத்திரத்தின் உதவியினாலேதான்.

### கர்நாடகம்.

கடற்கரையோரமாக மேற்கிலும் கிழக்கிலும் தாழ்வான நிலங்கள் உள்ளன. கிழக்கிலுள்ள நிலமானது வர வர அகன்று தெற்கே ஒரு விசாலமான சமவெளியாக இருக்கிறது. இதற்கு 'கர்நாடகம்' என்று பெயர். இதன் வழியாக நதிகள் பல பாய்ந்து செல்லுகின்றன. கிழக்கிலுள்ள சமவெளியில் கிழக்குத் தொடர்ச்சி மலையும், மேற்கிலுள்ள சமவெளியில் மேற்குத் தொடர்ச்சி மலையும் வடக்கேயிருந்து தெற்கு வரையில் வியாபித்திருக்கின்றன. கிழக்கிலுள்ள சமவெளி வெகுகாலமாகப் பிரசித்திபெற்றது. மேற்குத் தொடர்ச்சி மலை மூவாயிரம் அடி உயரமுள்ளது. கிழக்குத் தொடர்ச்சி மலை 1500 - அடி உயரமுள்ளது. மேற்குத் தொடர்ச்சிமலை சமுத்திரத்துக்கு அருகிலும் கிழக்குத் தொடர்ச்சிமலை சமுத்திரத்துக்கு வெகு தூரத்திலும் இருக்கின்றன.

### தக்ஷிண பீடபூமி.

இந்த இரண்டு மலைத்தொடர்களுக்கும் மத்தியில் உள்ள பிரதேசம் 'தக்ஷிண பீடபூமி' என்று சொல்லப்படும். பல உயரமான குன்றுகள் இதில் உள்ளன. இவைகள் ஆதிகாலத்தில் மிகுந்த பிரயோசனமுள்ளவைகளாக இருந்தனவென்பது இந்துதேச சரித்திரத்தால் தெரியவரும். இந்தப் பீடபூமியில் மழை மிகவும் குறைவு. பூமியும் அதிக வளமுள்ளதாக இல்லை. ஆகையால் இங்குள்ள ஜனங்கள் மிகவும் கஷ்டப்பட்டு உழைத்தே ஜீவனம் செய்து வருகிறார்கள்; நல்ல தேகபலமும் தைரியமும் அமைந்தவர்கள். கோதாவரி, கிருஷ்ணா, காவிரி ஆகிய இந்த மூன்று நதிகளும் மேற்குத் தொடர்ச்சிமலையில் உற்பத்தியாகி, தக்ஷிணதேசத்திற் பாய்ந்து கிழக்குத் தொடர்ச்சிமலை வழியாகக் கிழக்கே ஓடுகின்றன. கடைசியில் அவை கர்நாடக சமஸ்தானத்துக்கும் பாய்கின்றன.

### மைசூர் பீடபூமி.

கிழக்குத் தொடர்ச்சிமலையும் மேற்குத் தொடர்ச்சிமலையும் நீலகிரியில் சந்திக்கின்றன. நீலகிரிக்கு வடக்கே மைசூர் பீடபூமி உள்ளது. இது தக்ஷிண பீடபூமியைக் காட்டிலும் உயரமானது. இது சரித்திரப் பிரசித்திபெற்றது. இதற்குத் தெற்கில் பெரிய மலைகளும் விசாலமான சமவெளிகளும் உள்ளன. இவை ஆதிகாலந் தொடங்கிச் சரித்திரத்தால் புகழ் பெற்றவை.

கிருஷ்ணுநதிக்குத் தெற்கேயுள்ள பிரதேசத்துக்கு "தென் இந்தியா" என்றும் கிருஷ்ணுவுக்கும் விந்தியமலைக்கும் மத்தியிலுள்ள நாட்டுக்கு "தக்ஷிணம்" என்றும் விந்தியமலையிலிருந்து இமயகிரி வரையில் பரவியிருக்கும் தேசத்துக்கு "இந்துஸ்தானம்" என்றும் பெயர். இந்த மூன்று இடங்களின் சரித்திரங்களையும் படித்தால்தான் நாம் இந்தியாவின் சரித்திரத்தைப் படித்தவர்கள் ஆவோம்.



## 2. பூர்வகாலத்தில் இந்தியாவில் இருந்தவர்கள்.

இக்காலத்தில் இந்தியாவில் 315-கோடி ஜனங்கள் வசிக்கிறார்கள்; அளவற்ற நகரங்களும் உள்ளன; ஆனால் ஆதிகாலத்திலோ எந்தப் பக்கத்திலும் காடுகள் அதிகமாக உண்டு. அவற்றில் பல துஷ்டமிருகங்கள் சஞ்சரித்துக்கொண்டும், மரங்களின் அடியில் பெரிய பாம்புகள் ஊர்ந்துகொண்டும் இருந்தன. அக்காலத்தில் பட்டணங்களேனும், * கிராமங்களேனும், நல்ல சாலைகளேனும் இல்லை. சில காட்டுமனிதர்கள் இங்குமங்கும் குகைகளில் வசித்து வந்தார்கள். அவர்கள் இன்னவிதமாக இருந்தார்களென்று தெரியவில்லை. ஆனால் அவர்கள் குள்ளமாகவும், கறுப்பாகவும், அவலக்ஷணமாகவும் இருந்தார்களென்



சக்கிமுக்கிக்கற் கத்திகள்.

றும், பழங்களையும், கிழங்குகளையும், பன்றியின் இறைச்சியையும் தின்று வந்தார்களென்றும் சாஸ்திர ஆராய்ச்சிக்காரர்கள் சொல்லுகிறார்கள். அவர்கள் காலத்தில் கத்திகளே இல்லை. கூர்மையான சக்கிமுக்கிக்கல்லே கத்தியாக உபயோகப்பட்டுவந்தது. காலக்கிரமத்தில் அவர்கள் குடிசைகளைக் கட்டிக்கொண்டார்கள்; முதலில் தழைகளையும் பிறகு மிருகங்களின் தோல்களையும் வஸ்திரங்களாக உபயோகித்துவந்தார்கள்.

## கோலர்கள்.

பூர்வகாலத்தில் வட இந்தியாவிலும் மத்திய இந்தியாவிலும் கோலர்கள் என்னும் ஜாதியார் வசித்துவந்ததாகத் தெரிகிறது. முதலில் அவர்கள் இன்ன இடத்தில் இருந்தார்கள்



காட்டுமனிதர்கள்.

என்பது விளங்கவில்லை. அவர்களிடம் ஆடுமாடுகள் இல்லை. மிருகங்களை வேட்டையாடி அவற்றின் மாமிசங்களைத் தின்று வந்தார்கள்; நிலத்தைக் கொத்தி விதைவிதைத்துப் பயிரிட்டு வந்ததும் உண்டு. அவர்கள் முதலில் மரத்தினுல் செய்த ஆயுதங்களையும் பிறகு இரும்பு ஆயுதங்களையும் உபயோகித்து வந்தார்கள். தங்கள் முன்னேர்களையும் வனதேவதைகளையும் அவர்கள் தொழுதார்கள்; நாளடைவில் இந்தியாவுக்கு வந்த மற்ற ஜனங்களுடன் கலந்துவிட்டார்கள்; ஆனல் இக்காலத்திலும் இந்தியர்களுடன் கலவாத பன்னிரண்டுவகையான கோலர்கள் உண்டென்றும் அவர்களின் ஜனத்தொகை முப்பது லக்ஷமென்றும் தெரிகிறது. இந்த முப்பது லக்ஷம் ஜனங்களும் வங்காளத்தின் மேற்கிலும், சூடிய நாகபுரியிலும், ஒரிஸ்ஸாவிலும் உள்ள மலைகளிலும் காடுகளிலும் வசிக்கிறார்கள். அவர்களில் பீலரும், சாந்தளரும் முக்கியமானவர்கள் ஆவர்.

### திராவிடர்கள்.

இப்போது தென்னிந்தியாவில் வசிக்கும் அநேக ஜனங்கள் தாங்கள் திராவிடர்களென்று சொல்லுகிறார்கள். அவர்களுடைய உற்பத்தியைப்பற்றி நமக்கு அதிகமாக ஒன்றும் தெரியவில்லை; ஆனல் அவர்கள் வடமேற்கிலிருந்து இந்தியாவுக்கு வந்து வெகுகாலம் வரையில் இந்துஸ்தானத்தில் வசித்துவந்தார்கள் என்றும் பிறகு கோலர்களை ஜயித்து அப்பால் தென்னிந்தியாவுக்குள் நுழைந்தார்கள் என்றும் தெரிகிறது.

இந்தியாவுக்குத் தெற்கே ஒரு பெரிய தேசம் இருந்ததென்றும் ஒருகாலத்தில் அது கடலில் முழுகிப்போய்விட்டதென்றும் அங்கிருந்து வந்தவர்களே திராவிடர்கள் என்றும் வேறு சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள்.

திராவிடர்களிடம் ஆடுமாடுகள் ஏராளமாக இருந்தன. அவர்கள் காடுகளை அழித்து நிலத்தைப் பயிரிட்டார்கள். கிராமங்களில் வசித்துக்கொண்டு கிராமாதிகாரிக்கு அடங்கி நடந்துவந்தார்கள். ஜன்மதேசத்தில் அவர்களுக்கு விசேஷ பக்தியுண்டு. ஸர்ப்பங்களையும், மரங்களையும் அவர்கள் ஆராதித்துவந்தார்கள். தெய்வத்தினிடம் அவர்களுக்கு அச்சம்



திராவிடர் சர்ப்ப வணக்கம்.

உண்டே யல்லாமல் தெய்வத்தை அவர்கள் வணங்குவதில்லை. தங்களுக்கு ஒருவிதமான கெடுதியும் உண்டாக்காமல் இருத்தற்காக அவர்கள் தெய்வங்களுக்கு ஆடுகளையும், கோழிகளையும், எருமைகளையும் பலிகொடுத்து வந்தார்கள்.

திராவிடர்களுக்குச் சொந்தமான பெரிய பட்டணங்களும், கிராமங்களும் வட இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் வெகுகாலமாக உண்டு. அவர்களுக்குப் பல ராஜ்யங்கள் இருந்தன. கிராமாதிகாரிகள் தானியங்களை அரசர்களுக்கு வரியாகச் செலுத்திவந்தார்கள். கிராம பரிபாலன முறையானது முதலில் திராவிடர்களால் ஏற்படுத்தப்பட்டது. அந்த முறை வெகு சமீபகாலம்வரையில் வழக்கத்திலிருந்து வந்தது. திராவிடர்கள் வியாபாரம் செய்துவந்தார்கள். பல வருஷங்களுக்குமுன் அவர்கள் தேக்கமரம், ரணைசல்லா, மயில், தந்தம், சந்தனக்கட்டை அரிசி முதலியனைகளை அயல் நாடுகளுக்கு அனுப்பிக்கொண்டிருந்தார்கள். கோலர்களைக் காட்டிலும் அவர்கள் மிக்க தேகதிடமும், அதிக நாகரிகமும் உள்ளவர்கள். செழிப்பான நிலங்களைத் தாங்கள் வைத்துக்கொண்டு மற்ற நிலங்களைக் கோலர்களுக்கு விட்டுவிட்டார்கள். அநேக இடங்களில் திராவிடர்களும் கோலர்களும் கலந்துகொண்டு ஒரே ஜாதியாராக ஆய்விட்டார

கள். காலக்கிரமத்தில் பல புதிய ஜனங்கள் இந்தியாவுக்கு வந்து குடியேறினார்கள். முதலில் அவர்களோடு திராவிடர்களும் கோலர்களும் சண்டைபோட்டு அப்பால் அவர்களோடு கலந்துகொண்டார்கள். பல ஜாதிகள் ஏற்பட்டதற்குக் காரணம் இதுவே. திராவிடர்கள் வெகுகாலமாக, பஞ்சாபிலும், காஷ்மீரத்திலும், ராஜபுதனத்திலும் இருந்தார்களென்றும் பிறகு அங்கிருந்து துரத்தப்பட்டார்களென்றும் சிலர் நினைக்கிறார்கள். வட இந்தியாவிலும், மத்திய இந்தியாவிலும் திராவிடர்களுடைய சந்ததியார்கள் இன்றைக்கும் வசித்து வருகிறார்கள். ஆனால் தென்னிந்தியாவாசிகளுக்கும் திராவிடர்களுக்குமே உருவத்தில் அதிக ஒற்றுமை இருப்பதாகச் சொல்லுகிறார்கள். உஷ்ண தேசங்களிலேயே அவர்கள் வெகுகாலமாக இருந்து வந்தமையால் மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாகக் கறுத்துப்போய்விட்டார்கள். அவர்களுடைய முக்கியமான பாஷைகளாவன: — தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம்.

இக்காலத்திலும் சில திராவிடர்கள் நாகரிகம் அற்றவர்களாக இருக்கிறார்கள். அவர்களைப் பழைய திராவிடர்களின் பாம்பரையினராகச் சொல்லலாம். அவர்கள் காடுகளிலும் குன்றுகளிலும் மலைகளிலும் வசிக்கிறார்கள். கோண்டர்களும், காண்டர்களும், சவரர்களும் அவர்களில் முக்கியமானவர்கள்.

## இந்தியாவில் நிலைபெற்ற குடிகள்.

இமயமலைக்கு வடக்கே மத்திய ஆசியா உள்ளது. பனி நிறைந்த பல மலைகள் அங்கே இருந்தலால் குளிர் பொறுக்க முடியாது. நிலத்தின் பெரும்பாகம் கல் தரையாகவே இருக்கும். மழை உபாயமாகத்தான் பெய்யும். நதிகளும் மிகச் சில. ஆதலால் அங்குள்ளவர்கள் தங்கள் ஆடுமாடுகளுக்கு வேண்டிய புல்லைத் தேடிக்கொண்டு ஊரூராய்த் திரிவார்கள். ஒருவிதமான தானியமும் விளையாமையால் அவர்களுடைய ஆகாரத்துக்கும் அங்கே வழியில்லை.

இமயமலைக்குத் தெற்கே வெகுதூரம் பரவியுள்ள ஒரு விசாலமான சமவெளி இருப்பதோடு அதன் வழியாகப் பல பெரிய நதிகள் பாய்ந்து செல்லுகின்றன அல்லவா? வெயில்

வேண்டிய அளவு இருப்பதாலும், பூமி செழிப்பாக இருத்தலாலும், தானியங்கள் ஏராளமாய் விளைவதாலும் ஜனங்கள் இங்கே கவலையின்றிச் சுகமாக வசிக்க முடியும். ஆகாரத்துக்கு வழியில்லாமல் வடக்கே குளிர்தேசங்களில் வருந்தும் ஜனங்கள் தெற்கேயுள்ள இந்த மைதானத்துக்கு மலைக்கணவாய்களின் வழியாக வருவதுண்டு. வடக்கே யிருப்பதைக் காட்டிலும் இந்துஸ்தானத்தில் வசிப்பது சௌக்கியமென்று கருதி அவர்கள் இந்தியாவிலுள்ள சமவெளிகளில் வந்து குடியேறினார்கள்.

இவ்வாறு குடியேறினவர்கள் பலவகையான ஜாதியார். அவர்களுள் அநேகருடைய பெயர் தெரியவில்லை. நமக்குத் தெரிந்தவரையில் அடியிற் குறிப்பிட்டவர்களே ஒருவர் பின் ஒருவராக இந்துஸ்தானத்துக்கு வந்தவர்கள்:—

துரானியர்கள் அல்லது மங்கோலியர்கள், ஆரியர்கள், பாரசீகர்கள், கிரேக்கர்கள், சித்தியர்கள், ஹூணர்கள், அரேபியர்கள், ஆப்கானியர்கள், பட்டாணியர்கள், துருக்கியர்கள், மொகலாயர்கள்.

இவர்கள் இந்தியாவுக்கு எப்போது வந்தார்கள்? எங்கே வந்து தங்கினார்கள்? இந்த விஷயங்களைப்பற்றி யெல்லாம் இனிமேல் தெரிந்துகொள்வோம். துரானியர்கள் வடகிழக்கை நோக்கி வந்தார்கள்; பாரசீகர்களும், அரேபியர்களும், கிரேக்கர்களும் வடமேற்கு மாகாணத்தில் வந்து தங்கினார்கள்; மொகலாயர்களும், துருக்கியரும், பட்டாணியர்களும் இந்துஸ்தானத்தில் சிந்துநதிக் கரையிலும் கங்கைக் கரையிலும் குடியேறினார்கள். சித்தியர்களும், ஹூணர்களும் வடமேற்கிலும், மத்திய இந்தியாவிலும், மேற்கிலும் நிலை பெற்றார்கள்; ஆரியர்களுள் முதல் முதல் வந்தவர்கள் வெகுதூரம் சென்று தென்னிந்தியா நீங்கலாக இந்தியா முழுவதிலும் பரவினார்கள். தெற்கே சென்றவர்கள் மிகச் சிலரே.

### துரானியர்கள் அல்லது மங்கோலியர்கள்.

மத்திய ஆசியாவில் மங்கோலியா என்று ஒரு மாகாணம் உண்டு. அதுதான் மங்கோலியர்களுடைய இருப்பிடம். அதற்கு 'சீனதார்த்தாரி' என்றும் ஒரு பெயருண்டு. மங்

கோலியர்கள் அங்கிருந்து புறப்பட்டு, சைனுவுக்கு அருகி லுள்ள தேசங்களிலெல்லாம் பாவினார்கள். மகம்மதிய சரித் திரக்காரர்கள் அந்த நாட்டை 'தூரானியம்' என்றும் அந் நாட்டிலிருந்தவர்களை 'தூரானியர்' என்றும் சொல்லுகிறார் கள். அவர்கள் உருவத்தில் குள்ளமானவர்கள்; அகன்ற நெற்றியும், சப்பையான மூக்கும், சிறிய கண்ணும், மஞ் சள் நிறமும் உடையவர்கள். ஆரியர்கள் வருவதற்கு முந்தி யே அவர்கள் கூட்டம் கூட்டமாக இந்தியாவுக்குள் பிரவே சித்து இப்போது அஸ்ஸாம் என்றும் வங்காளம் என்றும் வழங்கிவரும் தேசங்களில் குடியேறினார்கள். திராவிடர்கள், கோலர்கள் ஆகிய இவர்களைக்காட்டிலும் மங்கோலியர்கள் பலசாலிகளாகவும், மூர்க்கர்களாகவும் இருந்தார்கள். முத லில் அவர்களோடு சண்டைசெய்து அவர்களைத் துரத்திவிட்டு அப்பால் அவர்களுடன் கலந்துகொண்டார்கள். இந்தியா விலேயே அவர்கள் வெகுகாலமாக இருந்துவந்தாலும் மற்ற வர்களோடு கலந்து பலவிதமான மாறுபாடுகளை அடைந்திருந் தாலும் அவர்களுடைய சந்ததியாரை நாம் இப்போது முகக் குறிப்பால் எளிதில் தெரிந்துகொள்ளலாம்.

## 3. ஆரியர்கள்.

ஆரியர்கள் முதலில் இன்ன இடத்தில் இருந்தவர்களெ ன்று தெரியவில்லை. ஆரியர்கள் என்ற பெயருடையவர்களே முன்பு இல்லையென்று சிலர் எண்ணுகிறார்கள். மத்திய ஆசி யாவின் மேல்பாகமாகிய துருக்கிஸ்தானத்தில் அவர்கள் முதலில் இருந்தார்களென்பது வேறு சிலருடைய அபிப்பிரா யம். இந்தியாவுக்கு வருவதற்குமுன்பு அவர்கள் கிராமங் களிலும் சிறிய நகரங்களிலும் வசித்துவந்தார்கள். ஆடுமாடு களை மேய்த்து வளர்த்து நிலத்தை உழுது கோதுமை, யவை முதலிய தானியங்களைப் பயிரிட்டார்கள். நூல் நூற்கவும், துணி நெய்யவும் அவர்களுக்குத் தெரியும். இரும்பினால் ஆயுதங்கள் செய்யும் விதம் அவர்களுக்குத் தெரியாது; ஆனால் வெண்கலத்தினால் கத்தி, வேல் முதலியவைகளைச் செய்து உபயோகித்துவந்தார்கள்.



ஆரியர்கள் தங்கள் தேசத்தை விட்டுக் கூட்டங் கூட்டமாகக் கிளம்பி ஆடுமாடுகளுடன் வேறு வேறு இடங்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். சிலர் மேற்கு நோக்கிச் சென்று

ஐரோப்பாவை அடைந்து பல புதிய பாஷைகளைக் கற்றுக் கொண்டார்கள். ஆங்கிலேயர்களும், பிரஞ்சுக்காரர்களும், ஜர்மானியர்களும் ஆரிய வகுப்பைச் சேர்ந்தவர்களே. சிலர் பாரசிகத்திலே வசித்தார்கள். பாரசீகத்துக்கு ஈரான் என்ற ஒரு பெயருண்டு. ஈரான் என்பது ஆரியன் என்ற வார்த்தையின் சிதைவு. வேறு சிலர் ஆப்கானிஸ்தானத்துக்கு வந்து அங்கே சில காலம் இருந்து கைபர் கணவாய் வழியாக இந்தியாவுக்கு வந்தார்கள். ஐரோப்பிய ஆரியர்களும், பாரசிக ஆரியர்களும், இந்திய ஆரியர்களும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்களா அல்லரா என்பதைப்பற்றி இப்போது ஒன்றும் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. அவர்கள் தங்களுக்குச் சமீபத்தில் இருந்தவர்களோடு கலியாண சம்பந்தம் வைத்துக் கொண்டிருந்தார்கள். ஆதலால் இன்னான் ஆரியனென்றும் இன்னான் ஆரியன் அல்லாதவனென்றும் எளிதில் பிரித்துச் சொல்ல முடியாது.

## இந்திய ஆரியர்கள்.

இந்தியாவுக்கு வந்தபின் ஆரியர்கள் முதலில் பஞ்சாபில் (பஞ்சநதி தீரம்) வசித்தார்கள். ஐந்துநதிகளும் அவற்றின் உபநதிகளும் அங்கே பாய்வதால் அது அப்பெயர் பெற்றது. ஆரியர்கள் அங்குவந்து குடியேறின பிறகுதான் வேதங்கள் எழுதப்பட்டன வென்று சிலர் நினைக்கிறார்கள்; உத்தரமகா சமுத்திர தீரத்தில் அவர்கள் குளிர்தேசங்களில் வசித்துவந்த போதுதான் அவை எழுதப்பட்டனவென்பது வேறு சிலருடைய அபிப்பிராயம்; உண்மை எப்படியிருந்தாலும் உலகத்தில் வேதங்களைக்காட்டிலும் பழமையான கிரந்தங்கள் வேறு இல்லையென்பது எல்லோரும் ஒப்புக்கொண்ட விஷயம். இந்துக்களுக்கு வேதத்தில் விசேஷமான பக்தியுண்டு. சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட விஷயங்கள் யாவும் வேதத்தை ஆதாரமாகக் கொண்டவை. ருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் என்று வேதங்கள் நான்கு வகைப்படும். ருக்கு வேதத்தை நன்றாகப் படித்தால் ஆரியர்களுடைய சில வரலாறுகளை நாம் நன்றாகத் தெரிந்துகொள்ளலாம். இந்துஸ்தானத்தில் ஆரியர்களுக்குச் சுவாதீனமான தேசத்துக்கு, பிரம்மவர்த்தம் என்றும் பிரம்மரிஷி தேசம் என்றும் ஆரியாவர்த்தம்



ஆரியர் சூரிய நமஸ்காரம்.

என்றும் பெயர். அது சிந்து, யமுனே, ஸாஸ்வதி முதலிய பல நதிகள் பாயும் இடம். முற்காலத்தில் ஆரியர்கள் சிந்துநதிக்கும் ஸாஸ்வதிநதிக்கும் மத்தியில் வசித்துவந்தார்கள்.

முதலில் குடியேறின ஆரியர்கள் தங்களுக்கு அச்சத்தைக் கொடுத்துவந்த பொருள்களிடத்து முதலிலும், ஆச்சரியத்தை உண்டாக்கிவந்த பொருள்களிடத்துப் பின்பும் பக்தியைச் செலுத்திவந்தார்கள். கொஞ்சகாலத்துக்குப் பிறகுதான் தங்கள் புத்தியை உபயோகித்து இன்னதைக் கண்டு வணங்கவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டார்கள். அக்கினி, இந்திரன், வருணன், யமன், சூரியன் ஆகிய இவர்களே ஆரியர்கள் ஆராதித்துவந்த தெய்வங்கள். பல தெய்வங்களை அவர்கள் தொழுதாலும் எல்லாப் பொருள்களையும் உண்டாக்கி எங்கும் நிறைந்துள்ள கடவுள் ஒருவரேயென்று

அவர்கள் பின்பு தெரிந்துகொண்டார்கள். பால், நெய், தானியம், காய்கனிகள் முதலியவற்றை அவர்கள் ஆகாரத்துக்காக உபயோகித்துவந்தார்கள். ஆடுமாடுகளைப் பரிபா



காசிமா நகரம்.

லிப்பதும் நிலத்தை உழுது பயிரிடுவதும் அவர்களுடைய முக்கியமான தொழில்; சிறிதளவு வியாபாரமும் அவர்கள் செய்துவந்தார்கள். அக்காலத்தில் நாணயங்கள் இல்லாமையால் ஆடுமாடுகளே நாணயங்களாக உபயோகப்பட்டுவந்தன. தச்சர்களும், சிற்பிகளும், தட்டார்களும், கொல்லர்களும், சேணியர்களும், சக்கிலியர்களும், வேறு தொழிலாளிகளும் அப்போது இருந்தார்கள். சங்கீதத்தில் ஆரியர்களுக்கு மிக்க பிரியமுண்டு. வேதபாராயணமும், நல்ல பாட்டும் அவர்களுக்கு மிக்க இன்பத்தை விளைவித்துவந்தன. ஏழைகளுக்குப் பொருள்கொடுத்து உதவுதல் சிறந்த புண்ணியமென்பது அவர்களுடைய கொள்கை.



## 4. இதிகாசகாலத்து ஆரியர்கள்.

வேதங்கள் எழுதப்பட்ட காலத்தில் இருந்த ஆரியர்களைப்பற்றி நமக்கு அதிகமாகத் தெரியாதென்று சொன்னோம். அவர்களுக்குப் பிற்பட்ட ஆரியர்களுக்கு 'இதிகாச ஆரியர்கள்' என்று பெயர். ராமாயணம், மஹாபாரதம்போன்ற பெரிய கிரந்தங்கள் பூர்வகாலத்திலிருந்த புருஷோத்தமர்களுடைய சரித்திரங்களைத் தெரிவிக்கும் இதிகாசங்கள். வேதங்கள் எழுதப்பட்டபிறகும் ஆரியர்கள் வடக்கிலிருந்து தங்கள் குளிர் தேசத்தை விட்டு விட்டுக் கூட்டங் கூட்டமாக இந்தியாவுக்கு வந்தார்கள். சிலர் கைபர் கணவாய் வழியாகவும், வேறு சிலர் காஷ்மீர் வழியாகவும் பிரவேசித்தார்கள். அவர்களுடைய ஜனத்தொகை அதிகரித்துவிட்டமையால் எல்லாரும் வசிப்பதற்கு இடம் பற்றவில்லை. ஆதலால் அவர்கள் பஞ்சாபுக்கும், கங்காநதிக்கரையிலும் யமுனை நதிக்கரையிலும் உள்ள சமவெளிகளுக்கும் சென்று குடியேறிப் பல ராஜ்யங்களை ஸ்தாபித்துக்கொண்டார்கள். அவர்களுள் முக்கியமானவர்கள் **கோசலர், பரதவம்சத்தார், பாஞ்சாலர், விதேகர்** ஆகிய இவர்களே.

கோசலர்கள் இருந்த தேசம் கோசலதேசமென்றும், அதன் ராஜதானி அயோத்திமாநகரம் என்றும் சொல்லப்படும். அது தசரத சக்கரவர்த்தியாலும் பிறகு ராமபிரானாலும் ஆளப்பட்டுவந்தது.

பரத வம்சத்திற் பிறந்தவர்கள் கங்கைக்கும் யமுனைக்கும் நடுவிலுள்ள நாட்டில் இருந்தார்கள். அவர்களுடைய ராஜதானி ஹஸ்தினாபுரி. அது டில்லிக்குத் தென்கிழக்கே 57 மைல் தூரத்தில் உள்ளது. பரதவம்சத்தார் ஆண்டுவந்த தேசத்துக்குத் தெற்கேயுள்ள நாட்டைப் பாஞ்சாலர்கள் ஆண்டுவந்தார்கள்.

கோசல தேசத்துக்குக் கிழக்கேயுள்ளது விதேகநாடு. அது இக்காலத்தில் பேஹார் என்று வழங்கப்படுகிறது. அந்த ஆண்டவர்களுள் மிக்க புகழ்பெற்றவர் ஜனகர்.

மேலே சொல்லிய நான்குவிதமான ஜனங்களுடைய வரலாறு ராமாயணத்திலும் மஹாபாரதத்திலும் உள்ளது.

### ராமாயணம்.

வால்மீகி மஹரிஷியால் இது ஸம்ஸ்கிருதபாஷையில் இயற்றப் பெற்றது. இந்த நூலை இந்துக்கள் ஆராதித்துவருகிறார்கள்.

தசரத சக்கரவர்த்தி என்ற ஒருவர் அயோத்தி என்னும் நகரத்தில் அரசாட்சி செய்துகொண்டுவந்தார். அவருக்கு மனைவிகள் மூவர். முதல்மனைவியாகிய கௌசல்யையின் இடமாக ராமனையும், இரண்டாம்மனைவியாகிய கைகேயியின் இடமாக பரதனையும் மூன்றாம் மனைவியாகிய சுமித்திரையின் இடமாக லக்ஷ்மணனையும், சத்துருக்கனனையும் அவர் பெற்றனர். நான்கு பிள்ளைகளிலும் ராமர் சிறந்தவர். விசுவாமித்திரர் என்னும் முனிவரிடம் அவர் வில்வித்தை பயின்றார். அதேகாலத்தில் விதேக நாட்டை ஜனகர் ஆண்டுவந்தார். அவருக்கு, சீதையென்னும் அழகிய ஒரு பெண்மணி இருந்தாள். அவரிடம் மிகவும் கனமான வில் ஒன்று உண்டு. அந்த வில்லை வளைக்கும் அரசகுமாரனுக்கு, சீதையை விவாகம்செய்து கொடுப்பதாக அவர் விளம்பரஞ் செய்தார். அதற்காக எவ்வளவோ அரசகுமாரர்கள் முயன்றும் பலிக்கவில்லை. ராமர் அந்த வில்லை முறித்தெறிந்து சீதையை விவாகம் செய்துகொண்டார்.

தசரதர் தாம் உயிரோடிருக்கும்போதே ராமருக்குப் பட்டங்கட்டி ராஜ்யாதிகாரத்தை நடத்தச் சொல்லவேண்டுமென்று ஆசைகொண்டார். அதற்காக ஒரு நாள் அவர் ஒரு மகா சபை கூட்டி எல்லாரிடத்தும் தம்முடைய அபிப்பிராயத்தை வெளியிட்டார். எல்லாரும் அதனை ஒப்புக்கொண்டார்கள். ஆனால் மந்தரையென்னும் வேலைக்காரியினுடைய துர்ப்போதனையால் கைகேயியானவள் தன் மகன் பரதனுக்கே பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்று பிடிவாதம் செய்தாள். முன்பு ஒரு காலத்தில் தசரதர் அவளுக்கு இரண்டு வரங்கள் கொடுத்திருந்தார். அவற்றை நிறைவேற்றிக்கொள்ள அதுதான் தக்கசமயம் என்று எண்ணி ராமரைக்காட்டுக்கு அனுப்பிப்பதினான்கு வருஷம் ஆனபிறகு வரச் சொல்லவேண்டுமென்றும் தன் மகன் பரதனை ராஜ்யம்



இராமர் வில்வித்தை கற்றல்.

ஆளவேண்டுமென்றும் இவைகளே தான் கேட்கும் வரங்களென்றும் தசரதரிடம் சொன்னாள். அம்மாதிரி செய்வதற்குச் சிறிதும் மனம் இல்லாவிட்டாலும் சொன்னவார்த்தையை மாற்றுவது க்ஷத்திரிய தர்மம் ஆகாததாதலால் தசரதர் அவள் வார்த்தைக்குச் சம்மதிக்கவேண்டியதாயிற்று. உடனே ராமர் மிகுந்த மகிழ்ச்சியோடு காட்டுக்குப் பிரயாணமானார். லக்ஷ்மணனும், சீதையும் அவருடன் சென்றார்கள். ராமருடைய பிரிவைத் தாங்கமுடியாமல் தசரதர் உயிர் துறந்தார்.

இந்த விஷயங்களெல்லாம் நடந்தபோது பரதன் அயோத்தியில் இல்லை. பிறகு அவனை வரவழைத்தார்கள். வந்ததும் அவன் தாயார்மேல் மிக்க கோபங்கொண்டான். பிறகு தந்தையின் உத்தரக்கிரியைகளைச் செய்து முடித்துவிட்டு ராமரைத் தேடிக்கொண்டு காட்டுக்குச் சென்று அங்கே ராமரைப்பார்த்து, தசரதருடைய மரணத்தை அறிவித்தான். ராமர் அதைக்கேட்டு மிக்க வருத்தமடைந்தார். அப்பால் அயோதிக்கு வந்து ராஜ்யம் ஆளவேண்டுமென்று பரதன் ராமரை அநேகமுறை பிரார்த்தித்தான். ராமர் அதற்கு உடன்படாமல் பரதனையே ஆளும்படி திருப்பி யனுப்பிவிட்டுக் காட்டிலேயே வசித்துவந்தார். அங்கே பல வானரர்களுடைய பழக்கம் அவருக்கு எற்பட்டது. இலங்கையில் அரக்கர்களுக்குத் தலைவனாக ராவணன் என்ற ஓர் அரக்கன் இருந்துவந்தான். அவன் மிக்க கொடியவன். சீதையை எப்படியாவது அபகரித்துக்கொண்டு போகவேண்டுமென்று எண்ணினான். அதற்காக அவன் பலவிதமான உபாயங்கள் செய்தான். ஒருமுறை தன் மாமனான மாரீசனை மான் உருவம் எடுத்துக்கொண்டு சீதைமுன்னிலையில் போகச் செய்தான். சீதை அந்த மானைப் பிடித்துத் தரச்சொல்லவே ராமர் அதைத் துரத்திக்கொண்டு சென்றனர். அந்தச் சமயம் தனியாக இருந்தமையால் சீதையைத் தன் விமானத்தில் எற்றிக்கொண்டு ராவணன் இலங்கைக்குப் போய்விட்டான். ராமரும் லக்ஷ்மணனும் பிறகு சீதையைத் தேடினார்கள். அவள் இலங்கையில் இருப்பதாகத் தெரிந்துகொண்டு பெரிய வானரசேனைகளுடன் அங்கே சென்றார்கள். சேனைகளுக்குத் தலைவனாகச் சுக்கிரீவன் இருந்தான். இலங்கையில் பெரிய யுத்தம் நடந்தது. அதில் இராவணனைக் கொன்று



இராமர், லக்ஷ்மணர், சீதை படகேறிச் சென்றது.

ராமர் சீதையை அழைத்துக்கொண்டு அயோத்தி வந்து சேர்ந்தார். பிறகு ராமருக்குப் பட்டாபிஷேகம் நடந்தது. இதுதான் ராமாயணத்தின் சுருக்கம்.

ராமரை ஓர் அவதார புருஷர் என்று இந்துக்கள் கொண்டாடி வருகிறார்கள். எல்லாருக்கும் திருப்தியுண்டாகும்படி அவர் ராஜ்யபரிபாலனஞ் செய்துவந்தார். எந்தராஜ்யத்திலாவது அரசாட்சியானது ஒழுங்காக நடந்துவந்தால் அதை ராமராஜ்யம் என்று சொல்வது வழக்கம். சீதை கற்புக்கு அரசி. அவள் சரித்திரத்தைப் படிக்கும்போது கண்ணீர் விடாதவர் இரார்; நற்குணம் வாய்ந்த கற்புள்ள ஸ்திரீயை நாம் சீதைக்கு ஒப்பிடுவதுண்டு. லக்ஷ்மணன் தன் சுகதுக்கங்களைச் சிறிதும் பாராட்டாமல் ராமருக்குப் பணிவிடை செய்வதையே பெரும்பயனாக எண்ணி அவருடன் காட்டுக்குச் சென்றான். உலகத்தில் மிக்க ஒற்றுமையுள்ள சகோதரர்களை ராமலக்ஷ்மணர்கள் என்று சொல்வார்கள். பரதன் ராமனைத் தேடிக்கொண்டு காட்டுக்குச் சென்று அவரைக் கண்டு ராஜ்யத்தை ஆளவேண்டுமென்று அவரைப் பிரார்த்திக்க அவர் அதற்கு உடன்படவில்லை. பிறகு பரதன் அவருடைய பாதுகைகளுக்கு முடிசூட்டி ராமர் ஸ்தானத்தில் தான் இருந்து அரசாட்சி செய்தான். சகோதரர்கள் நடந்துகொள்ளவேண்டிய முறையை இதனால் தெளிவாகத் தெரிந்துகொள்ளலாமல்லவா?

இராமாயணமானது பல பாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட்டு வடக்கே இமயமலை முதல் தெற்கே ராமேசுவரம் வரையிலும் பல ஜனங்களாலும் படிக்கப்பட்டு வருகிறது.

## மகாபாரதம்.

இது ராமாயணத்தைக்காட்டிலும் பெரிய புஸ்தகம். பரதவம்சத்திற் பிறந்தவர்களுக்குள் குருக்ஷேத்திரம் என்னும் இடத்தில் நடந்த சண்டையை இது தெரிவிக்கிறது. இதில் லக்ஷம் கிரந்தங்கள் உள்ளன. இதனை இயற்றியவர் வியாச பகவான். இதில் பல சரித்திரங்களும் உபாக்கியானங்களும் அடங்கியிருக்கின்றன. பரதவம்சத்திற் பிறந்த அரசர்கள் அஸ்தினாபுரத்தில் அரசாட்சி செய்துகொண்டு வந்தார்கள். அவர்களில் சந்தனு என்னும் அரசனுக்கு, திருதராஷ்டிரன்

என்றும் பாண்டு என்றும் பிள்ளைகள் இருவர். திருதராஷ்டிரன் குருடனாக இருந்தமையால் சந்தனுவுக்குப் பிறகு பாண்டுவே ராஜ்யத்தை ஆண்டுவந்தான். துரியோதனன் முதலான நூறு புத்திரர்கள் திருதராஷ்டிரனுக்குப் பிறந்தார்கள். அவர்களுக்கு, 'கௌரவர்கள்' என்று பெயர். பாண்டுவுக்கு ஐந்து புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களுக்கு 'பாண்டவர்கள்' என்று பெயர். அவர்களில் தருமபுத்திரரும், பீமசேனனும் அர்ச்சுனனும் முக்கியமானவர்கள்; குணத்திலும் வித்தையிலும் மற்ற எல்லா விஷயங்களிலும் பாண்டவர்கள் கௌரவர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்கள்; ஆதலால் பாண்டவர்களை எல்லாரும் கொண்டாடினார்கள். அதனால் துரியோதனனுக்கு அவர்களிடத்தில் வெறுப்பு உண்டாயிற்று.

பாண்டு இறந்துபோகவே திருதராஷ்டிரன் சிலகாலம் ராஜ்யபரிபாலனம் செய்துவிட்டு, தர்மபுத்திரருக்கு முடிசூட்ட எண்ணினன். துரியோதனன் அதற்குச் சம்மதிக்கவில்லை. பாண்டவர்களைக் கொல்லுவதற்கு வேண்டிய ஆலோசனைகளையே செய்துவந்தான். பாண்டவர்கள் நிலைத்திருக்க இடமில்லாமல் அங்கு மிங்கும் அலைந்து திரிந்தார்கள். அவர்கள் பிறகு பாஞ்சாலதேசத்து அரசனுடைய மகளாகிய திரௌபதியை விவாகம் செய்துகொண்டார்கள். அப்பால் யதுகுலத்தில் அவதரித்த ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய உதவியால் அவர்கள் கௌரவர்களிடமிருந்து பாதிராஜ்யத்தைப் பெற்று இந்திரப் பிரஸ்தத்தை (டில்லி) ராஜதானியாக ஏற்படுத்திக்கொண்டு அரசாட்சி செய்துவந்தார்கள். தருமபுத்திருக்குச் சொக்கட்டான் ஆடுவதில் மிக்க பிரியம் உண்டு. ஒரு முறை அவர் துரியோதனனோடு சொக்கட்டான் ஆடி ராஜ்யத்தையும் சகல செல்வங்களையும், பந்தயமாக வைத்துத் தோற்றுவிட்டனர். அப்போது பன்னிரண்டு வருஷங்கள் அவர்கள் காட்டில் வசிக்க வேண்டுமென்றும் பிறகு தங்களை ஒருவரும் தெரிந்துகொள்ளாதபடி ஒரு வருஷகாலம் அஞ்ஞாதவாசம் செய்யவேண்டுமென்றும் பதின்மூன்று வருஷகாலமும் ஆனபிறகு திரும்பிவந்து ராஜ்யத்தைப் பெற்றுக்கொள்ளலாமென்றும் எல்லோரும் முடிவு செய்துகொண்டார்கள். பதின்மூன்று வருஷங்களையும் அவ்வாறே பாண்டவர்கள்

கழித்துவந்து தங்கள் ராஜ்யத்தைக் கொடுக்கும்படி கௌரவர்களைக் கேட்டார்கள். அவ்வாறு அவர்கள் கொடாததால் குருக்ஷேத்திரம் என்னும் இடத்தில் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் 18 தினங்கள் கடுமையான யுத்தம் நடந்தது. அப்போது கண்ணபிரான் அர்ச்சுனனுடைய தேர்ப்பாகனாக இருந்துகொண்டு பாண்டவர்களுக்கு உதவி செய்து வந்தமையால் கிருஷ்ணனுக்கு, பார்த்தசாரதி என்ற பெயர் ஏற்பட்டது (பார்த்தன்-அர்ச்சுனன்; சாரதி-தேர்ப்பாகன்.) சண்டையில் துரியோதனன் முதலிய யாவரும் கொல்லப்பட்டார்கள். பிறகு ராஜ்யம் பாண்டவர்களுக்குக் கிடைத்தது. ஆனாலும் தங்கள் பந்துக்களெல்லாரும் சண்டையில் இறந்துபோனதில் பாண்டவர்கள் மிக்க வருத்தமடைந்து கடைசியில் இறந்தார்கள். இதுதான் மஹாபாரதத்திலுள்ள கதைச் சுருக்கம்.

சாவித்திரி, சகுந்தலை, நளன், தமயந்தி முதலியவர்களுடைய சரித்திரங்களும் இதில் இருக்கின்றன. சண்டைக்கு ஆரம்பிப்பதன் முன் அர்ச்சுனன் தன் பந்துக்களுடன் சண்டைசெய்ய வேண்டியிருக்கிறதேயென்று கவலைகொண்டு மயங்கிய சமயத்தில் அவனுக்குக் கண்ணபிரான் செய்த உபதேசமாகிய பகவத்கீதை யென்பது இந்தப் பாரதத்தில்தான் உள்ளது. பயனை எதிர்பாராமல் ஒவ்வொருவனும் கடமையைச் செலுத்தி வரவேண்டுமென்பதே பகவத்கீதையின் சாரம்.

இராமாயணத்தையும் பாரதத்தையும் படிப்பதால் அக்காலத்திலிருந்த ஆரியர்களுடைய நிலைமையை நாம் தெரிந்துகொள்ளலாம். அப்போது நான்கு ஜாதியார்களுக்கும் ஏற்பட்ட தொழில்கள் வெவ்வேறானவை. அரசாட்சிசெய்தல் க்ஷத்திரியனுக்குக் கடமையாக இருந்தது. குடிகள் அரசனைத் தெய்வமாகக் கருதிவந்தார்கள். நாடு நகரங்களையும், தங்கள் பொருள்களையும் திருடர்கள் கொள்ளையடிக்காமல் அரசன் பாதுகாத்து வந்ததற்கும் தங்களுடைய அபிவிருத்திக்கு வேண்டிய அனுகூலங்களைச் செய்வதோடு அங்க ஹீனர்களாகிய முடவர்களையும் குருடர்களையும் காப்பாற்றி வந்ததற்கும் அவர்கள் அவனிடம் பிரியம் பாராட்டினார்கள்.

ராஜ்ய பரிபாலன விஷயமாக அரசனுக்கு வேண்டிய புத்திமதிகள் சொல்வதற்கு ஒவ்வொரு ராஜ்யத்திலும் ஆலோசனை சபையிருந்தது. ஒவ்வொரு கிராமத்துக்கும் ஒரு தலைமையதிகாரி உண்டு. பத்துக் கிராமங்களுக்கு ஓர் அதிகாரியும் அவனுக்குமேல் இருபது கிராமங்களுக்கு வேறோர் அதிகாரியும் இருந்தார்கள். இவர்களுக்குமேல் நூறு கிராமங்களுக்கு ஒரு தலைமையதிகாரியிருந்தான். நிலத்துக்குத் தீர்வையும் வியாபாரத்துக்கு வரியும் அரசர்களால் விதிக்கப்பட்டன.

ஸ்திரீகளுக்கு மிக்க கௌரவம் உண்டு. அவர்களில் அநேகர் படித்திருந்தார்கள். உதாரணமாக, திரௌபதியைச் சொல்லலாம். அரசர்கள் பல ஸ்திரீகளைக் கலியாணம் செய்து கொண்டார்கள்.

பொதுவாகச் சொல்லுமிடத்து அக்காலத்தில் ஜனங்கள் யோக்கியர்களாகவும் உண்மை தவறாதவர்களாகவும் இருந்தார்களென்று தெரிகிறது.



## 5. புத்தர் என்று பெயர்பெற்ற கௌதமர்.

(கி. மு. 557–477.)

இராமாயணத்திலும் மகாபாரதத்திலும் கூறப்பட்ட விஷயங்கள் நடந்தபிறகு வட இந்தியாவில் பல மாறுபாடுகள் உண்டாயின. ஆரியர்கள் திராவிடர்களோடும், கோலர்களோடும், தூரானியர்களோடும் கலந்துகொண்டபிறகு பல இந்திய ஜாதிகள் ஏற்பட்டன. ஆரியர்களுடைய பாஷையிலும் பல மாறுபாடுகள் உண்டாயின. பிராமணர்களும், க்ஷத்திரியர்களும், வைசியர்களும் ஸம்ஸ்கிருதத்தை எழுதவும் படிக்கவும் கற்றுக்கொண்டார்கள். அக்காலத்திய புஸ்தகங்கள் ஸம்ஸ்கிருதத்திலேயே எழுதப்பட்டன. ஜனங்கள் ஸம்ஸ்கிருதத்தின் சிதைவாகிய பிராகிருதத்தைப் பேசிவந்தார்கள். சில புதிய ராஜ்யங்கள் தோன்றி மேன்மையடைந்தன. அவற்றுள் முக்கியமானது மகதராஜ்யம். அது கங்கைக்கரையிலுள்ளது. அதன் ராஜதானி பாடலிபுத்திரம் (Patna). அதில் சைசுநாகவம்சத்து அரசர்கள் ஆண்டுவந்தார்கள்.

அவர்களுள் பிம்பசாரன் என்னும் அரசனுடைய காலத்தில் ஒரு மகா புருஷர் தோன்றினர். அவருக்குக் கௌதமர் என்று பெயர்.

சற்றேறக்குறைய 2500 வருஷங்களுக்கு முன்பு சுத்தோதனனென்னும் க்ஷத்திரியன் ஒருவன் இருந்தான். அவன் சாக்கியர் என்னும் ஜாதியாருக்குத் தலைவன். காசிக்கு நூறு மைல் வடக்கே ரோகிணி நதிக்கரையில் உள்ள கபிலவாஸ்து என்பது அவனுடைய ராஜதானியாக இருந்தது. அவன் மிக்க தைரியமுள்ள போர்வீரன். அவனுக்கு, கௌதமர் என்ற புத்திரர் பிறந்தார். அவ்வரசன் அவரை ஒரு சிறந்த போர்வீரராகச் செய்யக் கருதி அவருக்கு வில் வித்தை வாள்வித்தை முதலியவற்றைக் கற்றுக்கொடுத்தான்.

கௌதமர் பார்வைக்கு அழகாக இருந்தமையால் அவருடைய பிதாவும், மற்ற க்ஷத்திரிய ஜனங்களும் அவரை மிகவும் நேசித்து வந்தார்கள். பிறகு அவருக்கு யசோதரை என்னும் கன்னிகையை விவாகம் செய்வித்தார்கள். அப்பால் கௌதமர் யசோதரையிடம் அன்பு பூண்டு சுகானுபவத்திலேயே சில காலம் கழித்துவந்தார். அவர் மிக்க முன்யோசனையுள்ளவர்; இனிய குணமும், இரக்கமுள்ள மனமும் அமைந்தவர். அடிக்கடி அவர் வேட்டையாடப்போவதுண்டு. ஆனல் பல சமயங்களில் புல்லை மேய்ந்துகொண்டு சுகமாகத் திரியும் மானின்மேல் அம்பைத்தொடுக்க யத்தனிக்கையில் "என் நாம் இந்தப் பிராணியைக் கொல்லவேண்



புத்தர்.

டும்?” என்று மனமிரங்கி அம்பை எய்யாமல் அவர் போய் விடுவார். குதிரை ஸவாரிசெய்யும்பொழுது அது களைப் படைந்து பெருமூச்சு விடுவதை நோக்கி அதைச் சும்மா விட்டுவிட்டு நடந்து செல்லுவார். முக்கியமாக, பிராணிகளுக்கு வருத்தம் உண்டாகக்கூடாதென்பது அவருடைய நோக்கம்.

வசந்தகாலத்தில் ஒருநாள் காலையில் தோட்டங்களைச் சுற்றிப்பார்த்து வரலாமென்று சுத்தோதனன் அவருக்குச் சொல்லியனுப்பினான். அவர் ஒரு குதிரைமேல் ஏறிக்கொண்டு சோலைகளையும், கிணறுகளையும், பசும்புல் தரைகளையும், நெல்வயல்களையும், கனிகள் நிறைந்த மரங்களையும் கண்டு களித்தார். ஆனால் வழியில் ஒரு குடியானவன் மிகவும் மெலிந்த எருதொன்றைத் தடியால் அடித்துத் துரத்தியதையும், புறாவொன்றை ஒரு பருந்து தின்னும்பொருட்டுத் துரத்திக் கொண்டு சென்றதையும், எறும்புகளை ஒரு புறா பொறுக்கித் தின்றதையும் கண்டு அவர் சகிக்கமுடியாத வருத்தத்தை அடைந்தார்.

சில தினங்களுக்குப் பிறகு அவர் ஒரு கனவுகண்டார். அக்கனவில் அவருக்கு முன்னே மிகவும் மெலிந்த ஒரு கிழவன் தோன்றி, “நீயும் என்னைப்போலவே தளர்ந்து மூப்பை அடைவதற்கு உரியை” என்றும் வேறொருமுறை அவருடைய கனவில் ஒரு நோயாளி தோன்றி “நீயும் என்னைப்போல் பிணியுறுவாய்” என்றும் மற்றொருமுறை அவருக்கு முன்னே பிணவடிவங்கொண்ட ஒருவன் தோன்றி “நீயும் என்னைப்போல் இறத்தற்கு உரியை” என்றும் சொன்னார்கள். இவற்றால் அவர் மனம் வேறுபட்டது. அவருக்கு அப்போது பிராயம் 20. பிறகு அவர் எல்லாவற்றையும் துறந்துசெல்ல எண்ணி, தம்முடைய பிதாவையும், மனைவியையும், குழந்தையையும் விட்டுப் பிரிந்து ஆடையாபரணங்களையெல்லாம் களைந்தெறிந்து ஒரு துறவிவேடம் பூண்டு காட்டுக்குச் சென்றார். பல வருஷகாலம் சரியான ஊண் உறக்கமின்றி, துக்க நிவாரணத்துக்கு உரிய மார்க்கத்தைத் தேடுவதிலேயே கவனத்தைச் செலுத்திவந்தார். பிறகு துறவறத்தின் பயனை நன்றாக அறிந்து ஓர் அரசமரத்தின் (போதிவிருக்ஷத்தின்) அடியில் இருந்துகொண்டு தியானம் செய்தனர்.



அஜந்தாவிலுள்ள பௌத்த பிக்ஷுக்களின் குகை.

சில தினங்களுக்குப் பிறகு அவருக்கு அறிவு முதிர்ச்சி உண்டாயிற்று. ஜீவகாருண்யமும், நிராசையும், திருப்தியும், பிற உயிர்களை வருத்தாமையும், பாவம் செய்யாமையுமே பேரின்பத்திற்குரிய மார்க்கங்கள் என்று அவர் கண்டுகொண்டார்.

அப்பால் அவர் காட்டைவிட்டு நாட்டுக்குச் சென்று பல ஜனங்கள் முன்னிலையில் தம்முடைய புதிய சித்தாந்தங்களை எடுத்துக் கூறினர். பிறகு அவருக்கு, கௌதம புத்தர் என்றும் அவரால் ஏற்படுத்தப்பட்ட மதத்திற்கு பௌத்தமதம் என்றும் பெயர்களுண்டாயின. பௌத்தமதம் என்பது இந்துமதத்தின் ஒரு பிரிவேயன்றி ஒரு புதிய மதமன்று. கௌதம புத்தருடைய பிதாவும், அவர் மனைவியும் அவருடைய புத்திரனும் அவருடைய உபதேச மொழிகளைக்கேட்டு அந்த மதத்தைச் சார்ந்தார்கள். இவ்வாறு அவருடைய காலத்தில் பௌத்தர்களானவர்கள் பலர்.

உலகத்தில் தோன்றிய புண்ணிய புருஷர்களுள் புத்தர் ஒருவர்; பிற உயிர்களுக்கு நன்மைசெய்வது மனிதனுடைய கடமையென்றும், அவைகளை வருத்துவது பாவமென்றும்,

தெய்வத்தினுடைய கண்ணுக்கு எல்லா உயிர்களும் சமான மானவைகள் என்றும் அவர் உபதேசித்தார். அவருடைய காலத்தில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் புத்தமதத்தைத் தழுவிவந்தார்கள். இந்தியாவில் பௌத்தமதம் அவருடைய காலத்துக்குப்பிறகு ஆயிரவருஷம் வரையில் பிரபலமாக இருந்தது.

### வர்த்தமான மகாவீரன்: ஜைனர்கள்.

இந்நாட்டில் இக்காலத்தில் பௌத்தர்களை அல்லாமல் சில ஜைனர்களும் இருக்கிறார்கள். ஜைன மதத்தைத் தழுவினவர்கள் ஜைனர்கள். இந்த மதம் வர்த்தமானன் என்பவனால் ஏற்படுத்தப்பட்டது. அவன் புத்தருடைய காலத்தில் இருந்தவன். பாடலிபுத்திரத்துக்கு 27 மைல் தூரத்திலுள்ள வைசாலி என்னுமிடத்தில் அவனுடைய பிதா இருந்துவந்தான். பல வருஷங்கள் இல்லறத்தை நடத்திவிட்டு அவன் துறவறம் பூண்டான். வட இந்தியா முழுவதும் ஒரு புதிய மதத்தைப்பற்றி அவன் பிரசங்கம் புரிந்துவந்தான். அவனுடைய பிரசங்கங்களைக் கேட்டுப் பல ஜனங்கள் அவனுடைய சிஷ்யர்களானார்கள். அவர்கள் அவனை மகாவீரனென்று அழைத்தார்கள். ஜைனமதமும் பௌத்தமதமும் சில கொள்கைகளில் ஒத்திருந்தன. அஹிம்ஸையே சிறந்த தருமம் என்பது இரண்டு மதங்களுக்கும் பொதுவான கொள்கை. ஜைனர்களுக்குள் சன்னியாசிகள் உண்டு. ஜாதி வித்தியாசமும் உண்டு. அவர்களுக்கு வேதங்கள் பிரமாணங்கள் அல்ல. அவர்கள் கைக்கொண்ட முக்கியமான தருமங்கள் மூன்று; அவையாவன:—(1) ஒவ்வொன்றையும் நன்றாக ஆராய்தல் (2) ஆராய்ந்தபிறகு நன்றாக அறிதல் (3) அறிந்தபிறகு நடத்திக்காட்டல்.

பௌத்தர்களுக்குள்ள ஐந்து முக்கியமான கொள்கைகள் ஜைனர்களுக்குமுண்டு. அவைகளாவன:—1. பொய் சொல்லாமை, 2. திருடாமை, 3. அவா அறுத்தல், 4. திரிகாண சுத்தி, 5. கொல்லாமை.

எறும்பு, ஈ, கொசு முதலிய சிறிய ஜந்துக்கள் இறந்து போமே என்று எண்ணி ஜைனர்கள் இரவில் தீபம் ஏற்றுவதில்லை. பம்பாயிலும், ராஜபுதனத்திலும், செல்வவான்க

ளான பல ஜைனவியாபாரிகள் இப்பொழுது இருக்கிறார்கள். ராஜபுதனத்திலுள்ள ஆபூமலையிலும், சூடிய நாகபுரியிலுள்ள பர்ஸாநாத்திலும் பிரசித்திபெற்ற ஜைன ஆலயங்கள் உண்டு.



# 6. இந்தியாவுக்குள் அன்னியர்களுடைய படையெடுப்பு.

## (1) பாரசீகர்களின் படையெடுப்பு.

புத்தருடைய காலத்துக்கு முன்பு சில ஆரியர்கள் பாரசிகம் சென்று அங்கே குடியேறினார்களென்று சொன்னோம். கி–மு. 521 முதல் கி–மு. 485 வரையில் டேரையஸ் என்னும் அரசன் பாரசிகத்தை ஆண்டுவந்தான். முதலில் மத்திய ஆசியாவை ஜயித்துவிட்டு அவன் தன் ராஜ்யத்தை விருத்தியாக்கும்பொருட்டு அப்பால் பஞ்சாபை நோக்கிப் படையெடுத்துச் சென்றான். அப்போது அவனுடைய சேனாதிபதியான ஸைலாக்ஸ் என்பவன் ஒரு கப்பற்படையுடன் சிந்துநதி வழியாக அரபிக்கடலுக்கு வந்து யுத்தம்செய்து அங்கிருந்து பாரசிகத்துக்குத் திரும்பிப்போனான். சிந்துநதி தீரமெல்லாம் சிலகாலம் டேரையஸ்ஸினுடைய ஆட்சிக்கு உட்பட்டிருந்தனவென்றும், அக்காலத்தில் பஞ்சாப் மாகாணமானது செல்வம் நிறைந்திருந்ததென்றும், ஜனநெருக்கமாக இருந்ததென்றும், வருஷந்தோறும் அரசனுக்கு அது 150 கோடி ரூபாய் வரும்படி கொடுத்துவந்ததென்றும் சரித்திரத்தால் தெரிகிறது. பாரசிகர்களுடைய ஆளுகைக்குள் பஞ்சாபானது இத்தனை வருஷகாலம் இருந்ததென்று தெரியவில்லை. ஆனால் இருநூறு வருஷங்களுக்குப்பிறகு வந்த கிரேக்கர்களுடைய சரித்திரத்தால் அது பாரசிக அரசர்களால் ஆளப்படவில்லையென்றும் இந்துக்களாலேயே ஆளப்பட்டு வந்ததென்றும் தெரிகிறது.

## (2) கிரேக்கர்களுடைய படையெடுப்பு.

கிரேக்கர்களுடைய தேசமான கிரீஸ் ஐரோப்பாவில் உள்ளது. கிரேக்கர்கள் ஆரியர்களைச் சேர்ந்தவர்கள். முற்காலத்தில் அவர்கள் சிறந்த கல்விமான்களாகவும், பெருத்த செல்

வவான்களாகவும் நாகரிகத்தில் மேன்மையுற்றவர்களாகவும் இருந்தார்கள். அக்காலத்தில் மகா அலெக்சாந்தரென்னும் அரசர் கிரீஸை ஆண்டுவந்தார். அவர் சிம்மாசனமேறிய பிறகு பல தேசங்களையும் ஜயித்துத் தமது ராஜ்யத்தை விருத்தியாக்க எண்ணினார். அதற்காக அவர் பெருத்த சேனைகளுடன் சிறிய ஆசியாவையும் (Asia-Minor) துருக்கியையும், ஆப்கானிஸ்தானத்தையும் கடந்து பஞ்சாபிற்கு வந்தார். இந்தியாமீது முதல் முதல் படையெடுத்துவந்த ஐரோப்பியர் அவரே. பஞ்சாபில் இருந்த பல அரசர்களும் அவருக்கு அடங்கிவிட்டார்கள். ஆனால் ஜீலம்நதிக்கும், சேனாப்நதிக்கும் மத்தியிலுள்ள நாட்டை ஆண்டுவந்த புருஷோத்தமர் என்னும் க்ஷத்திரியர் அவருக்கு அடங்காமல் அவரைத் துரத்த முயன்றார். அந்த க்ஷத்திரியருக்கு 'போரஸ்' என்றும் பெயருண்டு. ஜீலம் நதிக்கரையில் இருதிறத்தாருக்கும் சண்டை நடந்தது. கிரேக்கர்கள் பல தந்திரங்கள் செய்தார்கள். முடிவில் போரஸ்ஸினுடைய சேனைகள் தோல்வியடைந்தன. போரஸ் மிகுந்த தைரியத்தோடு போர்புரிந்ததைக் கண்ட அலெக்சாந்தர் அவரை மிகவும் மெச்சி "உம்மை நான் எவ்வாறு நடத்தவேண்டும்?" என்று கேட்டபோது அவர் "அரசனை நடத்துவதுபோல் என்னை நடத்தவேண்டும்" என்று தைரியத்தோடு பதில் உரைத்தார். அந்த உத்தரத்தைக்கேட்டு அலெக்சாந்தர் மிகவும் சந்தோஷித்து அவருக்கு மிக்க மரியாதையோடு பழையபடி ராஜ்யத்தைக் கொடுத்து அவருடன் சிநேகமாக இருந்தார்.

மகததேசமானது அந்தக் காலத்திலேதான் மேன்மை பெற்றிருந்தது. சந்திரகுப்தன் என்னும் அரசன் மகதநாட்டின்மீது படையெடுத்து வரும்படி அலெக்சாந்தரை வேண்டிக்கொண்டானென்று ஒரு கதை வழங்கிவருகிறது. பிறகு அலெக்சாந்தர் பல சேனைவீரர்களை அழைத்துக்கொண்டு பஞ்சாபிலுள்ள ஸெட்லஜ் நதிவரையில் சென்றார். அப்போது அவருடைய போர்வீரர்கள் தங்கள் மனைவி மக்களையும் வீடுவாசலையும் விட்டுவந்து வெகு காலமாய்விட்டமையால் தங்கள் சொந்த தேசம் போகவேண்டுமென்று சொன்னார்கள். அலெக்சாந்தர் என்னசொல்லியும் கேளாமல் திரும்பி ஊருக்குப் போவதி லேயே அவர்கள் நோக்கமாக இருந்தார்கள். ஆதலால

அவர் மிக்க வருத்தத்துடன் மகதநாட்டை விட்டுத் திரும்பவேண்டியதாயிற்று. ஜீலம் நதிக்கும் ஸெட்லஜ் நதிக்கும் நடுவிலிருந்த நாட்டை அலெக்சாந்தர் தக்ஷசில அரசனிடம் கொடுத்துவிட்டுச் சிந்து நதிக்கரை வழியாகப் பிரயாணஞ்செய்து வழியில் பல நகரங்களை உண்டாக்கி, பாடலி நகரத்தை யடைந்து அங்கிருந்து தம்முடைய ஜன்மதேசம் போய்ச் சேர்ந்தார். பல போர்வீரர்கள் வழியில் மாண்டார்கள். தாங்கள் கொள்ளையடித்த பொருளை எடுத்துவர முடியாமல் சில வீரர்கள் வழியிலேயே விட்டுவிட்டனர். அடுத்த வருஷமாகிய கி-மு. 323-இல் அலெக்சாந்தர் இறந்தார்.

அவர் இறந்தபிறகு ராஜ்யத்தை அவருடைய சேனைத் தலைவர்கள் பங்கிட்டுக்கொண்டார்கள். ஸெலூகஸ் என்ற சேனாதிபதிக்கு, பாக்ட்ரியா என்ற இடம் கிடைத்தது. அவன் அதற்கு அரசனாக இருந்துவந்தான். அங்கிருந்துதான் கிரேக்கர்கள் இந்தியாவின்மேல் படையெடுத்து வருவது வழக்கம்.



## 7. மகத ராஜ்யம்.

### சந்திரகுப்தன்.

ஆதிகாலத்தில் மிகவும் பிரசித்திபெற்றிருந்த ராஜ்யங்களுள் மகதராஜ்யம் ஒன்று. அது கங்கை மைதானத்தில் வெகுதூரம் பரவியிருந்தது. அதன் ராஜதானி பாடலிபுத்திரம். சைசுநாக வம்சத்து அரசர்கள் அங்கே கி-மு. 500 முதல் கி-மு. 360 வரையில் அரசாட்சி செய்தார்கள். அவர்கள் நாகங்களைப் பூசித்து வந்திருக்கவேண்டுமென்று தெரிகிறது. அந்த வம்சத்தைச்சேர்ந்த பிம்பசாரன் என்பவன் மகத ராஜ்யத்தைக் கி-மு. 515-இல் பலமாக ஸ்தாபித்தான். அவனுடைய காலத்திலேதான் கௌதம புத்தரும் மகாவீரனும் தங்கள் தங்கள் மதக் கொள்கைகளை உபதேசிக்க ஆரம்பித்தார்கள். அவனுக்குப் பிறகு பட்டத்துக்குவந்தவன் அஜாதசத்துரு என்பவன்; அவனுடைய காலத்தில் பௌத்த மதமும் ஜைன மதமும் பிரபலமாக இருந்தன.

சைசுநாகர்களுக்குப் பிறகு நந்தர்கள் என்ற சிலசூத்திரர்கள் கி—மு. 371 முதல் கி-மு. 270 வரையில் நூறுவருஷ காலம் மகத தேசத்தை ஆண்டுவந்தார்கள். அலெக்சாந்தர் இந்தியாவின்மேல் படையெடுத்துவந்தது அவர்களுடைய காலத்திலேதான். நந்தர்களில் ஒருவன் தன்னைக் கொல்ல யத்தனித்தபோதுதான் அலெக்சாந்தருடைய உதவியைச் சந்திரகுப்தன் நாடினன் என்று கிரேக்கர்களுடைய சரித்திரத்தால் தெரிகிறது.

பஞ்சாபிலும் ஆப்கானிஸ்தானத்திலும் உள்ள சிறந்த வீரர்களைத் தன்னுடன் சேர்த்துக்கொண்டு சந்திரகுப்தன் கிரேக்கர்களைக் காலக்கிரமத்தில் துரத்தி ஒரு புதிய ராஜ்யத்தை ஸ்தாபித்துக்கொண்டான். பிறகு அவன் தன் சேனைகளை மகத நாட்டிற்குக் கிழக்கே செலுத்திக்கொண்டுபோய், சாணக்கியர் என்னும் ஒரு பிராமணருடைய உதவியால் அந்த இடத்தை வசப்படுத்திக்கொண்டான். அவனுடைய தாயாருக்கு மியூரா என்று பெயர்; அதனால் அவனுக்கும் அவனுடைய பின்னோர்களுக்கும் மாரிய வம்சத்தார்கள் என்ற பெயர் வழங்கலாயிற்று.

மாரியர்கள் கி—மு. 321 முதல் கி—மு. 184 வரையில் பாடலிபுத்திரத்தில் இருந்துகொண்டு அரசாட்சி செய்தார்கள். சந்திரகுப்தனுடைய காலத்தில் மகத ராஜ்யம் செழிப்புற்றிருந்தது. அவனிடத்தில் 60,000 காலாட்படையும், 30,000 குதிரைப்படையும், 9,000 யானைப்படையும் இருந்தன. அவ்வளவு பெரிய சேனையின் பலத்தினலேதான் அவன் வட இந்தியா முழுவதையும் அடக்கி ஒரு பெரிய ராஜ்யத்தை ஸ்தாபித்தான். பாக்ட்ரியா அரசனுகிய ஸெலூகஸ் என்பவன் பிறகு இந்தியாவின்மேல் படையெடுத்து வந்தபோது சந்தரகுப்தனுல் துரத்தப்பட்டான். அப்போது அவன் சந்திரகுப்தனேடு உடன்படிக்கை செய்துகொண்டு தன் மகளை அவனுக்கு விவாகம் செய்துகொடுத்து அவனிடமிருந்து 500 யானைகளைப் பரிசாகப் பெற்றான். சந்திரகுப்தனுடைய காலத்தில் மெகஸ்தனிஸ் என்னும் கிரேக்கிய தூதன் ஒருவன் மகததேசத்துக்கு வந்தான். சந்திரகுப்தனுல் அவன் மிகவும் உபசரிக்கப்பட்டான்.

இந்தியாவில் தான் கண்டறிந்த விஷயங்களை யெல்லாம் சிறந்த கல்விமானுன அவன் எழுதி வைத்தான். அதனாலே தான் நம்முடைய தேசத்தின் பழைய சரித்திரத்தை நாம் தெளிவாகத் தெரிந்துகொள்ளுகிறோம்.

அந்தக்காலத்தில் பாடலிபுத்திரம் 9 மைல் நீளமும் $1\frac{1}{2}$ மைல் அகலமும் பரவியிருந்ததென்றும், அதைச்சுற்றி ஒரு பலமான மரச்சுவரும், அகழியும் இருந்தன என்றும், அதற்கு 64 வாயில்கள் உண்டென்றும், கோட்டைக்குள் ஓர் அழகிய தோட்டத்தின் நடுவில் அரண்மனை அமைந்திருந்ததென்றும், அந்த அரண்மனையின் அழகு வர்ணனையில் அடங்காதென்றும், வைரங்கள் இழைத்த ஒரு தங்கப்பல்லக்கில் இருந்துகொண்டு அரசன் வெளியில் போய்வருவது வழக்கமென்றும், அரண்மனையில் விலையுயர்ந்த ஆடையாபரணங்களும் பாத்திரங்களும் இருந்தன என்றும் மேற்கூறிய தூதன் எழுதியிருக்கும் புஸ்தகத்தால் நமக்குத் தெரியவருகின்றன.

இப்போது நகர பரிபாலனத்தை ஒரு சபையார் நடத்திவருவதுபோல் அக்காலத்தில் பஞ்சாயத்தார் நடத்திவந்தார்கள். ஒவ்வொரு நகரத்தின் பரிபாலன சபைக்கும் 30 பேர்கள் அங்கத்தினராக இருந்தார்கள். அந்தச் சபையானது அவ்வைந்துபேர்கள் அடங்கிய ஆறு உட்சபைகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. முதற் சபையார் தொழிலாளிகளுடையவேலைகளையும், இரண்டாம் சபையார் நகரத்திற்குவந்த அயலார்களுடைய வசதிகளையும், மூன்றும் சபையார் ஜனத்தொகையையும் ஜனங்களிடமிருந்து வரிவாங்குதலையும், நான்காம் சபையார் வியாபாரத்தையும் அதற்கு உபயோகமான நிறைகள் அளவைகள் முதலியவற்றையும், ஐந்தாம் சபையார் வஸ்திரங்கள் நெய்தலின் மேற்பார்வையையும், ஆறும் சபையார் சட்டதிட்டங்கள் ஏற்படுத்தலையும் வரி விதித்தலையும் முறையே கவனித்துவந்து நகர பரிபாலனத்தை மிகச் செவ்வையாக நடத்திவந்தார்கள்.

இதேமாதிரி கிராம பரிபாலனமும் பஞ்சாயத்தார்களாலேயே நடத்தப்பட்டு வந்தது. நிலத்தை அளத்தலும், சாகுபடிக்கு வேண்டிய தண்ணீர் விடுதலும், சாலைகள் ஏற்படுத்து

வதும் மைல் கல்களை நடுதலும், வழிப்போக்ர்களின் சௌகரியத்திற்காகக் கைகாட்டி மரங்களை அமைத்தலும் அவர்களுக்கு உரிய வேலைகள். ஏழைகளுடைய சௌகரியத்தைக் கெடுத்து, செல்வவான்கள்மட்டும் வேண்டிய அளவு தங்கள் நிலங்களுக்கு ஜலத்தைப் பாய்ச்சிக்கொள்ளாமலும் அவர்கள் பார்த்துவந்தார்கள். காடுகள் அழிந்துபோகாமல் கவனித்துக் கொள்ள ஒரு சபை தனியே இருந்தது.

புருஷர்கள் யோக்கியர்களாகவும், தைரியசாலிகளாகவும் இருந்தார்கள். ஸ்திரீகளிடத்தில் நற்குணங்களெல்லாம் குடிகொண்டிருந்தன. அந்தக்காலத்தில் திருடர்களும் இல்லை; அடிமைகளுமில்லை. ஜனங்களுக்குள் நம்பிக்கை மோசமே கிடையாது. இந்தக் காரணங்களால் ஜனங்கள் சிறிதும் பயமில்லாமல் இருந்தார்கள். அரசன் தன் பிரதிநிதிகளை மாகாணங்களுக்கு அனுப்பி, தன் ஸ்தானத்திலிருந்து அரசாட்சி புரியும்படி செய்துவந்தான். குடிகள் மிகவும் திருப்தியாக இருந்தார்கள். இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பு நம்முடைய தேசமானது சிறந்த நாகரிகம் அடைந்திருந்த தென்பதைப் படிக்கும்போது நமக்கு மிகவும் சந்தோஷமாக இருக்கிறது. மெகெஸ்தனிஸ் "அரசர்கள் ஒருவரோடொருவர் சண்டை போட்டுக்கொண்டாலும் ஜனங்கள் சுகக்குறைவில்லாமலே இருந்தார்கள். யுத்தகளத்துக்கு அருகிலேயே குடியானவர்கள் யாதொரு கவலையும் பயமும் இல்லாமல் வழக்கப்படி நிலங்களை உழுது பயிரிட்டுவந்தார்கள். யுத்த வீரர்கள் அவர்கள் வழிக்குப் போவதில்லை. எந்த நாடும் பகை அரசனால் கொளுத்தப்படவில்லை. பழங்களைக் கொடுக்கும் விருட்சங்கள் அழிக்கப்படவில்லை. ஜனங்களை யுத்த வீரர்கள் மரியாதையாகவே நடத்திவந்தார்கள்" என்று எழுதியிருக்கிறார்.

மகா சக்கரவர்த்தியாகிய சந்திரகுப்தன் கி-மு. 279-இல் இறந்துபோக அவனுடைய குமாரனான பிந்துசாரன் என்பவன் பட்டத்துக்கு வந்தான். அவன் காலத்தில் வந்த கிரேக்கிய தூதர்கள் பலர் அவனால் மிகவும் ஆதரிக்கப்பட்டனர். அவர்கள் அந்தக்காலத்திய சரித்திரங்களை விவரமாக எழுதியிருக்கிறார்கள். அவை மிகவும் உபயோகமானவை. பிந்து

சாரனுடைய காலத்திலேதான் தக்ஷிண தேசம் அவன் ராஜ்யத்தோடு சேர்க்கப்பட்டது. அவன் 25 வருஷம் அரசாட்சி செய்துவிட்டு, கி-மு. 254-இல் இறந்துபோனன்.

## 8. மகத ராஜ்யம்.

### அசோகன்.

பிந்துசாரனுக்குப் பிறகு மகத தேசத்தை ஆண்டவன் அசோகன். அவன் சந்திரகுப்தனுடைய பௌத்திரன். உலகத்தில் மிக்க புகழ்பெற்ற அரசர்களில் அவன் ஒருவன். தன் பிதாவின்காலத்தில் அவனுடைய பிரதிநிதியாக இருந்து பல மாகாணங்களை ஆண்டுவந்தான். ஆப்கானிஸ்தானம் அம்மாகாணங்களுள் ஒன்று. காஷ்மீரதேசமும் பஞ்சாபும் அக்காலத்தில் ஆப்கானிஸ்தானத்தோடு சேர்ந்திருந்தன. ராவல்பிண்டிக்கு அருகில் உள்ள தக்ஷசீலம் என்பது ராஜதானியாக இருந்தது. அவ்விடத்தில் ஒரு கல்விச்சங்கம் மிகவும் செவ்வையாக நடைபெற்றது. தேசத்தின் பல மாகாணங்களிலிருந்தும் மாணக்கர்கள் அதற்கு வந்து போவதுண்டு. அசோகன் அங்கே சில வருஷம் ராஜப்பிரதிநிதியாக இருந்து பிறகு சிந்துதேசத்திலும், ராஜபுதனத்திலும், கூர்ஜரத்திலும் ராஜப்பிரதிநிதியானன். உச்சயினி நகரம் அவனுடைய வாசஸ்தானம். ஹிந்துக்கள் கொண்டாடும் எழு முக்கிய ஸ்தலங்களில் அது ஒன்று. கணிதநூலிற் பிரசித்திபெற்ற பலர் அங்கே இருந்தார்கள்.

அசோகன் 40 வருஷகாலம் பாடலி புத்திரத்திலிருந்து செங்கோல் செலுத்திவந்தான். இளமை முதற்கொண்டே யுத்தம் செய்வதில் அவனுக்குப் பிரியமுண்டு. அதனாலும் தன் ராஜ்யத்தை விருத்திசெய்ய வேண்டுமென்ற எண்ணத்தினலும் ஒரிஸ்ஸா என்று இப்போது வழங்குகிற கலிங்கதேசத்தை அவன் தன் ஆட்சிக்குக் கொண்டுவந்தான். அதை வசப்படுத்துவதற்கு மூன்று வருஷகாலம் கடுமையாக அவன் போர்புரிய வேண்டியிருந்தது. அந்த யுத்தத்தில் போர்வீரர்கள் ஆயிரக்கணக்காக மாண்டுபோனதைக் கண்டு உயிர்க

ளிடத்து மிக்க இரக்கமுள்ளவனுகி அதுமுதல் யுத்தஞ்செய்வதில்லையென்று பிரதிக்ஞை செய்துகொண்டு பௌத்தமதக் கோட்பாடுகளை மேற்கொள்ளலானுன். அசோகனுடைய ராஜ்யமானது சந்திரகுப்தனுடைய ராஜ்யத்தைக்காட்டிலும் விஸ்தாரமாக இருந்தது; வடமேற்கில் இந்துகுஷ்மலைவரையிலும் பரவியிருந்தது. நேபாளதேசமும் காஷ்மீரமும் அவனுடைய ராஜ்யத்தில் முக்கியமான பிரிவுகள். காஷ்மீரத்துக்கு ஸ்ரீநகரத்தை ராஜதானியாக ஆக்கியவன் அசோக சக்கரவர்த்தியே. அவனுடைய அரசாட்சியானது கோதாவரிக்கும் கிருஷ்ணுவுக்கும் மத்தியிலுள்ள தேசம்வரையில் பரவியிருந்தது. பாலாறுவரையில் பரவி இருந்ததென்றும் சிலர் சொல்லுவதுண்டு.

அவனுடைய ராஜ்யத்தில் மிகவும் பெரிய பட்டணங்கள் இருந்தன. அவைகள் தேவதைகளால் சிருஷ்டிக்கப்பட்டவைகள் என்று நினைக்கவேண்டுமே யல்லாமல் மனிதர்களால் உண்டாக்கப்பட்டனவென்று நினைக்க இடமில்லை. பல பெரிய கட்டிடங்கள் அசோகனுல் கட்டப்பட்டன. அவற்றுள் முக்கியமானவை சாம்பியிலுள்ள மண்டபங்களும், புத்தகயையிலுள்ள ஆலயமும்.

அவன் ராஜ்யம்முழுவதிலும் பல கல் ஸ்தம்பங்களை நாட்டி அவற்றில்பல பௌத்தமதக் கோட்பாடுகளை எழுதுவித்தான். அவற்றை நாம் இன்றைக்கும் படித்துப் பார்க்கலாம். சில ஸ்தம்பங்கள் ஐம்பது அடிவரையில் உயர்ந்துள்ளன. மிகவும் புராதனமான ஸ்தம்பமொன்று இப்பொழுதும் அல்லகாபாத்தில் இருக்கிறது. கி—மு. 250-இல் அவன் அக்கோட்பாடுகளை வெளியிட ஆரம்பித்தான். அவை கற்களிலும், குகைகளின் வெளிப்புறங்களிலும் பிராகிருதபாஷையில் வெட்டப்பட்டுள்ளன. அவற்றைப் படித்துப் பார்த்து அக்காலத்தில் நடந்த விஷயங்கள் சிலவற்றைத் தெரிந்துகொள்ளலாம். அவனுடைய முக்கியமான கொள்கைகளாவன:— (1) கொல்லாமை, (2) பெற்றோர்களுக்கும் பெரியோர்களுக்கும் அடங்கி நடத்தல், (3) அயலார்களையும் அவர்களுடைய மதங்களையும் நிந்தியாதிருத்தல், (4) எந்தக்காலத்திலும் கெட்டவார்த்தைகளைச் சொல்லாதிருத்தல், (5) மன அமைதியுடனிருத்தல்,

(6) வேலைக்காரர்களை அன்பாக நடத்தல், (7) தரும வழியிலேயே இருத்தல் முதலியவைகளே. அசோகன் அவற்றிற் கூறியபடியே தானும் நடந்துவந்தான்.

அவன் பிரயாணிகளுக்கும் மிருகங்களுக்கும் நிழலைக் கொடுக்கும்படி சாலைகளில் மரங்களைவைத்துப் பயிராக்குவித்தானென்றும், ஜனங்கள் தங்கியிருத்தற்குத் தகுந்த மாஞ்சோலைகள் அங்கங்கே அவனால் உண்டாக்கப்பட்டன என்றும், சாலைகளில் இடையிடையே பல கிணறுகளை வெட்டுவித்தானென்றும், ஜனங்கள் இருத்தற்குரிய பல சத்திரங்களைக் கட்டுவித்தான் என்றும், பிரயாணிகளுக்காக வழிநடைகளில் தண்ணீர்ப்பந்தல்களையும், மிருகங்களுக்காகத் தண்ணீர்த் தொட்டிகளையும் அமைப்பித்தானென்றும் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. பிணியால் வருந்தும் ஜனங்களுக்கும் மிருகங்களுக்கும் வைத்தியசாலைகள் அவனால் ஏற்படுத்தப்பட்டன. இவற்றையெல்லாம் படித்துப்பார்க்கும் போது பழையகாலத்து இந்தியர்களுடைய சிறந்த நாகரிகம் நன்கு விளங்கும். புத்தமதத்தை உண்மையாக அனுசரித்து வந்தவனாதலால் அவன் பல தேசங்களுக்கும் பிரசங்கிகளை யனுப்பிப் புத்தமதக் கோட்பாடுகளை ஜனங்களுக்கெல்லாம் போதிக்கும்படி செய்தான். அவனுடைய சகோதரியே இலங்கைக்குப் போய்ப் புத்தமதத்தைப்பற்றி உபந்நியாசம் செய்து ஆங்குள்ளவர்களைப் பௌத்தர்களாக்கினாள். புத்தமதம் இலங்கையில் இன்றைக்கும் பிரபலமாயிருக்கிறது. அவனால் அனுப்பப்பட்ட பிரசங்கிகள் ஸிரியாநாட்டுக்கும் எஜிப்துக்கும், கிரீஸுக்கும் போய்வந்தார்கள்.

அசோகனுக்குப் பிறகு மகதராஜ்யம் இன்ன நிலைமையை அடைந்ததென்று நமக்குத் தெரியவில்லை. ஆனால் அது வரவர க்ஷீணித்துப் போயிற்றென்றும் வேறு ராஜ்யங்கள் பிரபலத்தை அடைந்தனவென்றும் சில காரணங்களால் தெரிகின்றன.



## 9. மகத ராஜ்யம்.

### சாங்கர்கள், கண்வர்கள், ஆந்திரர்கள்.

அசோகனுக்குப் பிறகு மகத ராஜ்யம் க்ஷீணித்துப்போயிற்று. மகதநாட்டைச் சுற்றிய தேசங்கள் சுவாதீனமடைந்தன. மாரியவம்சத்துக் கடைசி அரசனுடைய சேனாதிபதியான புஷ்யமித்திரன் என்பவன் அரசனைக் கொன்றுவிட்டு, கி—மு. 184-இல் சிம்மாசனமேறினான். அவனுடைய சந்ததியார்கள் கி—மு. 184 முதல் கி—மு. 72 வரையில் அரசாட்சி செய்தார்கள். சரித்திரத்தில் அவர்களுக்கு 'சாங்கர்கள்' என்ற பெயரும் அவர்கள் வம்சத்துக்கு 'சாங்கவம்சம்' என்ற பெயரும் வழங்கலாயின. பாடலிபுத்திரம் அவர்களுடைய ராஜதானியாக இருந்தது. புஷ்பமித்திரனுடைய காலத்தில் கிரேக்கிய அரசனான மினாண்டர் என்பவன் மகத தேசத்தின்மீது படையெடுத்துவந்து அவனால் தோல்வியடைந்தான். கலிங்கதேசத்தையும், பேராரையும் புஷ்யமித்திரன் ஜயித்து அசுவமேதயாகமொன்று நடத்தினான். இதனால் புத்தமதக் கொள்கை அவனால் பாராட்டப்படவில்லையென்று தெரிகிறது. அவனுடைய குமாரனான அக்கினி மித்திரன் என்பவன் மகததேசத்துக்குத் தெற்கே ராஜப்பிரதிநிதியாக இருந்துவந்தான். சாங்கவம்சத்தில் இருந்த கடைசியரசனை வாசுதேவன் என்ற பெயருள்ள பிராமண மந்திரியொருவன் கொன்று கி—மு. 72-இல் சிம்மாசனம் ஏறினான்.

வாசுதேவனுடைய சந்ததியாருக்கு 'கண்வர்கள்' என்று பெயர். அவர்கள் கி—மு. 72 முதல் கி—மு. 27 வரையில் அரசாட்சி செய்தார்கள். பிறகு அவர்களை ஆந்திரர்கள் துரத்திவிட்டு ராஜ்யத்தைக் கைக்கொண்டார்கள்.

ஆந்திரர்கள் அரசாட்சி செய்தகாலம் கி—மு. 27 முதல் கி—பி. 30 வரையிலேதான். அவர்கள் தெலுங்கர்கள். முதலில் அவர்கள் தக்ஷிணத்தில் கோதாவரிக்கும் கிருஷ்ணாவுக்கும் மத்தியிலுள்ள பிரதேசத்தை ஆண்டுவந்தார்கள்; கொஞ்சம் கொஞ்சமாக வடக்கே சென்று பல ராஜ்யங்களையும் கைக்கொண்டு கடைசியில் மகத நாட்டையும் கைப்பற்றிவிட்டார்கள்.

மகத ராஜ்யமானது இவ்வாறு இருக்க, இந்திய கிரேக்கர்கள் மினண்டர் என்பவனைத் தலைவனாகக்கொண்டு பல வீரர்களுடன் இந்தியாவின் மேற்குப்பாகத்தின்மேல் படையெடுத்தார்கள். மினண்டர் பௌத்தமதத்தைத் தழுவியவன். பௌத்தசமய நூல்களில் அவன் பெயர் 'மெலிந்தன்' என்று காணப்படுகிறது.

இந்திய கிரேக்கர்கள் முதலில் யவனர்கள் என்ற பெயரால் அழைக்கப்பட்டார்கள். நாளடைவில் அவர்கள் இந்தியர்களோடு கலந்துவிட்டார்கள். சில கல்வெட்டுக்களாலும் நாணயங்களாலும் அவர்கள் ஒரு காலத்தில் இந்தியாவின் வடமேற்கிலிருந்துகொண்டு அரசாட்சி செய்தார்களென்று தெரிகிறது.

### இந்திய பார்த்தியர்கள்.

பாரசிகராஜ்யத்தின் ஒரு பாகமான பார்த்தியா என்னும் இடத்தை ஸெலூகஸ் அரசன் சிலகாலம் ஆண்டான். இந்திய கிரேக்கர்களுடைய காலத்துக்குப்பிறகு பார்த்தியர்கள் தக்ஷசீலத்தை ராஜதானியாகக்கொண்டு காபூலையும் பஞ்சாபையும் ஆண்டுவந்தார்கள். அவர்கள் காலத்தில் வழங்கிய நாணயங்களை இப்போதும் பார்க்கலாம். பார்த்திய அரசர்களுள் பிரசித்திபெற்றவன் கந்தபோரஸ் என்பவன். அவன் கி—பி. 21-இல் பட்டத்துக்கு வந்தான். அவன் காலத்துக்குப் பிறகு ஸெண்டு தாமஸ் என்னும் கிறிஸ்தவமத போதகர் தென்னிந்தியாவில் பறங்கிமலைவரையில் வந்தனரென்றும் கி-பி. முதல் நூற்றாண்டுக்குப்பிறகு இந்திய பார்த்தியர்கள் காபூலிலிருந்து துரத்தப்பட்டார்களென்றும் தெரிகின்றன.

### இந்திய ஸித்தியர்கள் அல்லது சாகர்கள்.

துருக்கி ஸ்தானத்துக்கு வடக்கே சர்தேரியா நதிக்கரையில் வசித்த ஜனங்களை, கிரேக்கர்கள் 'சாகர்கள்' என்ற பெயரால் அழைத்துவந்தார்கள். சாகர்கள் நாடோடிகளான இடையர்கள். அவர்கள் இந்தியாவில் பிரவேசித்து ஆப்கானிஸ்தானத்திலும், வட இந்தியாவிலும், மாளவநாட்டிலும், சிந்துதேசத்திலும் நிலைத்தார்கள். சாகவம்சத்து அரசர்களுக்கு 'சத்திரபதிகள்' என்று பெயர். வடக்கிலிருந்த சத்திரபதி

கள் பௌத்தர்கள். அவர்கள் தக்ஷசீலத்தில் வசித்தார்கள். கி-பி. 200-இல் குஷான் ஜாதி அரசர்கள் அவர்களை வென்றனர். குஷான் ஜனங்களுக்கு ஆடுமாடு மேய்த்தலே முக்கியமான தொழில். அவர்கள் துருக்கியிலிருந்து வந்தவர்கள்; அப்பால் கி-பி. 45 முதல் கி-பி. 205 வரையில் இந்தியாவிலிருந்து அரசாட்சி செய்தார்கள். அவர்களில் பிரசித்திபெற்றவன் கானிஷ்கன் என்பவன். பஞ்சாபும், சிந்துதேசமும், காஷ்மீரமும் அவனால் ஆளப்பட்டன. இப்போது புருஷபுரி என்று வழங்கும் பெஷாவர் என்பது அவனுடைய ராஜதானியாக இருந்தது. அவன்காலத்திய நாணயங்களுள் இப்போது சில உள்ளன. அவன் கி-பி. 150 முதல் கி-பி. 225 வரையில் அரசனாக இருந்தான். பௌத்தமதத்தில் அவன் மிகுந்த பற்று உள்ளவன். புத்தருடைய ஞாபகார்த்தமாக அவன் நானூறு அடி உயரமுள்ள ஒரு ஸ்தூபியைக் கட்டியிருக்கிறான். கி-பி. 125-இல் அவன் பௌத்தர்களையெல்லாம் வரவழைத்து ஒரு மகாசபைகூட்டிப் பௌத்தமதத்தைப்பற்றிப் பிரசங்கம் புரியும்படி பௌத்த சந்நியாசிகள் பலரை மத்திய ஆசியாவுக்கும், சீனதேசத்துக்கும் அனுப்பினான். அவனே சிறந்த கல்விமானாதலால் வித்துவான்களையெல்லாம் மிகவும் ஆதரித்துவந்தான்.

குஷான் வமிசத்தில் இருந்த கடைசி அரசன் வாசுதேவன். அவன்காலத்தில் குஷான் ஜனங்கள் இந்துக்களாக மாறினரென்று அவன் பெயரினாலேயே தெரிகிறது. நந்திதேவர், சங்கரர் இவர்களுடைய உருவங்கள் அவனுடைய நாணயங்களில் அமைக்கப்பட்டிருந்தன. அவன்காலத்தில் ஆந்திரர்கள் க்ஷீணித்துப்போய்விட்டார்கள்.

## மேலைச் சத்திரபதிகள்.

மேற்கு இந்தியாவுக்குச் சென்ற சாகர்கள் மாளவம், கூச், கத்தியவார், கொங்கணம், கூர்ஜரம் முதலிய தேசங்களை ஆண்டார்கள். உச்சயினிநகரம் அவர்களுடைய ராஜதானி. சில வருஷங்களுக்குப்பிறகு அவர்கள் இந்துமதத்தைத் தழுவினார்கள். இந்துமதத்தின் அபிவிருத்திக்காக அவர்கள் மிகவும் முயன்று இந்தியர்களாகிவிட்டார்கள். சாகவம்சத்தார்களை இப்போது அடையாளம் கண்டுபிடிக்க

முடியாது. மேற்கு இந்தியாவில் வசிப்பவர்கள் அவர்களுடைய பரம்பரையினராக இருக்கவேண்டுமென்று சரித்திரக்காரர்கள் எண்ணுகிறார்கள். ஆந்திரர்களை அடக்கும் பொருட்டு அவர்கள் சண்டை செய்துகொண்டிருந்தார்கள். சாகர்களுள் பிரபலனாக இருந்த ருத்திரதமனன் என்பவன் கி-பி. 145-இல் ஒரு சண்டையில் ஆந்திரர்களை ஜயித்து அவர்களுடன் பிறகு சமாதானம் செய்துகொண்டு அவர்களுடைய அரசனுக்குத் தன் மகளை விவாகம் செய்துகொடுத்தான். அவன் செய்துகொண்ட உடன்படிக்கையினால் மேற்கு இந்தியா அவனுக்கு உரிமையாயிற்று. சத்திரபதிகள் உச்சயினி நகரத்தில் இருந்துகொண்டு இருநூற்றைம்பது வருஷ காலம் அரசாட்சி செய்தார்கள். பிறகு குப்தர்களால் அவர்கள் அடக்கப்பட்டார்கள்.

மாரியவம்சத்துச் சந்திரகுப்தனால் ஒரு பெரிய குளம் வெட்ட ஆரம்பிக்கப்பட்டு அசோகனுடைய காலத்தில் முடிந்தது. அதன் அணையானது கி-பி. 150 - இல் ஒரு வெள்ளத்தில் அழிந்துபோனமையால் ருத்திரதமனன் அதை மிகவும் பலமாகக் கட்டி அசோகனால் நானூறு வருஷங்களுக்குமுன் அமைக்கப்பட்டிருந்த ஒரு கல்வெட்டின் கீழே தான் செய்த தருமங்களையெல்லாம் எழுதுவித்தான். அதில் சந்திரகுப்தனுடைய பெயரும் அசோகனுடைய பெயரும் உள்ளன. அது ஸம்ஸ்கிருத பாஷையில் எழுதப்பெற்றிருத்தலால் ருத்திரதமனன் பிராமணர்களிடம் பிரியமும், ஸம்ஸ்கிருத பாஷையில் அபிமானமும் வைத்திருந்தானென்று சொல்லலாம்.

### பௌத்தர்கள் காலத்தில் ஜனங்களின் நிலைமை.

பௌத்தர்களுடைய காலத்தில் ஒவ்வொரு கிராமத்திலும் பல பிராமணர்கள் இருந்தார்கள். வீடுகளெல்லாம் சோலைகளின் மத்தியில் அமைந்திருந்தன. சோலைகளில் வெயிலே நுழைய இடமிராது. ஒவ்வொரு கிராமத்திற்கும் தனித்தனியே காடுகளும், விளையாடுதற்குரிய நிலங்களும் உண்டு. பாசனத்துக்கு உபயோகமான ஜலாதாரங்கள் பல இருந்தன. ஒவ்வொரு கிராமத்திலும் பஞ்சாயத்தார்கள் இருந்தார்கள். கிராமாதிகாரியே அவர்களுக்குத் தலைவன். சத்திரங்கள் கட்டுதலும், சாலைகளை அமைத்தலும், கால்வாய்களைச் செப்

பனிடுதலும் பஞ்சாயத்தார்களுடைய முக்கியமான கடமைகள்.* அக்காலத்தில் கிராமவாசம் மிகவும் சுகமாக இருந்தது. யானையேற்றத்திலும், குதிரையேற்றத்திலும், வில்வித்தையிலும், வாள்வித்தையிலும் பயிற்சியுள்ளவர்கள் சேனைகளில் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள். வெள்ளிவேலை செய்பவர்களும், தங்கநகை செய்பவர்களும், தந்தத்தினால் விநோதமான ஸாமான்கள் பண்ணுபவர்களுப், சாயந்தோய்ப்பவர்களும், சித்திரம் எழுதுபவர்களும், சரிகைவேலை தெரிந்தவர்களும், இன்னும் பற்பல தொழிலாளர்களும் அக்காலத்தில் இருந்தார்கள். ஒவ்வொரு குடும்பத்திலும் எல்லாரும் பெரியவனுக்கு அடங்கி நடப்பது வழக்கம். ராஜ்யத்தின் ஒவ்வொரு நகரத்திலும் தானியவர்த்தகர்களும், பழவியாபாரிகளும், காய்கள் விற்போர்களும், வஸ்திரவணிகர்களும், வாசனைத்திரவியங்களையும் மருந்துகளையும் விற்பவர்களும் உண்டு. படகுகளிலும், கோவேறு கழுதைகளின்மேலும் தானியங்களை ஏற்றி ஓரிடமிருந்து மற்றோரிடத்துக்குக் கொண்டுபோவார்கள். பட்டு, சல்லா, கத்திகள், ஈட்டிகள், கம்பளங்கள், வாசனைத்திரவியங்கள், நகைகள், தந்தத்தினாற் செய்யப்பட்ட அரிய பொருள்கள் முதலியன அன்னிய தேசங்களுக்கு அனுப்பப்பட்டன. பௌத்தர்கள் காலத்துச் சிலாசாசனங்களைப் படித்துப்பார்த்தால் அப்போதிருந்த ஜனங்களுடைய நிலைமை நன்றாக விளங்கும்.

## 10. 4–ஆம் நூற்றாண்டுமுதல் 8–ஆம் நூற்றாண்டு வரையில் இந்தியாவின் சரித்திரம்.

### குப்தர்கள். கி-பி. 320–480.

**பௌ**த்தர்களுடைய காலத்தின் முடிவில் குப்தர்கள் என்றவர்கள் ஆந்திரர்களை ஜயித்து மகதநாட்டைப் பிடித்துக் கொண்டு அரசாட்சி செய்தார்கள். அவர்கள் வம்சத்தில் சந்திரகுப்தன் என்ற பெயருள்ள அரசர்கள் இருவர் உண்டு. இவர்கள் வேறு; மௌரியவம்சத்திலிருந்த சந்திரகுப்தன் வேறு. முதலாவது சந்திரகுப்தன் பட்டத்துக்கு வந்தபிறகு ஆயுதபலத்தினால் பல தேசங்களை வசப்படுத்தினான். அதனால் அவனை மகாராஜன் என்று சொல்லுவதுண்டு. அவனு

டைய ஞாபகார்த்தமாக ஒரு சகாப்தமானது கி—பி. 320-ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்டது. அவனுக்குப்பிறகு சமுத்திர குப்தன் கி—பி. 326-இல் பட்டத்துக்கு வந்தான்.

குப்தவம்சத்தில் மிகவும் பிரபலமானவன் சமுத்திர குப்தன். அவன் தன் சரித்திரத்தை அசோகனால் எழுப்பப் பட்ட ஸ்தம்பமொன்றில் எழுதுவித்திருக்கிறான். அதனால் அவன் ஒரு பெரிய சேனையுடன் தேசம் முழுவதும் சென்று வெற்றிகொண்டானென்றும், அயல்நாடுகளைத் தன் நாட்டோடு சேர்த்துக்கொள்ளாமல் அவைகளிடமிருந்து கப்பம்மட் டும் வாங்கிவந்தானென்றும் நமக்குத் தெரிகின்றன. அவன் ஓர் அசுவமேதயாகம்செய்தான். அவனுடைய ராஜ்யம் அசோ கனுடைய ராஜ்யத்தைக்காட்டிலும் சிறியது. அவனுக்கு நன் ருகப் பாடத்தெரியும்; வீணையும் வாசிப்பான்; அருமையான கவிகள் இயற்றுவதில் வல்லவன்; வித்துவான்களைச் செவ் வையாக ஆதரித்துவந்தான். காபூல், சிந்து இந்த நாடு களின் அரசர்கள் அவனிடம் ஒற்றுமையாக இருக்க விரும் பினார்கள். குடிகளுடைய நன்மைக்காக அவன் மிகவும் பாடுபட்டமையால் அவர்கள் யாதொரு குறைவுமில்லாமல் திருப்தியாக இருந்தார்கள்.

### இரண்டாம் சந்திரகுப்தன். (375–413.)

இவன் சமுத்திரகுப்தனுக்குப் பின்பு பட்டத்துக்கு வந்து சந்திரகுப்த விக்கிரமாதித்தி யன் என்ற பெயரோடு விள ங்கினான். மேலைச்சத்திரப திகளை இவன் வென்று மாள வம், கூர்ஜரம், கத்தியவார் முதலிய தேசங்களைக் கைப் பற்றினான். இந்த வெற்றிக் குப் பிறகுதான் இவனுக்கு விக்கிரமாதித்தியன் என்ற பட்டப்பெயர் ஏற்பட்டது. இவனைப்பற்றி அநேகம் க தைகள் வழங்கிவருகின்ற ன. இவனிடத்தில் காளி



இரண்டாம் சந்திரகுப்தன்.

தாச மகாகவி முதலிய ஒன்பதுபேர்கள் ஆஸ்தான வித்துவான்களாக விளங்கினார்கள். இவனுடைய அரசாட்சியிலேதான் சைனதேசவாசியான பேஹியான் என்பவர் இந்தியாவுக்கு வந்து எல்லா இடங்களையும் சுற்றிப்பார்த்து அக்காலத்தைப்பற்றி ஒரு சரித்திரம் எழுதியிருக்கிறார். அவர் வந்து போனபிறகு கூர்ஜரதேசம் நசித்துப்போக ஆரம்பித்தது.

## ஹூணர்கள் (480–528.)

சற்றேறக்குறைய கி–பி. 480-இல் மங்கோலியர்களில் ஒரு வகையாரான ஹூணர்கள் கூட்டங்கூட்டமாக, பஞ்சாப் மாகாணத்தில் குடியேறி, குப்தர்களை வென்று பல சிறு ராஜ்யங்களை ஏற்படுத்திக்கொண்டனர். அவர்களுடைய தலைவனுக்கு 'தொரமன்' என்று பெயர். அவன் கி–பி. 500-இல் மாளவதேசத்துக்கு அதிபதியாகி மஹாராஜா என்று பட்டம் வைத்துக்கொண்டான். அவனுக்குப்பிறகு அவன் மகன் மஹீர குப்தன் பட்டத்துக்கு வந்தான். அவன் கொடுங்கோல்மன்னனாக இருந்து பலரைக் கொன்றான். மகததேசாதிபதியான நரசிம்ம குப்தனும், மத்திய இந்தியாவை ஆண்ட யசோதர்மனும், வேறோர் அரசனும் சேர்ந்து கரூர் என்னும் இடத்தில் அவனோடு போர்புரிந்து அவனைக் காஷ்மீரத்துக்கு ஓடிப்போகும்படி செய்தார்கள். அவனுடைய நாணயங்களால் அவன் இந்துமதத்தினனென்று தெரிகிறது. சில நாணயங்களில் நந்தியின் வடிவமும், லக்ஷ்மியின் உருவமும், திரிசூலமும் காணப்படுகின்றன. துருக்கியர்களும் பாரசீகர்களும் சேர்ந்துகொண்டு ஹூணர்களை ஆமுடேரியா நதிக்கரையில் அழிக்கத் தலைப்பட்டார்கள். இந்தியாவில் பாக்கியாக இருந்த ஹூணர்களும் பல அரசர்களால் வெல்லப்பட்டனர். அவ்வரசர்களில் முக்கியமானவன் பிரபாகரவர்த்தமானன் என்பவன். அவன் புதிதாக ஒரு ராஜ்யத்தை ஏற்படுத்தி, தனேசுவரத்தை ராஜதானியாகக்கொண்டு அரசாட்சி செய்தான்.

## ஹர்ஷ வர்த்தனன். (606–648.)

பிரபாகர வர்த்தமானனுக்குப்பிறகு அவன் மகன் ஹர்ஷ வர்த்தனன் பட்டத்துக்கு வந்தான். வட இந்தியா முழுவதையும் அவன் மாரிய சந்திரகுப்தனைப்போலவும், அசோக

னைப்போலவும், சமுத்திரகுப்தனைப்போலவும் ஒரு குடையின்கீழ் ஆண்டான். இந்தியா முழுவதையும் ஆண்ட கடைசி இந்திய அரசன் அவனே. தனேசுவரம் அவனுடைய ராஜதானி. ஸிந்து கங்கைச் சமவெளிமுதல் ஓரிஸ்ஸா வரையிலுள்ள தேசத்தை வெற்றிகொள்ள அவனுக்கு முப்பது வருஷகாலம் பிடித்தது. வல்லப (கூர்ஜ்ஜர) தேசத்து அரசன் அவனுக்குக் கப்பம் கட்டிவந்தான். தக்ஷிணத்தையும் வெற்றிகொள்ள ஹர்ஷவர்த்தனன் முயன்றான்; ஆனால் அது சாளுக்கிய வம்சத்தில் இரண்டாம் அரசனான புலிகேசனுடைய தடையினால் கைகூடவில்லை. ஆதலால் அவனுடைய ராஜ்யத்துக்கு நர்மதாநதியே தெற்கெல்லையாக இருந்தது. பாணகவி என்பவர் எழுதிய சரித்திரத்தாலும், சில சிலாசாஸனங்களாலும் அவனைப்பற்றி அநேக விஷயங்கள் நமக்குத் தெரிய வருகின்றன.

விக்கிரமாதித்தியனுடைய காலத்தில் பேஹியன் வந்தபோது இந்தியாவில் பௌத்த மதமும், ஹிந்து மதமும் சமமான நிலையில் இருந்தன. ஹர்ஷவர்த்தனன் காலத்தில் வந்த சைனாதேசத்து ஹியான்ஸான் என்னும் யாத்திரிகரால் பௌத்தமதம் குறைந்து வந்ததென்று தெரிகிறது. காஷ்மீரத்திலும், ஓரிஸ்ஸாவிலும், தென்னிந்தியாவிலும் பௌத்தர்கள் இருந்தார்கள். ஆனால் தேசம் முழுவதிலும் இந்துமதமே பிரபலத்தை அடைந்துவந்தது. ஹர்ஷவர்த்தனன் புத்தமதத்தை அனுசரித்துவந்தாலும் சிவனையும் சூரியனையும் தொழுதுவந்தான். மதவிஷயத்தில் ஜனங்களுடைய இஷ்டப்படியே விட்டுவிட்டான். அவன் பிரஜைகளுடைய நன்மைக்காகப் பாடுபட்ட சிறந்த நீதிமான். பல நூல்களைக் கற்றறிந்தவன். நாகானந்தம், ரத்னாவளி முதலிய நாடகங்களை இயற்றியவன் அவனே; படித்தவர்களை ஆதரித்தான். அவன்மட்டும் ஒரு சந்நியாசியைப்போல் காலங்கழித்துவந்தான். நாட்டில் புலால் உண்ணல் அவனால் தடுக்கப்பட்டது. ஏழைகள் இருத்தற்குச் சாவடிகளையும், பிரயாணிகளுக்கேற்ற சத்திரங்களையும், நோயாளிகளுக்குத் தரும வைத்தியசாலைகளையும் அவன் கட்டுவித்தான். ஹியான்ஸான் அவனால் மிகவும் உபசரிக்கப்பட்டார். கி-பி. 644-இல் பௌத்த பிக்ஷுக்களையும் பிராமண வித்துவான்களையும் வரவழைத்துக் கூட்டங்

கூட்டி அவர் அவர்கள் தங்கள் தங்கள் மதக் கொள்கைகளைப் பற்றி வியவகரிக்கும்படி ஏற்பாடு செய்தான். பிறகு அவர்களையெல்லாம் அவன் பிரயாகைக்கு அழைத்துச்சென்று அங்கே 75 தினங்கள்வரையில் ஒரு பண்டிகை கொண்டாடினான். அவ்விடத்தில் முதல்நாள் ஒரு புத்தாலயத்துக்கும், இரண்டாம்நாள் ஒரு சிவாலயத்துக்கும் மூன்றாம்நாள் சூரியனுடைய கோவில் ஒன்றுக்கும் அஸ்திவாரம் போட்டான். பௌத்தர்களுக்கும், பிராமணர்களுக்கும் ஒரேமாதிரியாக விசேஷமான சன்மானங்களைச் செய்தான். சன்மானங்களைப் பெறுவதற்கு ஐந்து லக்ஷம் ஜனங்கள்வரையில் கூடியிருந்தார்களென்று தெரிகிறது. அவன் கி-பி. 648-இல் இறந்தான். அவனுக்குப்பிறகு அவன் ராஜ்யம் க்ஷீணித்துப்போயிற்று.



## 11. 5-ஆம் நூற்றாண்டுமுதல் 8-ஆம் நூற்றாண்டு வரையில் இந்தியாவின் நிலைமை.

### மதம்.

மேலேகுறிப்பிட்ட காலத்தில் பௌத்தமதம் மலினமடைய இந்துமதமானது பிரபலத்துக்கு வந்தது. ஜனங்கள் விக்கிரக ஆராதனை, பண்டிகைகள், விரதங்கள் முதலியவற்றை விசேஷமாக அனுஷ்டித்துவந்தார்கள். புத்தர்கள் முதலில் அவர்களுக்குவழிகாட்டியிருக்கவேண்டுமென்றும், அப்பால் அவர்கள் அவைகளை மேற்கொண்டு பௌத்தர்களை அனுசரவு செய்திருக்கவேண்டுமென்றும் தெரிகிறது. சாகர்களாலும், குஷான்ஜாதியார்களாலும், ஹூணர்களாலும், ஹிந்துக்களாக மாறிய வேறு சிலராலும் இந்துமதம் கொஞ்சங்கொஞ்சமாக முன்னுக்கு வந்தது. குப்தவம்சத்தில் மூன்று வேந்தர்கள் அசுவமேதயாகம் செய்திருக்கிறார்கள். சிலர் வைஷ்ணவர்களாயிருந்துகொண்டு பரம பாகவதர்கள் என்னும் பெயரை வைத்துக்கொண்டார்கள். குப்த சக்கரவர்த்திகள் இந்து தேவாலயங்களையும் அன்ன சத்திரங்களையுங் கட்டி, பிராமணர்களுக்கு அக்கிரகாரங்களைத் தானம்செய்து யாதொரு கவலையுமில்லாமல் அவர்கள் வேதவிதிப்படி நடந்துவருமாறு செய்தார்கள்.

### குற்றம்.

அக்காலத்தில் ஜனங்களால் குற்றம் ஒன்றும் செய்யப் பட்டதாகத் தெரியவில்லை. வழிப்போக்கர்கள் நிர்ப்பயமாக யாத்திரை செய்துவந்தார்கள். ஏதாவது குற்றம் செய்தால் குற்றத்துக்குத் தக்கபடி அபராதமும், பிரம்படியும், விலங் கிடுதலும், தேசத்தை விட்டு நீக்குதலும், மாண தண்ட னையுமே சிட்சைகளாக இருந்தன.

ஆள்வரி அக்காலத்தில் ஏற்படவில்லையென்றும், குடிகள் ராஜாங்க உத்தியோகஸ்தர்களால் சௌகரியமாக நடத்தப் பட்டு வந்தார்களென்றும், நிலத்துக்குச் சொந்தக்காரர்கள் மாசூலில் ஒரு பகுதியை அரசனுக்குக் கொடுத்துவந்தார்க ளென்றும், குற்றவாளிகளுக்கு அரசர்கள் அபராதம் முத லிய சாதாரணமான தண்டனைகளைமட்டும் விதித்துவந்தார்க ளென்றும், ராஜ துரோகிகளுக்கும் கலகக்காரர்களுக்கும் வலக்கையை வெட்டிவிடுதலே சிட்சையாக இருந்ததென்றும், துரைத்தன உத்தியோகஸ்தர்கள் மாதந்தோறும் சம்பளத்தைப் பெற்றுவந்தார்களென்றும், சண்டாளர்கள்மட்டும் வெங்கா யத்தைச் சேர்த்துக்கொண்டும், கள்ளைக் குடித்துக்கொண்டும் இருந்தார்களென்றும், ஜீவ ஹிம்ஸை ஒருவராலும்செய்யப்பட வில்லையென்றும் பேஹியன் என்பவர் தெரிவித்திருக்கிறார்.

### தருமங்கள்.

நோயாளிகளுடைய அனுகூலத்தின்பொருட்டு வைத் தியசாலைகள் ஜனங்களால் ஏற்படுத்தப்பட்டன. வைத்தியர் கள் நோயாளிகளுடைய தாதுவைப்பார்த்து வியாதிகளைக் கண்டுபிடித்து, சரியான ஔஷதங் கொடுத்து அதிவிரைவில் குணப்படுத்தி வந்தார்கள். மிருகங்களுக்கும் வைத்தியசாலை கள் இருந்தன.

### கல்வியபிவிருத்தி.

குப்தர்களாலும், ஹர்ஷவர்த்தனனாலும் வித்வான்கள் ஆத ரிக்கப்பட்டுவந்தார்கள்; பல சிறந்த நூல்கள் இயற்றப்பட் டன. விக்கிரமாதித்தனுடைய காலத்தில் ரகுவம்சம், சாகுந் தலம், மேகதூது, மாளவிகாக்கினிமித்திரம் முதலியவற்றை எழுதிய காளிதாசர் முதலிய ஒன்பது வித்துவான்கள் விளங்கி

வந்தார்களென்பது பிரசித்தமான விஷயம். அக்காலத்திலேதான் அமரஸிம்மர் என்பவரால் நிகண்டும், யக்ஞவால்கியரால் தர்மசாஸ்திரமும் எழுதப்பட்டன. ரணவைத்தியத்திற் சிறந்த சரகரும், வைத்திய சாஸ்திரத்தில் பிரசித்தி பெற்ற தன்வந்திரியும் விக்கிரமாதித்தனால் அபிமானிக்கப்பட்டு வந்தார்கள். ஆரியபட்டரும், வராக மிகிரரும் கணித நூலிற் சிறந்து விளங்கினார்கள். நீதிசதகமியற்றிய பர்த்துருஹரி இருந்ததும் அக்காலத்திலேதான்.

ஹர்ஷனுடைய காலத்தில் பல வித்தியாசங்கங்கள் இருந்தன. அவற்றுள் மகத நாட்டிலிருந்த நலாந்தா என்பது முக்கியமானது. ஹியான்ஸான் அதில் சிலகாலம் வித்தியார்த்தியாக இருந்தார். ஆயிரக்கணக்கான மாணாக்கர்கள் சம்பளமில்லாமல் அங்கே படித்துக்கொண்டிருந்தார்கள். இந்தச் சங்கத்துக்காக ஹர்ஷவர்த்தனனால் நூறு கிராமங்கள் சர்வமான்யமாக விடப்பட்டன.

## 12. ரஜபுத்திரர்கள் காலம்.

(800-1200)

ஹர்ஷ வர்த்தனன் இறந்தபிறகு அவனுடைய ராஜ்யம் சின்னாபின்னமாய்ப்போக ரஜபுத்திரர்கள் இந்தியாவில் ஆதிபத்தியத்தை அடைந்தார்கள். இந்தியாவானது கி—பி. 12-ஆம் நூற்றாண்டுவரையில் அவர்களுடைய ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. அதற்குப்பிறகு அவர்கள் ஒற்றுமை இல்லாமல் ஒருவரோடு ஒருவர் சண்டைபோட்டுக்கொண்டிருந்ததனால் மகம்மதியர்களால் வெல்லப்பட்டார்கள். ரஜபுத்திரர்கள் க்ஷத்திரியர்கள்; தேகபலம் உள்ள தைரியசாலிகள்; இந்து மதத்தில் விசேஷமான பற்றுள்ளவர்கள். தைரியத்துக்காகவும் தேசாபிமானத்துக்காகவும் அவர்கள் பெயர்பெற்றவர்கள். அன்னிய ஜாதியார்கள் ஒருவர்பின் ஒருவராக இந்தியாவுக்கு வந்து கலந்துகொண்டதனால், பல புதிய ஜாதிகள் ஏற்பட்டனவென்றும் அவற்றுள் ரஜபுத்திர ஜாதி ஒன்றென்றும் சிலர் நினைக்கிறார்கள். சூரிய வம்சத்திலிருந்தும் சந்திர வம்சத்திலிருந்தும் தாங்கள் உதித்தவர்களென்று ரஜபுத்திரர்

கள் சொல்லிக்கொண்டார்கள். அவர்களுக்குச் சொந்தமாக இருந்த சில ராஜ்யங்களைப்பற்றி அடியில் கூறுவோம்.

### டில்லி.

ரஜபுத்திரர்களுடைய காலத்திலேதான் 'டில்லி' என்ற பெயர் அதற்கு ஏற்பட்டது. டில்லியை ஆண்ட அரசர்களுள், அனங்கபாலன் என்பவன் முக்கியமானவன். அவன், அசோகனால் கட்டப்பட்ட ஒரு ஸ்தம்பத்தைச்சுற்றி, பல ஆலயங்கள் கட்டுவித்தானென்று தெரிகிறது. மகம்மதியர்கள் டில்லியின்மேல் படையெடுத்து வந்தபோது அவனுடைய தௌஹித்திரனான பிருதுவிராஜன் என்பவன் அதனை ஆண்டுகொண்டிருந்தான்.

### கன்னோசி ராஜ்யம்.

இது கங்கைக்கும் யமுனைக்கும் மத்தியில் அடங்கிய பிரதேசம். இதன் ராஜதானி கன்னோசி. இக்காலத்தில் இது மிகவும் சிறியதாக இருந்தாலும் ஏழாம் நூற்றாண்டுமுதல் பன்னிரண்டாம் நூற்றாண்டுவரையில் மிகவும் பிரசித்தி பெற்றிருந்தது. பேஹியன்காலத்தில் மிகவும் சிறிய பட்டணமாகச் சொல்லப்பட்ட இது வரவர விருத்தியாகி ஹர்ஷவர்த்தனனுடைய இருப்பிடமாக ஆயிற்று. ஹியான்ஸான் இதைப்பற்றி மிகவும் விஸ்தாரமாக அவருடைய புஸ்தகத்தில் எழுதியிருக்கிறார். ஹர்ஷவர்த்தனனுக்குப்பின் பட்டத்துக்கு வந்தவர்களுள் யசோவர்மன் என்பவன் மிகவும் பிரபலமானவன். உத்தரராம சரித்திரமென்னும் நாடகத்தை இயற்றிய பவபூதி என்னுஞ் சிறந்த வித்துவான் அவனுடைய காலத்திலேதான் விளங்கிவந்தார். காஷ்மீரதேசத்து அரசனான லலிதாதித்யன் என்பவனால் ஒரு யுத்தத்தில் தோல்வியடைந்தபோது யசோவர்மன் அவனுக்குப் பவபூதியைக் காணிக்கையாக அனுப்பினான் என்று ஒரு கதை கர்ணபரம்பரையாக வழங்கிவருகிறது. இந்த வம்சத்தில் இருந்த கடைசி அரசன், ஜயசந்தன்; அவனுடைய பெண்ணாகிய ஸம்யுக்தை என்பவள் அவனுடைய சம்மதம் இல்லாமலே ஆஜ்மீருக்கு அதிபதியான பிருதுவிராஜனை மணம் செய்துகொண்டாள்.

### ஆஜ்மீர்.

அரவல்லி மலைக்குக் கிழக்கே உள்ள இந்த ராஜ்யம் வடக்கே சாம்பார் என்னும் ஏரிவரையில் பரவி இருக்கிறது. ரஜபுத்திரர்களுள் சௌஹான் வம்சத்தவர்கள் இதனை ஆண்டு வந்தார்கள். இந்த வமிசத்திற்பிறந்த பிருதிவிராஜன் இதனை ஆண்டபிறகு டில்லிக்கு அதிபதியானான்.

### மாளவம்.

இதனை ஆண்டவர்கள் மிகவும் பிரசித்திபெற்ற அரசர்கள். அவர்களுள் சிறந்த போஜராஜன் என்பவன் கி-பி. 1018 முதல் 1060 வரையில் ராஜ்ய பரிபாலனம் செய்தான். அவனே சிறந்த கல்விமானென்றும் பல பிரசித்த வித்துவான்கள் அவனால் ஆதரிக்கப்பெற்று வந்தார்களென்றும் சொல்லுவார்கள். அவன் தன் ராஜதானியாகிய தேனு என்னும் இடத்தில் உள்ள ஸரஸ்வதி தேவியின் ஆலயத்தில் ஒரு வித்தியாசங்கத்தை ஏற்படுத்தி நடத்திவந்தான்.

மேலே சொன்ன ராஜ்யங்களையல்லாமல் ரஜபுத்திரர்களுக்குச் சொந்தமான வேறு பல ராஜ்யங்களும் இருந்தன. அவற்றுள், காஷ்மீரம், காபூல், சிந்து, பஞ்சாப், வங்காளம், பேகார், ஒரிஸ்ஸா என்பவைகள் முக்கியமானவை.

இந்துஸ்தானம் முழுவதும் பல பிரிவுபட்டு வெவ்வேறு தலைவர்களுடைய ஆட்சியில் இருந்து வந்தமையால் சந்திரகுப்தன், அசோகன், ஹர்ஷன் இவர்களைப்போன்ற ஒரே சக்கரவர்த்தி இந்தப் பிரதேசம் முழுவதையும் ஆள இடமில்லாமற் போயிற்று. ரஜபுத்திரத் தலைவர்களுக்குள்ளும் ஒற்றுமை இல்லை. அவர்கள் முதன்மை பெற்றிருந்த காலத்திலேதான் இந்துமதம் பிரபலத்தை அடைந்தது. பிராமணர்கள் எல்லாருக்கும் மேற்பட்டிருந்தார்கள். அநேக ராஜ்யங்களில் பிராமணர்களே மந்திரிகளாக விளங்கினார்கள். ரஜபுத்திரர்கள் தங்கள் ஸ்திரீகளை மிகவும் கௌரவமாய் நடத்திவந்தார்கள். அவர்களுக்குள் சுயம்வரம் என்னும் வழக்கம் இருந்துவந்தது; அதனால் ஒரு ஸ்திரீ தனக்கு இஷ்டமான புருஷனைக் கணவனாக வரித்துக்கொள்ளலாம். ஸதி அல்லது உடன்கட்டை ஏறல் என்னும் வழக்கத்தை அவர்கள் அனுஷ்டித்துவந்தார்கள். பகையரசர்களுடைய கையில் தங்கள்

ஸ்திரீகள் அகப்படக்கூடுமென்று தெரிந்தால் ரஜபுத்திரர்கள் அவர்களை முன்னமேயே கத்திக்கு இரையாக்கிவிடுவார்கள்.

காசியிலும் வேறு ஸ்தலங்களிலும் பல கோயில்கள் ரஜபுத்திரர்களால் கட்டப்பட்டுள்ளன. சிலர் ஜைனமதத்தைத் தழுவி ஜைன ஆலயங்களைக் கட்டியிருக்கிறார்கள்.

## 13. தக்ஷிணம்.

நருமதைக்கும் கிருஷ்ணாநதிக்கும் நடுவிலுள்ள தேசத்திற்கு, தக்ஷிணம் அல்லது தென்தேசம் என்று பெயர். விந்தியமலைக்குத் தெற்கே மேற்குத் தொடர்ச்சிமலைக்கும் கிழக்குத் தொடர்ச்சிமலைக்கும் மத்தியிலுள்ள பிரதேசமானது ஒரு விசாலமான பீடபூமி. அநேகம் பெரிய சமவெளிகள் அங்கே உண்டு. கோதாவரியும் கிருஷ்ணாவும் மலைகளைக் குடைந்துகொண்டு அந்தப் பிரதேசத்தின் வழியாக ஓடுகின்றன. மூன்று பக்கங்களில் மலைகளாலும் மற்றொரு பக்கத்தில் சமுத்திரத்தாலும் சூழப்பட்டிருத்தலால் அதற்குள் வடக்கேயிருந்து அயல் நாட்டார்கள் எளிதில் படையெடுத்து வர முடியாமலிருந்தது. ஆனாலும் நதிகளின் ஓரமாக ஜனங்கள் வந்து போய்க்கொண்டிருந்தார்கள். தக்ஷிண பீடபூமியானது இரண்டு பிரிவுள்ளது. மேற்கேயுள்ள பிரிவுக்கு மகாராஷ்டிரமென்றும், கிழக்கேயுள்ளதற்கு, தெலிங்கணமென்றும் பெயர். பல்லாயிரம் வருஷங்களுக்கு முன்பு திராவிடர்கள் இந்த நாட்டில் நிலைத்திருந்தனர். ஏழாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஆரியர்கள் இங்கே சில இடங்களில் வந்து குடியேறி, போராரையும் கலிங்கதேசத்தையும் முதலில் கைப்பற்றிக்கொண்டார்கள் என்றும் பிறகு மற்ற இடங்களை வசப்படுத்திக்கொண்டார்களென்றும் சொல்லுகிறார்கள். அசோக சக்கரவர்த்தியினுடைய கல்வெட்டுக்கள் மேற்கேயுள்ள பாகத்தை ராஷ்டிரகுதர்கள் என்பவர்களும் கிழக்குப் பகுதியை ஆந்திரர்களும் ஆண்டுவந்தார்களென்று தெரிவிக்கின்றன.

### ஆந்திரர்கள்.

அசோகனுடைய காலத்துக்குப்பிறகு ஆந்திரர்கள் தங்கள் சுவாதீனத்தைக் கொண்டாடினார்கள். அவர்களுடைய உற்

பத்தியைப்பற்றிக் கல்விமான்களுக்குள்ளேயே அபிப்பிராய பேதமிருக்கிறது. சிலர் அவர்களை ஆரியர்களுடையபரம்பரை யினரென்றும் வேறு சிலர் திராவிடர்களுடைய சந்ததியார்க ளென்றும் சொல்லுகிறார்கள். ஆந்திரர்கள் கி-மு. 230 முதல் கி-பி. 226 வரையில் ஏறக்குறைய நானூறு வருஷங்களுக்கு மேல் ராஜ்ய பரிபாலனம் செய்தார்கள். அவர்கள் சாதவாக னன் என்பவனுடைய சந்ததியார்கள். ஒவ்வொரு குடும் பத்துக்கும் சாதகாரணி என்ற பட்டப்பெயர் உண்டு. கோ தாவரிக்கும் கிருஷ்ணாவுக்கும் மத்தியிலுள்ள அவர்களு டைய ராஜ்யத்தில் 30 பெரிய பட்டணங்கள் உண்டு. அவர் களிடத்தில் ஒரு பெரிய சேனை இருந்தது. கிருஷ்ணாநதி முகத்துவாரத்தில் உள்ள சீகாகுளம் என்பது முதலிலும் மே ற்படி நதிக்கரையிலுள்ள தானியகடகம் அல்லது அமராவதி என்னும் நகரம் பிறகும் அவர்களுடைய ராஜதானிகளாக இரு ந்தன. ஆந்திர அரசர்களில் பலர் பௌத்தர்கள். அவர்கள் பல ஸ்தூபிகளையும், பௌத்தபிக்ஷுக்களுக்கு மடங்களையும் கட்டியிருக்கிறார்கள். அமராவதியில் சிதைந்துபோன ஸ்தூ பிகளின் சில கற்களை, சென்னையிலுள்ள பொருட்காட்சிச் சா லைக்கு இப்பொழுது கொணர்ந்திருக்கிறார்கள். ஆந்திரர்கள் ராஷ்டிரகுதர்களை அடக்கிச் சிலகாலம் மகததேசத்தையும் ஆண்டுவந்தார்கள். அந்தக்காலத்தில் ஆந்திர அரசன் ஒரு வன் அவர்களுக்குத் தக்ஷிணத்தில் சொந்தமாயிருந்த ராஜ யத்தையும் வசப்படுத்திக்கொண்டான். ஆந்திரர்களுடைய காலத்திற்குப் பிறகு பல்லவர்கள் பிரபலத்தை அடைந் தார்கள்.

### பல்லவர்கள்.

பல்லவர்களை இந்திய பார்த்தியர்களின் பரம்பரையினர்க ளென்று சொல்லுகிறார்கள். ஆனால் அவர்களுடைய உற்பத் தியைப்பற்றி நிச்சயமாக ஒன்றும் தெரியவில்லை. தக்ஷிணத்தி லிருந்து அவர்கள் தென்னிந்தியாவுக்கு வந்து கோதாவரிக் குத் தெற்கேயுள்ள பிரதேசத்தை வசப்படுத்திக்கொண்டார் கள். சிலர் தக்ஷிணத்தின் மேல்பாகத்திலும் வேறு சிலர் வெங் கியிலும், மற்றும் சிலர் காஞ்சீபுரத்திலும் இருந்துகொண்டு அரசாட்சி செய்தார்கள்.

## சாளுக்கியர்கள்.

இவர்கள் சந்திரவம்சத்திற் பிறந்த ரஜபுத்திரர்களைச் சேர்ந்தவர்கள். அநேக இடங்களில் இவர்கள் பிரபலமாயிருந்தார்கள்; இவர்களுக்குள் ஒரு பிரிவினர் ஏழாம் நூற்றாண்டில் தக்ஷிணத்தில் அரசாட்சி செய்துவந்தார்கள். இவர்களுக்குள் கியாதிபெற்றவன் புலிகேசி. அவன் ஹர்ஷவர்த்தனனை ஒரு யுத்தத்தில் வென்று தக்ஷிணத்தைச் சுவாதீனப்படுத்திக் கொண்டு, தன் தம்பியாகிய விஷ்ணுவர்த்தனனை வெங்கிக்கு அதிபதியாக்கினான். தக்ஷிணத்தை ஜயித்தபிறகு அவன் தென் இந்தியா முழுவதையும் தன் ஆட்சிக்குக் கொண்டு வந்தான். அவனுடைய காலத்தில் தென் இந்தியாவுக்கு வந்த ஹியான்ஸாங் என்பவர் அக்காலத்தில் ஜனங்கள் யோக்கியர்களாகவும், உண்மை தவறாதவர்களாகவும் இருந்தார்களென்று எழுதியிருக்கிறார். காஞ்சி நகரத்தில் அரசாட்சி செய்துகொண்டிருந்த பல்லவ அரசனொருவன் புலிகேசியை ஒரு யுத்தத்தில் வென்று கொன்றான். கி-பி. 550-இல் சாளுக்கியருடைய ஆதிபத்தியம் குறைந்தது; ராஷ்டிரகூதர்கள் மேன்மையடைந்தார்கள்.

## கிழக்கே நிலைத்த சாளுக்கியர்கள்.

வெங்கிக்கு அதிபதியாயிருந்த விஷ்ணுவர்த்தனன் கிருஷ்ணாஜில்லாவில் எல்லூருக்கு ஏழுமைல் தூரத்திலிருந்த வெங்கி என்னும் நகரத்தை ராஜதானி யாக்கிக்கொண்டான். அவனுடைய தேசத்துக்கு வங்காளக்கடல் கிழக்கெல்லையாகவும், கோதாவரிநதி வடக்கு எல்லையாகவும், கிருஷ்ணாநதி தெற்கு எல்லையாகவும் இருந்தன. ஆந்திரதேசத்தில் அது ஒரு பாகமாகும். அதில் முப்பது வருஷகாலம் அவன் தன்னுடைய சாமர்த்தியத்தால் நிர்ப்பயமாக அரசாட்சி செய்தான்; அவனால் பல தெலுங்கு வித்துவான்களும் கவிகளும் ஆதரிக்கப் பெற்றார்கள். அவனுக்குப்பின் அரசனாகவந்த ராஜநரேந்திரன் என்பவன் ராஜமகேந்திரத்தை ராஜதானியாக ஏற்படுத்திக்கொண்டான். மஹாபாரதத்தை மொழிபெயர்த்த மகாகவியாகிய நன்னயபட்டர் என்பவர் அவனுடைய சமஸ்தான வித்துவானாக இருந்து விளங்கினார். அவனுடைய காலத்

திலேதான் சோழர்களுக்கும் ஆந்திரர்களுக்கும் சம்பந்தம் ஏற்பட்டது. இந்தப் பாத்தியத்தினலேதான் சோழர்கள் பின்பு அரசர்களாக ஆனர்கள்.

### ராஷ்டிரகூட்டர்கள். (கி-பி. 754–953)

ராஷ்டிரகூட்டர்கள் ஒருவேளை ஆரியர்களாக இருக்கலாம். அவர்களுக்குள் வீரவான்களாக இருந்தவர்கள் தங்களையே மகாராஷ்டிரர்களென்று சொல்லிக்கொண்டார்கள். அவர்களுடைய தேசத்துக்கு மகாராஷ்டிரம் என்ற பெயர் வழங்கலாயிற்று. அவர்களுடைய பாஷையான மகாராஷ்டிரம் பிராகிருதத்துக்கு நெருங்கின சம்பந்தமுள்ளது. காஞ்சியில் இருந்த பல்லவர்களை வெல்வதற்காகச் சாளுக்கியர்கள் அங்கே சென்றபோது அவர்களுடைய இடத்தை ராஷ்டிரகுதர்கள் ஆக்கிரமித்துக் கொண்டார்கள். அவர்களுள் முதல் அரசனக இருந்த முதலாம் கிருஷ்ணராஜன் காலத்திலே எல்லூரில் ஒரே கல்லில் மிகவும் ஆச்சரியமான கைலாச நாதர் ஆலயம் கட்டப்பட்டது. மூன்றும் கிருஷ்ணராஜன் என்பவன் தஞ்சாவூரையும் காஞ்சீபுரத்தையும் ஜயித்து, தன் ராஜ்யத்தை விருத்திபண்ணினன். ராஷ்டிரகுதர்களுடைய பலம் சாளுக்கியன் ஒருவனல் குறைக்கப்பட்டது.

### பிற்காலத்திய சாளுக்கியர்கள். (973–1190)

பம்பாய்க்கு அருகே உள்ள 'கலியன்' என்பது அவர்களுடைய ராஜதானி. அது நைஸாம் ராஜ்யத்தில் உள்ளது. இந்தச் சாளுக்கிய அரசர்களுக்குள் மிகவும் பிரசித்திபெற்றவன் விக்கிரமார்க்கன். அவனுடைய காலத்தில் இருந்த பில்கணகவி என்பவர் அவன் பல தேசங்களையெல்லாம் ஜயித்து ஜனங்களுக்கு விசேஷ நன்மைகளைச் செய்தானென்றும் அவனுடைய குடிகள் விசேஷமான செல்வவான்களாகவும் திருப்தியுள்ளவர்களாகவும் இருந்தார்களென்றும் ஒரு புஸ்தகத்தில் எழுதியிருக்கிறர். அவனுக்குப்பிறகு சாளுக்கியர்கள் க்ஷீணித்துப்போய்விட்டார்கள்.



# 14. தென் இந்தியா.

கிருஷ்ணாநதிக்கும் துங்கபத்திரா நதிக்கும் தெற்கில் உள்ள பிரதேசம் தென் இந்தியா என்று சொல்லப்படும். அதனை அடியிற்கண்டபடி மூன்று பாகங்களாகப் பிரிக்கலாம்:—

(1) மேலைச் சமவெளி,

(2) கிழக்குத் தொடர்ச்சிமலைக்கும் மேற்குத் தொடர்ச்சி மலைக்கும் மத்தியிலுள்ள பீடபூமி,

(3) கிழக்குக் கரையோரமாயுள்ள சமநிலம்.

இந்தப் பிரதேசத்தில் வடபெண்ணையாறும், பாலாறும், காவிரியும், வைகையும், தாம்பிரபர்ணியும் பாய்கின்றன. இதில் வசித்த ஜனங்கள் திராவிடர்கள். அவர்களுடைய பாஷையும் வழக்கங்களும் ஆரியர்களுடைய பாஷையோடும் வழக்கங்களோடும் ஒத்திருக்கவில்லை.

அக்காலத்தில் தென்னிந்தியாவில் மூன்று பழைய ராஜ்யங்கள் பிரசித்திபெற்றிருந்தன. மேற்கேயுள்ளதற்கு, சேர ராஜ்யமென்றும், தெற்கேயுள்ளதற்கு, பாண்டிய ராஜ்யமென்றும் வடக்கேயுள்ளதற்கு, சோழ ராஜ்யம் என்றும் பெயர். அசோகனுடைய காலத்திலேயே இவை இருந்ததாகத் தெரிகிறது.

### பாண்டிய ராஜ்யம்.

இது காவிரிக்குத் தெற்கே மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி இந்த மூன்று ஜில்லாக்களும் அடங்கிய பிரதேசம். இங்கே வழங்கிய பாஷை தமிழ்; இதன் ராஜதானி மதுரை. தாம்பிரபர்ணியின் முகத்துவாரத்தில் துறைமுகப்பட்டினமாக இருந்த கொற்கை நகரம் சிலகாலம் இதன் பிரதான பட்டணமாக இருந்தது. இந்நாட்டைச்சுற்றிய சமுத்திரத்தில் சிறந்த முத்துக்கள் விசேஷமாக அகப்பட்டன. பாண்டியர்களுக்கு மீனக்கொடி சொந்தமானது.

### சோழராஜ்யம்.

#### முந்திய சோழர்கள்.

சோழர்களைப் பாண்டவர்களின் வம்சத்தினர்களென்று சொல்லுவார்கள். சோழநாடானது காவிரிக்கு வடக்கே

யுள்ளது. அதில் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, வட ஆற்காடு, செங்கற்பட்டு, தென் ஆற்காடு, கோயம்புத்தூர், நீலகிரி முதலிய ஜில்லாக்கள் அடங்கியிருந்தன. அதன் ராஜதானி திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் உள்ள உறையூர். காவிரியானது கடலொடுகடக்கும் இடத்திலுள்ள காவிரிப்பூம் பட்டினம் அதன் துறைமுகமாக இருந்தது. கடலிலிருந்து பல கப்பல்கள் காவிரியில்வந்து தங்கினதாகத் தெரிதலால் கடலொடு கலக்குமிடத்தில் அக்காலத்தில் அந்நதி மிகவும் அகலமா யிருந்திருக்கவேண்டும். வங்காளம், பர்மா, இலங்கை, முதலிய இடங்களிலிருந்து ஆயிரக்கணக்கான வியாபாரிகள் காவிரிப்பூம் பட்டினத்துக்கு வியாபாரத்துக்காக வந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

### பல்லவர்கள்.

காஞ்சீபுரத்தை ராஜதானியாகவும், மகாபலிபுரத்தைத் துறைமுகப் பட்டினமாகவும் ஏற்படுத்திக்கொண்டு பல்லவர்கள் சில நூற்றாண்டுகள் அரசாட்சி செய்தார்கள். இரண்டாம் நூற்றாண்டில் அவர்களுடைய ராஜ்யமானது கிருஷ்ணையிலிருந்து காவிரிவரையில் பரவியிருந்தது. கி-பி. 150-ஆம் ஆண்டில் சிவஸ்காந்தவர்மன் என்னும் பல்லவ அரசன் ஓர் அசுவமேதயாகம் செய்தான். இதனால் அவன் இந்துமதத்தினனென்று தெரிகிறது. ஐந்தாம் நூற்றாண்டிலும், ஆறாம் நூற்றாண்டிலும் பல்லவர்கள் மிகுந்த பராக்கிரமத்துடன் இருந்தார்கள். ஏழாம் நூற்றாண்டில் நரசிம்மவர்மன் என்னும் பல்லவன் சாளுக்கியர்களை ஜயித்தான். பல்லவர்கள் அடிக்கடி அயலார்களுடன் சண்டைபோட வேண்டியிருந்தது. கடைசியில் சோழர்களால் காஞ்சியிலிருந்து துரத்தப்பட்டார்கள்.

### பிந்திய சோழர்கள்.

சோழர்களுக்குள்ளே கியாதிபெற்ற ராஜராஜன் என்பவன் கி-பி. 985-இல் பட்டத்துக்குவந்து இருபத்தேழு வருஷம் அரசாட்சிசெய்தான். தென் இந்தியா முழுவதையும் தன் வசமாக்கிக்கொண்டு அவன் குடிகளுக்கு அளவற்ற நன்மைகளைச் செய்தான். தஞ்சாவூரிலுள்ள பிரகதீசுவரர் ஆலயம் அவனால் கட்டப்பட்டதே. அந்தக் கோவிலின் மதில்களில் பல சிலாசா

லனங்கள் உள்ளன. ராஜ ராஜன் தன் மகளை, சாளுக்கிய அரசன் ஒருவனுக்கு விவாகம் செய்துகொடுத்தான். அந்த அரசனுடைய சந்ததியார்கள் பிறகு வெங்கியில் அரசாட்சிசெய்தார்கள். ராஜ ராஜனுடைய மகன் கங்கைவரையில் சென்று பல நாடுகளை ஜயித்தமையால் அவனுக்கு, கங்கை கொண்ட சோழன் என்ற பெயர் ஏற்பட்டது. அவன் கங்கைகொண்ட சோழபுரம் என்னும் நகரத்தை ராஜதானியாக ஏற்படுத்திக் கொண்டு அதில் பெரிய சிவாலயமொன்றைக் கட்டினான். அது கும்பகோணத்துக்கு 15-மைல் தூரத்தில் இப்போது பாழான நிலைமையில் உள்ளது. சோழர்களுடைய அரசாட்சி கி-பி. 1310 வரையில் இருந்ததாகத் தெரிகிறது.

### சேரராஜ்யம்.

திருவாங்கூரும், மலையாளமும், கொச்சியும் இதில் அடங்கியிருந்தன. இதன் ராஜதானி வஞ்சிநகரம்; வஞ்சி என்னும் ஆற்றின் முகத்துவாரத்தில் உள்ள புச்சிலி என்னும் நகரம் துறைமுகப்பட்டினமாக இருந்தது. மிளகு வாங்குவதற்காக, கிரீஸிலிருந்து பல வியாபாரிகள் இவ்விடத்துக்கு வந்து போவார்கள். தொண்டி என்பது வேறொரு கடற்கரைப் பட்டினம்.



## 15. தென்னிந்தியாவின் நிலைமை.

சேர சோழபாண்டிய ராஜ்யங்களாகிய மூன்றும், ஆதி காலத்தில் பல மண்டலங்களாகவும், அம்மண்டலங்கள் பல ஜில்லாக்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தன. அரசனுடைய பிரதிநிதி யொருவன் ஒவ்வொரு மண்டலத்துக்கும் தலைவனாக இருந்தான். அவனுக்குக் கீழே பல சிறு அதிகாரிகள் ஜில்லாக்களின் விசாரணைக்கர்த்தர்களாக இருந்துகொண்டு அவனுக்கு அடங்கி நடந்துவந்தார்கள்.

ராஜ்யகாரியங்களை அரசர்களே கவனித்துவந்தார்கள். ஜனங்கள் தங்கள் வரும்படியில் ஆறில் ஒரு பங்கை அரசனுக்குத் தீர்வையாகச் செலுத்திவந்தார்கள். உப்புவரியும், தண்ணீர்த்தீர்வையும், அக்காலத்தில் இருந்தன. ஆறுகளுக்குப் பாலங்களும், அணைக்கட்டுகளும் கட்டப்பட்டன.

ஜனங்களிடமிருந்து கிடைக்கும் தொகையைக்கொண்டு அரசர்கள் பல கால்வாய்களை வெட்டிச் சாலைகளை அமைத்தார்கள். தேசத்தின் பாதுகாப்பிற்காக நிலப்படையும், கப்பற் படையும் இருந்தன.

### கிராம பரிபாலனம்.

அக்காலத்தில் கிராம பரிபாலனமானது கிராமவாசிகளாலேயே நடத்தப்பட்டுவந்தது. பொது விஷயங்களைப்பற்றிக் கிராமவாசிகள் எல்லாரும் சேர்ந்து சபைகூடி முடிவுசெய்வார்கள். கிராமாதிகாரிகளை நியமிக்கும் பாத்தியம் சபையாருக்குத்தான் உண்டு. ஒவ்வொரு கிராமத்திலும் தனியான சபை இருந்ததோடு பஞ்சாயத்தார்களும் இருந்தார்கள். சபையார்களையும், பஞ்சாயத்தார்களையும் ஜனங்கள் பொறுக்கி எடுப்பார்கள். ஆலயங்களையும், தரும சொத்துக்களையும் பரிபாலனம் செய்வதும், கிராமக்கணக்குகளை வைத்துக்கொள்வதும் பஞ்சாயத்தார்களுடைய வேலை; இந்தக் கணக்குகள் ஜில்லா அதிகாரிகளாலும், மண்டலாதிபதியாலும், சேனாதிபதியாலும் பரிசீலனை செய்யப்பட்டுவந்தன.

தென்னிந்தியர்களுக்கும் அயல்நாட்டாருக்கும் கப்பல்களின்மூலம் அக்காலத்தில் வியாபாரம் நடந்துவந்ததென்பதற்குப் பல ஆதாரங்கள் உள்ளன. ரோம் சக்கரவர்த்தியால் அக்காலத்தில் வழங்கப்பட்ட நாணயங்கள் இப்போதும் நம் தேசத்தில் பல இடங்களில் கிடைக்கின்றன. பாண்டிய அரசர்களிடமும் சோழ அரசர்களிடமும் பல போர்வீரர்கள் இருந்தார்கள்; அயல் நாடுகளுக்கு வேந்தர்கள் தூதர்களை அனுப்புவதுண்டு. அரசர்கள் ஆலயங்களைக் கட்டினதல்லாமல் ஜனங்களின் சௌகரியத்துக்காக அநேக இடங்களில் சத்திரங்களை அமைத்திருக்கிறார்கள். குடிகளுடைய நன்மைக்காகவே தங்கள் காலத்தைப்போக்கிய அரசர்கள் பலர் தமிழிலும் தெலுங்கிலும் சிறந்த பயிற்சியுள்ள வித்துவான்களை மிகவும் கௌரவமாக நடத்தி அவர்களுக்கு விசேஷமான சன்மானங்களையும் செய்துவந்தார்கள்.

### தமிழ்க்கல்வி.

மேலே குறிப்பிட்ட காலத்தில் இருந்த தமிழ் அரசர்களால் தமிழ்க்கல்வி மிகவும் விருத்தியடைந்தது. மதசம்பந்த

மான பல தமிழ் நூல்களும் வடமொழிநூல்களின் பல மொழிபெயர்ப்புகளும், சிறந்த காவியங்களும், புராணங்களும் வெளிவந்தன. கம்பர், புகழேந்தி, ஒட்டக்கூத்தர் முதலியவர்கள் அக்காலத்தில் இருந்த பிரசித்திபெற்ற வித்துவான்கள்.

மூன்று மதங்களையும் முறையே ஸ்தாபித்த ஆசாரிய புருஷர்களான சங்கரரும், ராமானுஜரும், மத்வாசாரியரும் அவதாரம் செய்தது தென்னிந்தியாவிலேதான்.

சங்கராசாரியர் எட்டாம் நூற்றாண்டில் மலையாளநாட்டிலுள்ள காலடி என்னும் க்ஷேத்திரத்தில் ஜனித்து ஸம்ஸ்கிருத பாஷையில் விசேஷமான பாண்டித்தியத்தை அடைந்து தேசம் முழுவதும் சஞ்சரித்து ஜனங்களுடைய அஞ்ஞானத்தைப் போக்கி ஞானத்தைப் புகட்டிப் பல அற்புதமான சைவ சமய கிரந்தங்களை இயற்றியிருக்கிறார். முப்பத்திரண்டாம் பிராயம்வரையில் அவர் இவ்வுலகத்தில் இருந்தார்.

ராமானுஜர் பன்னிரண்டாம் நூற்றாண்டில் சென்னைக்கும் காஞ்சிக்கும் இடையேயுள்ள ஸ்ரீபெரும்பூதூர் என்னும் ஸ்தலத்தில் பிறந்தார். அங்கே அவர் கல்விகற்றுச் சிலகாலத்துக்குப் பிறகு நாடெங்கும் சஞ்சாரஞ்செய்துவந்தார். ஸ்ரீரங்கத்தில் இருந்த சைவசமயியான சோழ அரசன் ஒருவன் ஒருகாலத்தில் அவரைக் கொல்ல முயன்றான். அப்போது அவர் மைசூருக்குப்போய் அங்கே இருந்த அரசனை வைஷ்ணவன் ஆக்கினார். வைஷ்ணவமதம் அவரால் ஸ்தாபிதமானது. மைசூரிலேயே அவர் சிலகாலம் இருந்துவிட்டு அப்பால் ஸ்ரீரங்கத்துக்கு வந்தார். வைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் பல அவரால் எழுதப்பெற்றுள்ளன.

தென் கன்னடத்தில் உள்ள உடுப்பி என்னும் புண்ணிய பூமியில் மத்வாசாரியர் கி-பி. 1190-இல் பிறந்தார். அவர் தேசம் முழுவதிலும் யாத்திரைசெய்து ஒரு புதிய மதத்தை ஸ்தாபித்தார். கிருஷ்ணனையும் வாயுபுத்திரரான அனுமாரையும் உபாசனை செய்யவேண்டுமென்பது அவருடைய கொள்கை. மத்வ சித்தாந்த நூல்கள் பலவற்றை அவர் எழுதியிருக்கிறார்.



## PART II.

## இரண்டாம் பாகம்.

### 16. மகம்மதியர்கள்.

மகம்மது. (570–632.)

படத்தைப்பார்த்து அரேபியா இருக்கும் இடத்தைத் தெரிந்துகொள்க. நம்முடைய நாடாகிய இந்தியாவுக்கு வடமேற்கில் இருக்கிறது. அது நதிகளும், ஏரிகளும், இல்லாத மணற்பாங்கான பாலைநிலம். முற்காலத்தில் நாகரிகமற்ற ஜனங்கள் ஆடுமாடுகளை வைத்துக்கொண்டு அவற்றை மேய்ப்பதற்காக அந்த நாடெங்கும் திரிந்து வசித்துவந்தார்கள்; அவர்கள் மூர்க்ககுணமுள்ளவர்கள்; யுத்தப்பிரியர்கள்; ஆதலால் அடிக்கடி ஒருவரோடொருவர் சண்டைபோட்டுக்கொள்வார்கள். மனிதர்களுக்கு இருக்கத்தகாத சில கொடிய வழக்கங்கள் அவர்களுக்குள் பரவியிருந்தன.

கிறிஸ்து பிறந்த அறுநூறு வருஷங்களுக்குப் பிறகு மிக்க புகழ்பெற்ற தீர்க்கதரிசியொருவர் அரேபியாவில் பிறந்தார். அவருக்கு மகம்மது என்று பெயர். அரேபியர்களுக்குள் வழங்கிவந்த அநியாயமான கொடிய வழக்கங்களை அவர் கண்ணுற்று மிக்க இரக்கங்கொண்டு அந்த ஜனங்களை நல்ல நிலைமைக்குக் கொண்டுவருவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்யலானார். ஒருவரோடொருவர் சண்டையிடுவதும், விக்கிரக ஆராதனைசெய்வதும் தவறென்றும், கடவுள் ஒருவரே உண்டென்றும் அவரைத்தான் தொழவேண்டுமென்றும் அவர் போதித்தார். முதலில் அவருடைய போதனைகளை ஒருவரும் செவிகொடுத்துக் கேளாமல் அவரைக் கொல்ல வழிதேடினார்கள்; ஆனால் கொஞ்ச காலத்திற்குப்பிறகு அவருக்குப் பல சிஷ்யர்கள் ஏற்பட்டார்கள்.

அவருடைய கொள்கைகளில் அநேகர் விருப்பங்கொண்டு அவருடைய புதிய மதத்தை அனுஷ்டிக்க ஆரம்பித்தார்கள். கி-பி. 632-இல் அவர் காலகதியடைந்தார். அவருடைய

போதனைகளும், கொள்கைகளும் 'கொரான்' என்னும் புஸ்தகத்தில் உள்ளன. மகம்மதியர்களுக்குள் வேதநூலாக வழங்கி வருவது அதுவே. அவரால் உண்டாக்கப்பட்ட புதிய மதத்துக்கு மகம்மதிய மதம் அல்லது இஸ்லாம் மதம் என்று பெயர். இஸ்லாம் என்பதற்கு 'அமைதியுள்ள' என்பது பொருள்; நம்முடைய வழக்கத்தில் தினந்தோறும் இருந்துவரும் 'ஸலாம்' என்னும் பதம் 'இஸ்லாம்' என்பதன் சிதைவு. மகம்மதியர்களை முஸல்மான்கள் என்றும் சொல்லுவதுண்டு. தம் உயிரைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு மகம்மது கி-பி. 622-இல் மெக்கா என்னும் இடத்திலிருந்து மெடிஞ என்னும் இடத்துக்கு ஓடிப்போனுர். இவ்வாறு அவர் ஓடிப்போனதற்கு 'ஹிஜிரா' என்று பெயர். ஹிஜிராவையே மகம்மதியர்கள் தங்கள் மதத்தின் ஆரம்பகாலமாக வைத்துக்கொண்டார்கள். கடவுள் ஒருவரே என்பதும், மகம்மது அவரால் ஏற்படுத்தப்பட்ட மதபோதகர் என்பதும், அந்தப் புதிய மதத்தை அனுசரிப்பவர்கள் எல்லாரும் கடவுள் கண்ணுக்குச் சமானமானவர்கள் என்பதும், எல்லாரும் சகோதரர்களென்பதும் மகம்மதியர்களுடைய கோட்பாடுகள். அவர்களுக்குள் ஜாதி பேதமில்லை. தங்கள் மதத்தில் அவர்கள் விசேஷமான பற்று உள்ளவர்கள்.

தங்கள் மதத்தைப் பரவச்செய்வதும் அந்த மதத்தைத் தழுவாதவர்களோடு சண்டைபோடுவதும் கடமையென்றும் மதாபிமானத்தால் சண்டைபோட்டு யுத்தத்தில் இறப்பவர்களுக்கு மோக்ஷம் உண்டென்றும் அவர்கள் நம்பினுர்கள். மகம்மதிய மதத்தைத் தழுவாதவர்களுக்கு 'ஜஸையா' என்னும் ஒரு வரியை அவர்கள் விதித்தார்கள்.

மகம்மதியர்கள் அரேபியாவுக்கு வடக்கே படையெடுத்துச் சென்று ஒரு நூற்றுண்டில் பாரசீகம், துருக்கிஸ்தானம், ஆப்கானிஸ்தானம் முதலிய இடங்களையெல்லாம் வென்று தங்கள் மதத்தை அங்கே பரவச்செய்தார்கள்.

பாரசீகர்களில் சிலர் தங்கள் சொந்தமதத்தை விட்டுவிட்டுப் புதிய மதத்தை அனுசரிக்க மனங்கொள்ளாமல் தங்கள் தேசத்தை நீங்கி இந்தியாவுக்கு வந்து குடியேறினுர்கள். அவர்களுக்கு 'பார்ஸிகள்' என்று பெயர். ஆரியர்களைப்போலவே அவர்கள் அக்கினியைத் தெய்வமாக வணங்கிவந்தார்

கள். அவர்களுடைய பாரம்பரையினர்கள் இப்போது பம்பாயில் வசிக்கிறார்கள். அமைதியான வழக்கங்களுக்கும், வியாபாரத்தை முறையாக நடத்துவதற்கும் அவர்கள் பெயர் பெற்றவர்கள். அவர்களில் சிலர் பெருத்த செல்வவான்களாக இருக்கிறார்கள்; பிறருக்கு நன்மை புரிவதில் அவர்கள் பொருளைச் செலவிடுவதுண்டு.

மத்தியதரைக்கடலைச் சுற்றிய பல தேசங்களில் மகம்மதியர்களுடைய ஆதிபத்தியம் கொஞ்சம் கொஞ்சமாகப் பரவிற்று; சிலகாலம் அவர்களுடைய அரசாட்சி ஸ்பெயின் தேசத்திலும் நடந்துவந்தது. அவர்களுடைய நாகரிகமுறைகள் பலவற்றை ஐரோப்பியர்கள் அறிந்துகொண்டார்கள்.

### இந்தியாமீது படையெடுத்த முதல் மகம்மதியர்.

மகம்மது என்னும் போதகுரு இறந்த எண்பது வருஷங்களுக்குப் பிறகு கி-பி. 712-இல், காஸிம் என்பவருடைய குமாரரான மகம்மது என்பவர் ஒரு சிறிய சேனையுடன் இந்தியாமீது படையெடுத்து வந்தார். அவருடைய கப்பலொன்றை இந்துக்கள் கைப்பற்றிக்கொண்டு அவரிடம் திருப்பிக் கொடாமையால் அவர் கோபம் அடைந்து யுத்தத்துக்கு வந்தார். அப்போது சிந்து தேசத்தில் ரஜபுத்திரர்கள் அரசாட்சி செய்துகொண்டிருந்தார்கள். யுத்தத்தில் ரஜபுத்திர அரசர் இறந்துபோக அவருடைய ராணியார் வெகுகாலம்வரையில் தைரியமாக மகம்மதுவுக்கு இடங்கொடாமல் தமது ராஜ்யத்தைக் காத்து நின்றார். பின்பு ரஜபுத்திரர்களுடைய ஆகாரம் குறைந்துபோகவே அந்த ராணியார் அக்கினியை வளர்த்து அதில் பிராணனை விட்டார். அதற்குப்பிறகு சிலகாலம் சிந்து தேசமானது மகம்மதியர்களுடைய அரசாட்சியில் இருந்தது.

## 17. கஜினிமகம்மது.

(997–1030)

ஒரு காலத்தில் திராவிடர்களும், ஆரியர்களும், கிரேக்கர்களும், சித்தியர்களும் வந்ததுபோலவே ஆப்கானியர்களும், துருக்கியர்களும் வடமேற்குக் கணவாய்களின் வழி

யாக இந்தியாவுக்கு வந்தார்கள். இந்தியாவுக்குப் புறப்பட்டு வந்தவர்களுள் சில ஆரியர்களும், கிரேக்கர்களும் தார்த்தாரி தேசத்தில் பின்தங்கி, அங்கே குடியேறி, தார்த்தாரியர்களோடு சம்பந்தம் செய்துகொண்டனர்; அவர்கள் பாம்பரையினருக்கு 'துருக்கியர்கள்' என்று பெயர். பிறகு அரேபியர்கள் அவர்களை வென்று மகம்மதியர்கள் ஆக்கிவிட்டார்கள். அவர்களுடைய தேசம் துருக்கிஸ்தானம் என்று சொல்லப்படும். துருக்கியர்கள் நாகரிகத்தில் மேன்மையுற்றவர்கள். பழைய ஆரியர்களைப்போல் அவர்கள் அழகாகவும் உயரமாகவும் இருந்தார்கள்.

ஆப்கானிஸ்தானமென்பது இந்தியாவின் வடமேற்கிலுள்ளது. இந்தியாவுக்கு வருவதற்கு மார்க்கமாகவுள்ள வடமேற்குக் கணவாய்கள் யாவும் ஆப்கானிஸ்தானத்தைச் சேர்ந்தவை. கஜினி என்னும் நகரம் அதன் ராஜதானி. மேற்கூறிய துருக்கியர்கள் அங்கே அரசாட்சி செய்தார்கள். அவர்களுடைய அரசருக்கு ஸுல்தான் என்று பெயர். 1001-ஆம் ஆண்டில் மகம்மது என்னும் ஸுல்தான் கஜினியில் இருந்துகொண்டு ராஜ்ய பரிபாலனஞ் செய்தார். அவருக்கு 'கஜினி மகம்மது' என்றும் ஒரு பெயருண்டு. அக்காலத்தில் இந்தியாவானது செல்வம் கொழித்த தேசமாக இருந்தது. இந்தியர்கள் மேற்கே இருந்த ஜனங்களோடு வியாபாரஞ் செய்துகொண்டிருந்தார்கள். வியாபாரிகளுடைய போக்குவரவுக்கு ஆப்கானிஸ்தானம்தான் மார்க்கம்.

இந்தியாவிலிருந்து வியாபாரிகள் விலையுயர்ந்த சரக்குகளுடன் பாரசிகத்துக்குப் போவதை, கஜினி மகம்மது அடிக்கடி கவனித்ததுண்டு. இந்தியாவில் வளம்மிகுந்த நகரங்களைப்பற்றியும், செல்வம் நிறைந்த கோயில்களைப்பற்றியும் அவர்களிடமிருந்து அவர் கேள்வியுற்றார். அதுமுதல் இந்தியாவுக்கு வந்து ஏராளமான செல்வத்தைக் கொள்ளையடித்துக் கொண்டுபோக வேண்டுமென்றும், இந்தியாவில் மகம்மதிய மதத்தைப் பரவச்செய்ய வேண்டுமென்றும் அவருக்கு ஆசை உண்டாயிற்று.

இந்த ஆசையினால் மகம்மது இந்தியாவின்மீது பதினேழுமுறை படையெடுத்து ரஜபுத்திரர்களுடைய ராஜதானிகளைக் கைப்பற்றிக்கொண்டார். ஒருமுறை அவர் ஜயபாலரென்னும்

ரஜபுத்திர அரசரை யுத்தத்தில் வென்று அவரைக் கைதியாக்கினர். சில காலத்துக்குப்பிறகு ஜயபாலருடைய குடிகள் ஏராளமான திரவியத்தை மகம்மதுவினிடம் கொடுத்து அவரை மீட்டுக்கொண்டு அழைத்துச் சென்றார்கள். ஆனாலும் தாம் தோல்வியடைந்ததில் சிறிதும் மனம்பொறுமல் தம் ராஜ்யத்தைத் தம் குமாரரான அனங்கபாலரிடம் ஒப்பித்துவிட்டு ஜயபாலர் தம்முயிரை மாய்த்துக்கொண்டார். பிறகு மகம்மது ஒரு பெரிய படையுடன் அனங்கபாலரை எதிர்த்துச் சென்றார். அப்போது ரஜபுத்திரர்களெல்லாரும் ஒன்றாய்ச் சேர்ந்து மகம்மதுவை எதிர்த்து நின்றார்கள். ஆனால் அவர்களையெல்லாம் மகம்மது அழித்து நாகர்கோட்டை என்னும் பலமான கோட்டையை நிர்மூலமாக்கினர். அதினின்றும் அவருக்கு ஏராளமான ஐசுவரியம் கிடைத்தது. பிறகு முல்தான், தனேசுவரம், கன்னேசி முதலிய ரஜபுத்திர நகரங்களையெல்லாம் வெல்வதற்காகத் தம் சைனியங்களுடன் சென்று பல முறை ரஜபுத்திரர்களால் அபஜயமடைந்தார்.

பழையகாலத்தில், கூர்ஜரத்தில் சோமநாதர் கோயிலென்ற பிரசித்திபெற்ற ஆலயம் ஒன்றுண்டு. ரஜபுத்திரர்களும் மற்ற இந்தியர்களும் ஏராளமான விலையுயர்ந்த நகைகளையும், தங்கம், வெள்ளி முதலியவற்றாலான பாத்திரங்களையும் காணிக்கைகளாக அதற்குக் கொடுத்திருந்தார்கள். இந்த விஷயத்தை அறிந்த மகம்மது அக்கோயிலை யிடித்து அதிலுள்ள பொருள்களையெல்லாம் கொள்ளையிட நிச்சயித்தார். அப்போது கோயிலதிகாரிகள் பலவிதமாக அவரை நயந்து கேட்டும் அவர் சிறிதும் செவிகொடாமல் கொள்ளையிடத் தொடங்கினர். இந்தியர்கள் பதினன்கு தினங்கள்வரையில் அதைத் தங்களாலானமட்டும் தைரியமாகக் காத்துவந்தும் முடியாமல் அதை விட்டுவிட்டு ஓடிப்போக நேர்ந்தது. அப்போது மகம்மது கோயிலுக்குள்ளே புகுந்து விக்கிரகங்களை யெல்லாம் தம் கையினலேயே உடைத்துத் தள்ளி அளவற்ற தங்க நகைகளையும் ரத்தினபாணங்களையும் கொள்ளையிட்டு அவற்றைப் பல யானைகளின்மேல் ஏற்றித் தம் ராஜதானிக்கு அனுப்பினர்.

மகம்மது இவ்வளவு துஷ்டராக இருந்தும் அவரிடத்தில் சில நற்குணங்கள் இருந்தன. தாம் கொள்ளையிட்ட

பொருளையெல்லாம் தமது நாட்டின் கல்வியபிவிருத்தி விஷயத்தில் செலவிட்டதல்லாமல் பல வித்துவான்களை யாதரித்தும்வந்தார். சிறந்த பாரசிக கவியாகிய பர்தூஷியென்பவரும் வானசாஸ்திர விற்பன்னரான ஆல்பர்னியென்பவரும் அவருடைய ஆஸ்தான வித்துவான்கள். அந்த வானசாஸ்திரி இந்தியாவைப்பற்றி ஒரு சரித்திரம் எழுதிவைத்திருக்கிறார். அக்காலத்து இந்திய சரித்திரத்தைத் தெரிந்துகொள்ளுவதற்கு அது தக்க ஆதாரமாகவுள்ளது.

பலமுறை இந்தியாமீது படையெடுத்துவந்தாலும் இந்தியாவிலேயே நிலைபெற்று ஒரு ராஜ்யத்தை ஸ்தாபிக்கவேண்டுமென்ற ஆசை மகம்மதுவுக்கு இல்லை. அவர் கி-பி. 1030-இல் இறந்துபோனார். அவர் இறந்தபிறகு இருநூறு வருஷம்வரையில் ரஜபுத்திரர்கள் தங்கள் ராஜ்யங்களை அமைதியாக ஆண்டுவந்தார்கள்.



## 18. மகம்மத் கோரி.

(1190–1206.)

கஜினிவம்சத்தவர்கள் நூற்றைம்பது வருஷம் உன்னத நிலையிலிருந்தார்கள். பிறகு வடமேற்கில் 'கோரி' என்னும் நகரத்திலிருந்த ஒரு புதிய குடும்பத்தார்கள் ஆதிபத்தியத்தை அடைந்தார்கள். அவர்களுடைய தலைவருக்கு 'மகம்மத் கோரி' என்று பெயர். அவரும் கஜினிமகம்மதுவைப்போலவே தைரியமும் போர்வன்மையும் பொருளாசையுமுள்ளவர். ரஜபுத்திர அரசர்களுக்குள்ளே கலகங்கள் ஏற்பட்டமையால் அவர் இந்தியாமீது படையெடுத்துவருவதற்கு அனுகூலம் ஏற்பட்டது.

அக்காலத்தில் கன்னோசி ராஜ்யமானது ஜயசந்திருடைய அரசாட்சியிலிருந்தது. அவர், தாமே ராஜாதி ராஜரென்று எல்லாருக்கும் தெரிவிக்கும்பொருட்டு ஒருமுறை அசுவமேதயாகம் செய்தார்; ஆஜ்மீருக்கும் டில்லிக்கும் அதிபதியான பிருதிவிராஜா அவருக்கு அடங்கியிருக்க இஷ்டப்படவில்லை.

பிறகு ஜயசந்திருடைய குமாரியான ஸம்யுக்தையின் சுயம்வரம் நடந்தபோது பிருதிவிமன்னரைத் தவிர மற்ற எல்லா அரசர்களும் அழைக்கப்பட்டிருந்தார்கள். அவரை அவமானப்படுத்த எண்ணி ஜயசந்திரர் அவரைப்போல் உருவமொன்று செய்வித்து அதனைச் சுயம்வர மண்டபத்து வாசலில் நிறுத்திவைத்தார். ஸம்யுக்தை பிருதிவி மன்னரையே மணம் புரிந்துகொள்ளத் தீர்மானித்திருந்தமையால் அங்குவந்திருந்த அரசகுமாரர்களுளொருவரையும் கண்ணெடுத்துப் பாராமல் கையிலிருந்த மணமாலையை அந்த உருவத்துக்குச் சூட்டினுள். அதனையறிந்த பிருதிவிராஜர் கன்னேசிக்கு வந்து அவளைத் தூக்கிக் கொண்டு போய்விட்டார். அவரை ஜயிப்பதற்கு ஜயசந்திரரால் முடியவில்லை. அதற்காகத் தமக்கு உதவிசெய்யும்படி மகம்மதுகோரியை அழைத்தார். எங்கேயெங்கேயென்று காத்துக்கொண்டிருந்த அவர் அதுதான் சமயமென்று ஒரு பெருத்த படையுடன் கி-பி. 1190-இல் இந்தியாவுக்கு வந்தார். ஜயசந்திரரைத்தவிர மற்ற எல்லாரும் ஒன்றுசேர்ந்துகொண்டு அவரை யெதிர்த்து 1190-இல் தனேசுவரத்துக்குச் சமீபத்திலுள்ள தாராவரி என்னுமிடத்தில் அவரை வென்ருர்கள். அவர் தம் நகரத்துக்குப் போய்விட்டு மறுபடியும் இரண்டு வருஷங்களுக்குப்பிறகு மிகப்பெரிய சேனையுடன் இந்தியாவுக்கு வந்தார்; அதே இடத்தில் மற்ருெருமுறை யுத்தம் நடந்தது. பிருதிவிமன்னருடைய சேவகனெருவன் துரோகசிந்தனையுடன் மகம்மதுகோரிக்கு உதவிசெய்ததால் அவர் வெற்றியடைந்தார். அந்த யுத்தத்துக்குப்பிறகு ஆஜ்மீரும் டில்லியும் அவருக்குச் சுவாதீனமாயின. தம்முடைய விரோதியை ஜயசந்திரர் அழைத்து வைத்துக்கொண்டிருந்தார் என்ற ஒரு காரணத்துக்காக அவரைக் கன்னேசியிலிருந்து துரத்திவிட்டு அதையும் மகம்மது கோரி தம் வசமாக்கிக்கொண்டார்.



மகம்மத் கோரி.

மகம்மத் கோரி இந்தியாவுக்கு ஒன்பதுமுறை படையெடுத்துவந்தார். அவர் கொள்ளையிட்ட நகரங்கள் கஜினி மகம்மது கொள்ளையிட்டவைகளைக்காட்டிலும் மிகுந்த செல்வமுள்ளவை. காசியில் ஏறக்குறைய ஆயிரம் ஆலயங்களை நாசமாக்கி அங்கே கிடைத்த பொருளைப் பல ஒட்டகங்களின்மீது ஏற்றிக்கொண்டு போனார். அவருடைய சேனாதிபதிக்கு 'குத்புடீன்' என்று பெயர். மகம்மது கோரி அயலிடங்களுக்குப் போகும்போதெல்லாம் அவரே ஊரிலிருந்துகொண்டு ராஜ்யாதிகாரம் நடத்திவந்தார். அவர் பல இடங்களையும் வென்று வட இந்தியா முழுவதையும் ஆப்கானியருடைய ஆட்சிக்குக் கொண்டுவந்தார்.

மகம்மத் கோரிக்குப் புருஷ சந்ததியில்லை. அவர் இறந்த பிறகு அவர் சேனாதிபதிகளில் ஒருவன் ஆப்கானிஸ்தானத்தைப் பிடித்துக்கொண்டான். இந்திய மாகாணங்களின் அரசாட்சியை, குத்புடீன் கைக்கொண்டார். டில்லி அவருடைய ராஜதானியாக இருந்தது. அவரால் பல ரஜபுத்திரர்கள் துரத்தப்பட்டு அரவல்லிமலைக்குப் பக்கத்திலுள்ள காடுகளில் குடியேறினார்கள். அந்த இடத்துக்கு ராஜபுதனம் என்ற பெயர் வழங்கலாயிற்று.

## 19. டில்லியில் ஆண்ட சுல்தான்கள்.

(1206–1526.)

### அடிமை யரசர்கள்.

(1206–1290.)

பழையகாலத்தில் யுத்தத்தில் தோற்றுப்போனவர்களை அயல் தேசங்களுக்குக் கொண்டுபோய் அடிமைகளாக விற்றுவிடுவது மகம்மதியர்களுக்குள் வழக்கமாக இருந்தது. அல்லாமலும் அவர்களை மகம்மதிய மதத்தில் சேரும்படி நிர்ப்பந்திப்பதுமுண்டு. அவ்வடிமைகள் தங்கள் எஜமானர்களையும் அவர்கள் குடும்பத்தார்களையும் தங்கள் உறவினர்களைப்போலவே பாவித்து அவர்களிடம் பிரியமாக நடந்து வந்தார்கள். சந்ததிகளில்லாத எஜமானர்கள் அடிமைகளையே

ஸ்வீகாரம் செய்துகொண்டு சொந்தப் பிள்ளைகள்போல் நடத்திவந்தார்கள். குத்புடீன் அவ்வகையான அடிமைகளில் ஒருவர். அவர் தம் இளமைப் பருவத்தில் யுத்தத்தில் கைதியாக்கப்பட்டு மகம்மது கோரிக்கு அடிமையானர். மகம்மது கோரிக்குக் குழந்தைகள் இல்லாமையால் அவர் குத்புடீனையே தம் பிள்ளையாக வளர்த்துவந்து தம் சேனைகளுக்கு அவரை அதிபதியாக்கினர். அதனுல்தான் அவர் இறந்தபிறகு குத்புடீன் பட்டத்துக்குவந்தார். கொஞ்சகாலம் அடிமையாக இருந்தமையால் அவருக்கும் அவர் சந்ததியார்களுக்கும் அடிமையரசர்கள் என்ற பெயர் ஏற்பட்டது.



குத்புடீன்.

குத்புடீன் தைரியமுள்ள சிறந்த யுத்தவீரர். தமக்குக் கீழ்ப்பட்டவர்களை அவர் மிகவும் பிரியமாக நடத்திவந்ததோடு சமயங்களில் அவர்களுக்கு நிலமும் பொருளும் கொடுத்து உதவி செய்தார். 250 அடி உயரமுள்ள 'குட்டுப் மினர்' என்ற அழகிய கல்ஸ்தம்பம் ஒன்று டில்லி நகருக்கு அருகில் அவரால் கட்டப்பட்டது. உலகத்திலுள்ள ஸ்தம்பங்களுள் அதுதான் உயரமானது. அது குத்புடீனல் கட்டப்படவில்லை யென்று சிலர் கருதுகிறுர்கள்.



சல்தான் ரெஜியா.

குத்புடீன் அரசாக இருந்தது நான்கு வருஷகாலமே. அவர் பாரம்பரையில் டில்லியை ஆண்டவர்கள் எண்மர்: அவர்



டெல்லியிலிருக்கும் குட்டுப் மினர்.

களுள் சுல்தான் ரேஜியா என்பவள்மட்டும் ஸ்திரீயாக இருந்து அரசாட்சி செய்தவள். அவள் நன்றாகப் படித்தவள்; தைரியமும், தந்திரமும் உள்ளவளாதலால், செவ்வையாக ராஜ்ய பரிபாலனஞ் செய்தாள். ஆனாலும் தனது கொடிய பிரதானிகளை அடக்கியாள முடியாமல் அவர்களால் கொலையுண்டாள். அவளுக்குப்பிறகு பட்டத்துக்கு வந்த நசருத்தீன் என்பவர் விசேஷமான தெய்வபக்தி யுள்ளவர்; கடவுளைத் தொழுவதிலேயே தம் காலத்தை அதிகமாக அவர் போக்கிவந்

தார். ராஜ்யாதிகாரத்தை அவருடைய மந்திரி நடத்தினான். மொகலாயர்கள் படையெடுத்து வந்தபோது அவர்களை அவன் வென்றான். துரைத்தன வரும்படி முழுவதையும் ஜனங்களுடைய நன்மைக்காகவே நசருத்தீன் செலவிட்டுவந்தார்; தம் ராணிக்கு உதவியாக ஒரு வேலைக்காரியைக்கூட அவர் ஏற்படுத்தவில்லை. அவருக்குப் பிறகு பட்டத்துக்கு வந்த அவருடைய மந்திரி மிக்க கொடியவன்; ஆனாலும் படித்தவர்களிடம் விசேஷமான பிரியமுள்ளவன். அவனுடைய பேரன் பின்பு பட்டத்துக்கு வந்தான். அவன் உபயோகமற்றவன். பிறர் சொல்லும் புத்திமதிகளை அவன் கேட்பதில்லை. அவனோடு அடிமை யரசருடைய அரசாட்சி முடிவுக்குவந்தது.



நசருத்தீன்.



## 20. கில்ஜிவம்சத்து அரசர்கள்.

(1290-1320.)

கில்ஜிவம்சத்தார்கள் துருக்கியர்களில் ஒருவகையார். ஜலால்உத்தீன் என்பவர் அந்த வம்சத்துக்கு மூலபுருஷர். அவர் கடைசி அடிமையரசனுடைய தளகர்த்தராக இருந்து அவனைக் கொன்று பட்டத்துக்கு வந்தார். அவர் திறமையற்றவர். அவர்காலத்தில் பல கலகங்கள் நடந்தன. அவைகளை அவரால் அடக்க முடியவில்லை. அவருடைய சகோதரரின் குமாரரான அல்லா-உத்-தீன் என்பவர் அக்காலத்தில் பிரபலமாக இருந்தார். அவர் பல பிரதானிகளையும் அடக்கி அரசருக்குக் கீழ்ப்படியும்படி செய்தார். அவர் ஒருமுறை 1294-ஆம் ஆண்டில் தக்காணத்துக்குப் படையெடுத்துச் சென்றார். முதல் முதல் தக்காணத்தில் அடிவைத்த மகம்மதியர் அவரே.

மகாராஷ்டிர தேசத்தின் பிரதான நகரமாகிய தேவகிரியை அவர் முற்றுகையிட்டார். இந்தியர்கள் அவருக்கு அளவற்ற திரவியத்தையும் சில ராஜ்யங்களையும் கொடுப்பதாக ஒப்புக்கொண்டார்கள். ஜலால் உத்தீனை அவர் வஞ்சனையாகக் கொன்று டில்லியில் சிம்மாசனம் ஏறினார்.


அலாஉத்தீன்.

அலாஉத்தீன் 1296 முதல் 1316 வரையில் அரசாட்சி செய்தார். கூர்ஜரத்தை அடக்கி அந்நாட்டு அரசன் மனைவியைக் கலியாணம் செய்துகொண்டார். மொகலாயர்கள் அவர்காலத்தில் இந்தியாவின்மேல் படையெடுத்து வந்தபோது அவரால் துரத்தப்பட்டார்கள்.

பிறகு அலாஉத்தீன் ராஜபுதனத்தை நோக்கிச் சென்று சித்தூரை முற்றுகையிட்டுப் பல ரஜபுத்திரர்களைக் கொன்றார். பல ரஜபுத்திர ஸ்திரீகள் தங்கள் புருஷர்கள் இறந்துபோனதில் மனம் பொறாமல் தீக்கு இரையானார்கள். சித்தூர் ராணியான பத்மினி யென்பவள் மிக்க அழகுள்ளவள். அவளைத் தம்முடைய மனைவியாக்கிக் கொள்ளவேண்டுமென்ற கெட்ட எண்ணங்கொண்டு அலாஉத்தீன் அவள் புருஷனைச் சிறையில் இட்டார். ஆனாலும் அவள் ஒரு தந்திரம்செய்து தன் புருஷனைச் சிறைமீட்டு அலாஉத்தீனோடு தைரியமாக யுத்தம் செய்தாள். அவளுடைய வீரச்செயல் யாவராலும் புகழத்தக்கது. பலவாறு முயன்றும் ஜபுத்திரர்களை முற்றிலும் அடக்க அலாஉத்தீனால் முடியவில்லை.

மறுபடியும் தக்காணத்தை நோக்கிப் படையெடுக்கவேண்டுமென்னும் எண்ணம் அலாவுத்தீனுக்கு உண்டாயிற்று. அதனால் அவருடைய சேனாதிபதியான மலிகாபூர் என்பவனை ஒரு படையுடன் அனுப்பினார். மகாராஷ்டிர அரசன் கப்பங் கட்டாததால் மலிகாபூர் முதலில் தேவகிரியை நோக்கிச் சென்றான். பிறகு வாரங்கல் என்னும் இடத்தை ஜயித்து, கிருஷ்ணா நதியையும் கோதாவரியையும் கடந்து மைசூர் ராஜ

யத்தில் பிரவேசித்து அதன் ராஜதானியான துவார சமுத்திரத்தைக் கைப்பற்றிக்கொண்டார். மைசூர் அரசனால் ஹலிபெட் என்னும் இடத்தில் கட்டப்பட்டுவந்த ஓர் ஆலயத்தின் வேலையானது மலிகாபூருடைய படையெடுப்பினால் முற்றுப் பெறாமல் நின்றுவிட்டது. அது அபூர்த்தியாக இருந்தும் பார்ப்பதற்கு மிகவும் அழகாகவுள்ளது. மலிகாபூர் பிறகு ராமேசுவரம்வரையில் சென்று வழியில் பல மசூதிகளைக் கட்டி விசேஷமான கொள்ளைப்பொருளுடன் டில்லிக்குத் திரும்பிச் சென்றான்.

அலாஉத்தீன் பலதேசங்களை வென்றும் இந்தியர்கள் அவரிடம் அதிககாலம் அடங்கியிருக்கவில்லை. கூர்ஜாதேசத்தார்கள் கலகம் செய்யத் தலைப்பட்டார்கள். சித்தூர்க் கோட்டைக்குக் காவலாக அலாஉத்தீனால் வைக்கப்பட்டிருந்த சேனையை வெளிக்கிளப்பிவிட்டு ரஜபுத்திரர்கள் சுவாதீனம் கொண்டாடினார்கள். தேவகிரியிலிருந்து மகம்மதியர்கள் துரத்தப்பட்டார்கள். அலாஉத்தீனுடைய கடைசிக்காலம் அவருக்கு நன்றாக இல்லை.

இந்தியா முழுவதையும் ஜயித்து ஆண்ட முதல் மகம்மதிய அரசர் அவரே; இந்திய ஸ்திரீயை மணம்செய்து கொண்ட முதல் மகம்மதியரும் அவரே. தம் குமாரனுக்கு ஒரு ரஜபுத்திரப் பெண்ணை அவர் விவாகம் செய்துவைத்தார். இந்தியர்களென்றும் மகம்மதியர்களென்றும் வித்தியாசம் பாராட்டாமல் எல்லாரையும் சமமாக நடத்திவந்தமையால் அவர் அரசாட்சியில் எல்லாரும் திருப்தியாக இருந்தார்கள்.

அலாஉத்தீனுக்குப் பிறகு அவர் குமாரரான முபாரக் பட்டத்துக்கு வந்தார். அவர் கொடுங்கோல் மன்னராக இருந்தமையால் அவருடைய குடிகளே அவருக்கு விரோதமாகக் கிளம்பினார்கள். பஞ்சாபை ஆண்ட துக்லக் வம்சத்து அரசரொருவர் அவரை அடக்கி டில்லியில் முடி சூட்டிக் கொண்டார்.

# 21. துக்லக் வம்சம்.

(1320–1413.)

துக்லக் வம்சத்தில் இரண்டாம் அரசரான மகம்மதுபின் துக்லக் என்பவர் 1321 முதல் 1351 வரையில் அரசாட்சி செய்தார். அவரிடம் சில நற்குணங்களும் சில துர்க்குணங் களும் கலந்திருந்தன; அவர் சிறந்த கல்விமான்; படித்த வர்களை மிகவும் கௌரவமாக நடத்தினர். சாதாரணமான ஏழைமனிதனைப்போலவே அவர் காலங்கழித்து வந்தார். மனத்தில் எது பட்டதோ அதைப்பற்றிச் சிறிதும் ஆலோ சனைசெய்யாமலே அவர் செய்து முடித்துவிடுவார். ஆதலால் அவரை 'கற்றறிமூடர்' என்று சொல்வது பொருத்தமாகும்.

மொகலாயர்கள் அவர்காலத்தில் இந்தியாமீது படை யெடுத்து வந்தார்கள். அப்போது அவர் அவர்களுக்கு விசேஷமான பொருளைக் கொடுத்துத் தம் ராஜ்யத்தை ஒன் றும் செய்யாமலிருக்கும்படி கேட்டுக்கொண்டார். இவ்வ ளவு வீரத்தன்மையுள்ள அவருக்குச் சைனுவையும், பாரசீ கத்தையும் ஜயிக்கவேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. அதற்காக அளவற்ற பொருளைச் செலவிட்டு அவர் பல சே னைகளைத் திரட்டி அவ்விடங்களுக்கு அனுப்பினர். ஆனல், அங்கே போனவர்களில் ஆயிரக்கணக்கானவர்கள் வழியில் குளிராலும், பசியாலும் வருந்தி இறந்தார்கள்.

தம் ராஜதானியை டில்லியிலிருந்து தேவகிரிக்கு மாற்ற எண்ணி டில்லியில் இருந்த ஜனங்களையெல்லாம் அவர் அவ் விடம் போகச்சொன்னர். வழியில் ஆகாரத்துக்கு வழி யில்லாமல் அநேகர் மாண்டார். உயிர்தப்பிச் சென்றவர்க ளுக்கும் புது இடத்தில் வசிக்க இடமில்லை; உடனே அவர் களை மறுபடியும் டில்லிக்கே போகும்படி கட்டளையிட்டார்.

உபயோகமற்ற விஷயங்களிலெல்லாம் அவர் தமது பொக் கிஷத்துப் பணத்தை ஏராளமாகச் செலவிட்டார். பிறகு வெள்ளி நாணயங்களுக்குப் பதிலாகச் செப்பு நாணயங்களை உபயோகிக்கும்படி ஏற்பாடு செய்தார். வரிகளெல்லாம் செப்பு நாணயத்திலேயே செலுத்தப்பட்டதால் ஜானு முழு வதும் செப்பு நாணயங்களே நிறைந்திருந்தன. அவருடைய

ராஜ்யத்தில் ஜனங்களுக்குள்ளேயே குழப்பம் உண்டாயிற்று. பலர் கிராமங்களை விட்டுவிட்டுக் காடுகளுக்குப் போனார்கள். பாக்கியிருந்தவர்களையும் அவர் காட்டுக்குத் துரத்தி அவர்களை மிருகங்களைப்போல் வேட்டையாடினார். அந்தக் கடுமையான காரியங்களைக்கண்டு மனம் சகியாமல் பல பிரதானிகள் அவருக்கு விரோதமாகக் கிளம்பிப் பற்பல சிறு ராஜ்யங்களை ஏற்படுத்திக்கொண்டு அவற்றிற்கு அதிபதிகளாக இருந்தார்கள்.

அவருக்குப்பிறகு பட்டத்துக்கு வந்த பிரோஸ்ஷா என்பவர் 1351 முதல் 1388 வரையில் அரசாட்சி செய்தார். மகம்மது பின் துக்லக் எவ்வளவு கொடியவராக இருந்தாரோ பிரோஸ்ஷா அவ்வளவு நல்லவராக இருந்தார். அவருடைய துரைத்தனம் ஜனங்களால் மிகவும் கொண்டாடப்பட்டது. பொது நன்மையான பல காரியங்களை அவர் செய்தார். பல புதிய சாலைகளை அமைத்து, கால்வாய்களை வெட்டி, யமுனை நதிக்கும், ஸெட்லஜ் நதிக்கும் அணைக்கட்டுகள் கட்டினார். வயல்களுக்கு ஜலம் குறைவில்லாமல் பாயும்படி பல ஏற்பாடுகள் செய்தார். வழிப்போக்கர்கள் தங்கியிருத்தற்குரிய பல சத்திரங்கள் அவரால் கட்டப்பட்டன. பல கல்விச்சாலைகளை உண்டாக்கினார். பல வைத்திய சாலைகளும், கணித சாஸ்திரிகளுக்கு உபயோகமான மண்டபங்களும் அவரால் ஏற்படுத்தப்பட்டன. வேண்டிய இடங்களில் குளங்கள் வெட்டப்பட்டன. ஆறுகளுக்கு அங்கங்கே பாலங்கள் அமைக்கப்பட்டன. இவற்றையெல்லாம் பார்க்கும்போது அவருக்கு ஜனங்களிடத்தில் இருந்த அன்பும் இரக்கமும் புலப்படுகின்றன. அவருக்குப்பிறகு வந்த அரசர்கள் சாமர்த்திய சாலிகளாக இல்லை. அடிக்கடி வந்துதாக்கிய மொகலாயர்களை அவர்களால் எதிர்க்க முடியவில்லை. மொகலாயர்களுக்குத் தலைவராக இருந்தவர் தைமூர் என்பவர்.

முடத் தைமூர்.

தைமூர் ஒரு துருக்கியர்; உயரமாகவும் அழகாகவும் இருந்தார். ஆனால் ஒற்றைக்கால் நொண்டியானவர். அவர் மிகவும் கடுமையான குணமுடையவர். அவர் இருந்த திக்கி

லேயே இரக்கமென்பது இல்லை. அவரைக்காட்டிலும் அதிக மான உயிர்க்கொலைபுரிந்த அரசர் எவருமில்லையென்று சொல் லுகிறார்கள்.

தார்த்தாரியர்களும், துருக்கியர்களும், பாரசீகர்களும் அடங்கிய ஒரு பெருத்த சேனையைக் கூட்டிக்கொண்டு அவர் ஆப்கானிஸ்தானத்தின் வழியாகவும், பஞ்சாபின் வழியாகவும் டில்லியை நோக்கிப் படையெடுத்து வந்தார். டில்லியிலிருந்த ஜனங்கள் நடுநடுங்கிப் போய்விட்டார்கள். டில்லி ஸுல்தான் கோட்டைமதிலில் ஒளிந்துகொண்டு தைமூர் வந்ததும் அவரை எதிர்த்தார். ஆனால் தைமூர் அவர்மேல் பாய்ந்து அவர் சேனைகளையெல்லாம் அழித்தார். இரக்கமற்ற தார்த்தாரியர்கள் டில்லி ஜனங்களைப் பதினைந்து தினங்கள்வரையில் கத்திக்கு இரையாக்கிக்கொண்டேயிருந்தார்கள்; அவர்களுடைய வீடுகளையெல்லாம் கொளுத்திவிட்டார்கள். தைமூர் ஐந்து மாதம் இந்தியாவில் இருந்துவிட்டுக் கணக்கிட முடியாத திரவியங்களுடன் துருக்கிஸ்தானம் போய்ச் சேர்ந்தார்.



தைமூர்.

## 22. சைய்யத்வம்சமும் லோடிவம்சமும்.

(1413–1451.; 1451–1526.)

துக்லக் அரசர்களுக்குப்பிறகு ஸைய்யத் என்னும் வம்சத்து அரசர்கள் நால்வர் ஏறக்குறைய நாற்பது வருஷகாலம் இந்தியாவில் அரசாட்சி செய்தார்கள். வரவர அவர்களுடைய ராஜ்யம் க்ஷீணித்துப்போயிற்று. அவர்களுக்கு அடங்கியிருந்த சிறிய ராஜ்யங்களெல்லாம் சுவாதீனமுற்றன. பிறகு லோடி என்னும் வம்சத்தார்கள் இந்தியாவின் அரசாட்சி

யைக் கைக்கொண்டார்கள். அவர்கள் ஆப்கானிஸ்தானத்திலிருந்துவந்த பட்டாணியர்கள். இப்ராகீம் என்பவர் லோடி வம்சத்தில் கடைசி அரசர்; அவருடைய சேனை அடிக்கடி அவருக்கு விரோதமாகக் கலகம் செய்ததுண்டு. யுத்தவீரர்களுக்கு அவர் கடுமையான சிக்ஷை விதித்ததால் ராஜ்யத்தில் குழப்பமும் கலகமும் உண்டாயின. அப்போது பஞ்சாபில் அவருக்குப் பிரதிநிதியாக இருந்த ஒருவன் ஆப்கானிஸ்தானத்தில் அரசராக இருந்த பேபரென்னும் மொகலாயரை இந்தியாமீது படையெடுத்து வரும்படி கேட்டுக்கொண்டான். பேபர் தைமூருடைய பரம்பரையிற் பிறந்தவர். அவருக்கு இந்தியாவை ஜயிக்கவேண்டுமென்று வெகுகாலமாக ஆவல் இருந்தது. ஆதலால் பஞ்சாப் பிரதிநிதி அழைத்தபோது அவர் அதற்கு உடன்பட்டு டில்லிக்குச் சென்று கி-பி. 1526-இல் பானிப்பட்டு என்னுமிடத்தில் இப்ராகீம் லோடியை வென்றார். இந்த வெற்றியே மொகலாயர்கள் டில்லியில் அரசாட்சி செய்யக் காரணமாக இருந்தது.

### வட இந்தியாவிலுள்ள ராஜ்யங்கள்.

மகம்மதுபின் துக்லக் காலத்துக்குப் பிறகு டில்லி ராஜ்யமானது பலத்திலும் விஸ்தீரணத்திலும் குறைந்துபோயிற்று; பற்பல சிறிய ராஜ்யங்கள் உண்டாயின. அலகபாத்தையும் அயோத்தியையும் சுற்றி ஒரு புதிய ராஜ்யம் ஏற்பட்டது. நருமதைக்கும் அரவல்லிமலைக்கும் நடுவில் உள்ள ராஜ்யத்திக்கு மாளவம் என்று பெயர். பல ரஜபுத்திர ராஜ்யங்களுக்கு மத்தியில் சிறந்த மகம்மதிய ராஜ்யமொன்று நூற்றுமுப்பது வருஷகாலம் பிரபலமாக இருந்தது. அரவல்லிமலைக்கு மேற்கேயுள்ள தேசம் மகம்மதியர்களால் கைப்பற்றப்படவேயில்லை. ரஜபுத்திர ராஜ்யங்களுக்குள் முதன்மையானது உதயபுரி அல்லது சித்தூர். அங்கேயிருந்த அரசரொருவர் மாளவதேசத்திலிருந்த ஸுல்தானை வென்று சித்தூரில் ஜயஸ்தம்பம் ஒன்று நாட்டினர்.

மகம்மதியர்களுடைய காலத்தில் அவர்களுடைய ஆட்சிக்கு உட்படாத சில ராஜ்யங்கள் இருந்தன. அவற்றுள் காஷ்மீரமும், நேபாளமும், பூடானும், அஸ்ஸாமும் முக்கியமானவை. ஒரிஸ்ஸாவும், மத்திய இந்தியாவும் இந்தியர்களு

டைய ஆட்சியிலேயே இருந்தன. டில்லி ராஜ்யம் பலக்குறைவை அடையவே பல மகம்மதிய ராஜ்யங்களும், இந்திய ராஜ்யங்களும் பிரபலத்துக்கு வந்தன. தென்னிந்தியா முழுவதும் ஒருவராலும் வெல்லப்படாமல் இந்து அரசர்களுடைய ஆட்சியிலேயே யிருந்தது.

**டில்லி அரசர்களுடைய காலத்தில் ஜனங்களின் நிலைமை.**

துரைத்தனம் நாகரிகக் குறைவுள்ளதாக இருந்தது. எந்த இடத்திலும் அரசர்கள் கொடுங்கோல் மன்னர்களாகவும் இரக்கமற்றவர்களாகவும் பெரும்பாலும் இருந்துவந்தார்கள். துரைத்தனமுறையின் சீர்க்குறைவைத் தடுக்கக்கூடிய சபைகள் இல்லை. ஜனங்களிடமிருந்து கிடைக்கும் வரும்படியை இன்னவிதமாக உபயோகிக்கலாம் என்று அரசனுக்குச் சொல்லத்தகுந்த ஆலோசனைச் சபைகளுமில்லை. அரசனுக்கு எது தோன்றியதோ அதுதான் சட்டமாக இருந்தது. அவ்வாறு இருந்தாலும் சில அரசர்களுடைய அரசாட்சியில் ஜனங்கள் திருப்தியாக இருந்தார்கள் என்று தெரிகிறது. கிராம பரிபாலனவிஷயத்தில் இந்தியர்கள் கொண்டிருந்த முறையை மகம்மதிய அரசர்கள் கெடுக்கவில்லை. இந்தியாவை ஆண்ட அரசர்கள் வெவ்வேறு மதத்தினர்களாக இருந்தாலும் இந்தியர்களுடைய மதக்கொள்கைகளும் ஆசாரங்களும் கெடாமலிருந்தன. சிலர் வைஷ்ணவ மதத்திலும் வேறு சிலர் சைவத்திலும் பற்றுள்ளவர்களாக இருந்தார்கள். ராமானந்தர், கபீர்தாஸ், நானக்ஷா, சைதன்னியர் முதலிய மதசித்தாந்திகள் தோன்றி வெவ்வேறு மதங்களைப் பாவச்செய்தார்கள்.

**ராமானந்தர்** இந்திபாஷையை வடக்கே பரவச்செய்து அந்தப் பாஷையிலேயே வைஷ்ணவமதத்தைப்பற்றி உபந்நியாசங்கள் புரிந்தார். வைஷ்ணவமதத்தில் விசேஷமான பக்தி கொண்டு அதைப் பரவச்செய்தவர்களுள் அவர் ஒருவர்.

**கபீர்தாஸ்** என்பவர் ராமானந்தருடைய சிஷ்யர். இந்தியர்களையும் மகம்மதியர்களையும் ஒன்றுசேர்த்து ஒரு புதிய மதத்தை ஸ்தாபிக்கவேண்டுமென்று அவர் முயன்றுவந்தார். அவரை இந்தியர்களும், மகம்மதியர்களும் நேசித்துவந்தார்கள். அவரை இந்தியர் என்று இந்தியர்களும், மகம்மதியர் என்று மகம்மதியர்களும் சொல்லுவார்கள்.

நானக்ஷா கபீர்தாஸைப்போலவே இந்தியர்களையும் மகம்மதியர்களையும் ஒன்றாக்க வேண்டுமென்று உழைத்துவந்தார். அவர் பஞ்சாபில் பிறந்தவர்.

பதினைந்தாம் நூற்றாண்டில் சைதன்னியர் என்பவர் வங்காளத்தில் பிறந்தார்; அவர் வைஷ்ணவர். ராமாநுஜரிடத்தில் தென்னிந்தியாவிலுள்ள ஜனங்களுக்கு எவ்வளவு பக்தியுண்டோ அவ்வளவு பக்தியை வங்காளிகள் அவரிடம் செலுத்திவந்தார்கள். இந்த மதசித்தாந்திகளுடைய நன்முயற்சியினால் ஸம்ஸ்கிருத பாஷையும் தேசபாஷைகளும் நாடெங்கும் பரவி விருத்தியடைந்தன.

அக்காலத்தில் வட இந்தியாவில் பல இடங்களில் கோயில்கள் கட்டப்பட்டன. அவற்றை நாம் இன்றைக்கும் பார்க்கலாம். கிராமங்களிலுள்ள நிலங்களின் பாசனத்துக்காகவும் ஜனங்களின் சௌக்கியத்துக்காகவும் பல குளங்களும் ஏரிகளும் கால்வாய்களும் வெட்டப்பட்டதல்லாமல் முக்கியமான இடங்களில் கால்வாய்களுக்கு அணைக்கட்டுகளும் கட்டப்பட்டன. சில இடங்களில் கிணறுகளின் உதவியினாலும் விவசாயம் நடந்துவந்தது; பலவகையான அன்னிய நாட்டார்கள் ஒருவர்பின் ஒருவராகப் படையெடுத்துவந்தும் தேசத்தில் கைத்தொழில்களும் வியாபாரமும் கெடாமல் செவ்வையாக நடந்துவந்தன. ஆசியா கண்டத்தின் மற்ற நாடுகளுக்கும் ஐரோப்பாவுக்கும் வியாபாரிகள் சாமான்களை அனுப்பிவந்தார்கள். சில அரசர்கள் ஜனங்களைக் கடுமையாக நடத்தியும், நாட்டில் அடிக்கடி சண்டைகள் உண்டாகியும், டில்லியில் அரசாட்சியானது மாறிமாறி வந்தும், ஜனங்கள் திருப்தியுடன் இருந்தார்கள். வட இந்தியாவில் ஜமீன்தார்கள் தங்களுக்குச் சொந்தமான நிலங்களை அசௌகரியமொன்றுமில்லாமல் அனுபவித்துவந்தார்கள். அவசியமான காலத்தில் அவர்கள் ஸுல்தானுக்குப் பணம்கொடுத்தும் சேனைகளை அனுப்பியும் உதவுவதுண்டு. இந்துக்களுக்கும் மகம்மதியர்களுக்கும், தனித்தனியான சட்டங்கள் ஏற்பட்டன. ராஜாங்கத்தில் இந்துக்கள் பெரிய உத்தியோகங்களை வகித்தார்கள். சிலர் ராஜப்பிரதிநிதிகளாகவும் இருந்தார்கள். ஒவ்வொரு ஸுல்தானுக்கும் மந்திரி உண்டு. நிலவரியும், தண்ணீர்த் தீர்வையும், வியாபாரப் பொருள்களுக்குச் சுங்கமும் வாங்

கப்பட்டன. பிரோஸ்ஷா காலத்துக்கு முன்பு ஜனங்கள் கடுமையான வரிகளைச் செலுத்திவந்தார்கள். இந்துக்கள் ஜலையாவென்னும் வரியையும் செலுத்தவேண்டியிருந்தது.

## 23. தக்காணம்.

அக்காலத்தில் தக்காணம் இருந்த நிலைமையைப்பற்றி நாம் தெரிந்துகொள்ளவேண்டியது அவசியம். முதல் முதல் அதன்மேல் படையெடுத்த மகம்மதியர் அலாஉத்தீன் என்பதும் அவர் பட்டத்துக்கு வந்ததும் தம்முடைய சேனாதிபதியாகிய மலிகாபூர் என்பவனை அவ்விடத்துக்கு ஒரு சேனையுடன் அனுப்பினாரென்பதும் நமக்குத் தெரியும். தக்காண ராஜ்யங்களுள் முக்கியமானது வாரங்கல். அலாஉத்தீன் அதனிடத்திலேதான் மிக்க கவனத்தைச் செலுத்திவந்தார். இப்பொழுது நைஸாம் ராஜ்யத்தில் ஒரு பகுதியாகவுள்ள அது அக்காலத்தில் ஆந்திரர்களுடைய நாடாக இருந்தது. முதலாம் பிரதாபருத்திரர் என்பவர் 1187 முதல் 1196 வரையில் வாரங்கல்லுக்கு முதலில் அரசராக இருந்தார். அந்த வம்சத்து அரசர்களுள் அவர் மிக்க புகழ்பெற்றவர். அவருக்குப்பிறகு அவருடைய புத்திரரும் அவருக்குப்பின் அவருடைய புத்திரியான ருத்ரம்மா என்பவளும் அதனை ஆண்டு வந்தார்கள். அரசாட்சி செய்வதில் அவள் மிகுந்த திறமையுடையவள். அவளுடைய காலத்தில் குடிகள் திருப்தியுடன் இருந்தார்களென்று அக்காலத்தில் வந்துபோன ஐரோப்பிய யாத்திரிகர்கள் எழுதிவைத்திருக்கும் சரித்திரத்தால் தெரிகிறது. அவள் இறந்தபிறகு அவள் பேரரான இரண்டாம் பிரதாபருத்திரர் பட்டத்துக்கு வந்தார். மலிகாபூர் அங்கே படையெடுத்துவந்தது அவருடைய காலத்திலேதான். சில காலத்துக்குப் பிறகு படையெடுத்துவந்த துக்லக் அரசனை வாரங்கல் அரசனும் வேறு சில ஹிந்துராஜாக்களும் சேர்ந்துகொண்டு எதிர்த்தார்கள். ஆனால் அவர் ஒரு பெருத்த படையுடன் வாரங்கலை நோக்கிவந்து அரசனைச் சிறைப்படுத்திக்கொண்டு போய்விட்டார். அதன்பின் வரவர வாரங்கல் ராஜ்யம் நசித்துக்கொண்டேவந்தது; பாமினி என்னும் ராஜ்யம் பிரபலத்தையடைந்தது.

பாமினி ராஜ்யம்.

மகம்மதுபின் துக்லக் டில்லி சுல்தானாக இருந்தகாலத்தில் ஹஸன்கங்கா என்னும் ஒருவர் பாமினி என்ற பெயருள்ள ஒரு பிராமணரிடம் அடிமையாக இருந்தார். அவர் 1374-இல்

ஸுல்தானுக்கு விரோதமாகக் கிளம்பி ஒரு புதிய ராஜ்யத்தை ஸ்தாபித்தார். தம்முடைய எஜமானர் ஞாபகத்தின்பொருட்டு அதற்கு, பாமினி என்று பெயரிட்டார். 'குல்பர்கா' என்பது அவருடைய ராஜதானி; அந்த ராஜ்யம் துங்கபத்திரை நதிவரையில் பரவியிருந்தது. ஒரிஸ்ஸா என்னும் பிரதேசம் அதற்குள் அடங்கியது. நூறு வருஷகாலம் அந்த ராஜ்யம் மிகவும் பிரபலமாக இருந்து 1484-ஆம் ஆண்டுமுதல் மலினம் அடைந்து ஆமத்நகரம், விஜயபுரி (பீஜப்பூர்), பேரார், கோல்கொண்டா, பீடார் என்னும் ஐந்து சிறு ராஜ்யங்களாகப் பிரிந்துபோயிற்று.

### விஜயநகர ராஜ்யம்.

மகம்மதியருடைய காலத்தில் தக்காண தேசத்தில் மிகவும் பிரசித்திபெற்றிருந்தது விஜயநகர ராஜ்யமே. துங்கபத்திரை நதிக்கரையிலுள்ள ஹம்பி என்பது அதன் பிரதான நகரமாக இருந்தது. அந்த நகரம் இப்பொழுது பல்லாரி ஜில்லாவில் ஹொஸப்பேட்டை (Hospet) க்குச் சமீபத்தில் ஒரு பாழான கிராமமாக இருக்கிறது. மகம்மதியர்கள் தென் இந்தியாவை நோக்கிப் படையெடுத்து வந்தகாலத்தில் ஹக்கராயரென்றும் புக்கராயரென்றும் பெயர்கொண்ட இரண்டு சகோதரர்கள் இருந்தார்கள். அவர்கள் மிக்க புகழோடு விளங்கிய மாதவ வித்தியாரண்யர் என்னும் ஒரு பிராமணோத்தமருடைய பேருதவியைக்கொண்டு மகம்மதியர்களைத் தாக்கித் துரத்திவிட்டார்கள். ஹிந்துமதமானது மகம்மதியர்களால் மலினமடையாமல் பலமாக இருந்து வரவேண்டுமென்று அவர்கள் ஒரு புதிய ராஜ்யத்தை ஸ்தாபித்து அதன் ராஜதானிக்கு வித்தியாரண்யநகரம் என்று பெயரிட்டார்கள். அது விஜயநகரமென்றும் வழங்கப்படும். வித்தியாரண்ய ஸ்வாமியே அக்காலத்தில் முக்கிய மந்திரியாக இருந்தார். விஜயநகர சமஸ்தானத்தை ஆண்ட ஹிந்துராஜாக்களுள் மிக்க கியாதிபெற்றவர் கிருஷ்ணதேவராயர். அவர் தம்முடைய ராஜ்யத்தை மிகவும் விஸ்தாரப்படுத்தினார். அவருடைய அரசாட்சி யாவராலும் கொண்டாடப்பட்டு வந்தது. அவர் தெலுங்கு பாஷையை நன்றாகக் கற்றறிந்தவர்; கவித்வமும் உடையவர்; பல தெலுங்கு வித்துவான்கள் அவரால்

விசேஷமாக ஆதரிக்கப்பட்டார்கள். தெலுங்கில் பிரசித்த நூலாகிய மனுசரித்திரத்தை இயற்றிய 'அல்லஸாநி பெத்தனார்' என்ற வித்துவானுக்கு 'ஆந்திரகவிதாபிதாமகர்' என்ற பட்டத்தை அவர் கொடுத்தார். தம்முடைய நாட்டில் குடியேறிய போர்ச்சுகல் தேசத்து வியாபாரிகளிடம் அவர் மிக்க பிரியமாக இருந்து அவர்களுடைய வியாபாரத்தை விருத்திசெய்தார்; அவருக்குப்பிறகு ராஜ்யம் சீர்குலையத் தலைப்பட்டது. ராஜ்யத்துக்காகப் பலர் சண்டை போட்டுக்கொண்டு அடிக்கடி பாமினியரசருடைய உதவியை நாடி ராஜ்யாதிகாரத்தை நடத்திவந்தார்கள். கடைசியில் விஜயநகரத்தை ஆண்ட அரசர் ஒருவர் சமீபத்திலிருந்த அயல்நாட்டு மகம்மதிய அரசரை அவமானப்படுத்தினார். அதனால் மகம்மதிய அரசர்களெல்லாரும் ஒன்றுகூடி மிக்க கோபத்துடன் தலைக்கோட்டை யென்னுமிடத்தில் அவரோடு பலமாக யுத்தஞ்செய்து மறுபடியும் தலையெடுக்கவொட்டாமல் அவரை அழித்துவிட்டார்கள். பிறகு அவர்கள் விஜயநகரத்துக்குட் புகுந்து வேண்டியஅளவு கொள்ளையடித்து அழகான கட்டிடங்களையெல்லாம் இடித்துத்தள்ளி நகரத்தைப் பாழாக்கிவிட்டார்கள். இப்பொழுது அவ்விடத்துக்குச் சென்று பார்த்தால் ஆதிகாலத்தில் இந்த நகரமானது பல ஆலயங்கள் அரண்மனைகள், மண்டபங்கள், யானைக்கூடங்கள், பெரிய கடைகள், நவராத்திரிக் கொலுமண்டபம், முதலியவற்றோடு மிகவும் சிறப்பாய் விளங்கி வந்ததென்பது தெரியும்; அற்புதமான சிற்பவேலைகளும், ஜலவசதிக்காகச் செய்திருக்கும் ஏற்பாடுகளும் வரவர அழிந்துகொண்டேவந்தாலும் அக்காலத்து நாகரிகத்தின் சிறப்பை ஒருவாறு அறிவிக்கின்றன.

தலைக்கோட்டையில் நடந்த சண்டைக்குப்பிறகு விஜயநகரத்து அரசர்கள் கொஞ்சகாலம் அனந்தபுரம் ஜில்லாவிலுள்ள பெனுகொண்டாவையும் சிறிதுகாலம் சித்தூர் ஜில்லாவிலுள்ள சந்திரகிரியையும் ராஜதானியாக ஏற்படுத்திக்கொண்டார்கள்.

இந்த ராஜ்யத்திற்கு அடங்கியிருந்த சிற்றரசர்கள் தென்னிந்தியாவில் பிறகு வெவ்வேறு இடங்களில் பரவி, தனித்தனியான சிறிய ராஜ்யங்களை ஸ்தாபித்துக்கொண்டார்கள்.

---

# PART III.

## மூன்றாம் பாகம்.

### மொகலாயர்கள் என்று பெயர்பெற்ற துருக்கியர்கள்.

## 24. பேபரும் ஹுமாயூனும்.

### பேபர் (பாபர்) (1526–1530.)

பானிப்பட்டு யுத்தத்தில் கி-பி. 1526–இல் வெற்றியடைந்தபிறகு பேபர் டில்லியில் சிம்மாசனம் ஏறினார். அவர் தார்த்தாரியில் பிறந்தவர்; மங்கோலியாவிலிருந்து வந்த மொகலாயரல்லர். வடக்கிலிருந்து வரும் புது ஜனங்களை இந்துக்கள், மொகலாயர்களென்றும் மங்கோலியர்களென்றும் சொல்லிவந்தார்கள். அதனால் பேபரும் அவர் சந்ததியாரும் மொகலாயர்களாக வழங்கப்பட்டார்கள். மொகலாயர் வெற்றியடைந்த காலத்தில் வட இந்தியாவில் லாகூர், கூர்ஜரம், மாளவம், ஜான்பூர், வங்காளம், பேகார் முதலிய ஆறு மகம்மதிய ராஜ்யங்களும், அரவல்லிமலைக்கு மேற்கில் சிறிய ரஜபுத்திர ராஜ்யங்கள் பலவும் வெல்லப்படாமல் இருந்தன. ரஜபுத்திர ராஜ்யங்களில் சித்தூர் முதன்மையானது. அதற்கு உதயபுரி என்றும் ஒரு பெயருண்டு. ராஜசங்கர் அல்லது சங்கிரமசிம்மர் என்ற பெயருள்ள ரஜபுத்திர அரசர் அங்கே அரசாட்சி செய்துகொண்டிருந்தார். ரஜபுத்திரர்களுக்கெல்லாம் தலைவர் அவரே.



பேபர்.

பேபருக்கு முதலில் பலவிதத்திலும் கஷ்டங்கள் ஏற்பட்டன. அவருடைய அரசாட்சியில் ஆப்கானியர்களுக்குத் திருப்தியில்லாமையால் அவர்கள் அவரை விட்டு நீங்கித் தனியே சுவாதீனமாக இருக்கச் சமயம் பார்த்துக்கொண்டிருந்தார்கள். இந்தியாவில் ஒரு பெரிய ரஜபுத்திர சேனையைத் திரட்டிக்கொண்டு ராஜசங்கர் டில்லியை நோக்கிச் சென்று இந்துக்கள் முதன்மை பெற்றிருக்கவேண்டுமென்று முயன்றார்.

அடுத்தவருஷம் பேபரோடு சிக்ரி என்னும் இடத்தில் அவர் யுத்தஞ்செய்து முதலில் அவரை வென்றார். ஆனால் பேபர் தைரியத்தைச் சிறிதும் கைவிடாமல் தோல்வியடைவதைக்காட்டிலும் இறந்துவிடுவதே மேன்மையென்று தம்முடைய யுத்தவீரர்களுக்கெல்லாம் சொல்லி அவர்களை மிகவும் உற்சாகப்படுத்தி வீராவேசத்தோடு சண்டைசெய்தார். அப்போது ரஜபுத்திரர்கள் எல்லாரும் இருந்தஇடந் தெரியாமல் ஓடிப்போய்விட்டார்கள். ராஜசங்கர் காட்டில் ஒளிந்துகொண்டு அவமானத்தால் இறந்தார்.

சிக்ரி யுத்தத்தில் வெற்றியடைந்தபிறகு பேபர் ஆப்கானியர்களை எதிர்த்து அவர்களை 'கோக் நார்' என்னும் நதிக்கரை வரையில் துரத்தியடித்து, பேகாரைத் தம் ராஜ்யத்தோடு சேர்த்துக்கொண்டார். வட இந்தியாவின் மற்ற ராஜ்யங்களும் காலக்கிரமத்தில் ஒவ்வொன்றாக அவருடைய ஆட்சிக்கு வந்தன. டில்லியை ஆண்ட சிறந்த மகம்மதிய அரசர்களுள் பேபர் ஒருவர்.

பேபர் என்ற பதத்திற்கு 'சிம்மம்' என்பது பொருள். அவர் சிங்கத்தைப்போன்ற தைரியமுடையவராகவே யிருந்தார். போகும் இடங்களில் வழியில் நதிகள் இருந்தால் அவர் அவற்றை நீந்திக்கொண்டு அப்பால் செல்லுவார். தினந்தோறும் நூறு மைலுக்குக் குறையாமல் குதிரை ஸவாரி செய்வார். அவர் அதிககாலம் இந்தியாவை ஆளவில்லை; ஆனாலும் ஆண்டவரையில் அவருடைய துரைத்தனம் நன்றாக இருந்தது. பட்டத்துக்கு வந்த நான்கு வருஷங்களுக்குப்பிறகு அவர் ஏதோ தேக அசௌக்கிய மடைந்தார். அதேகாலத்தில் அவருடைய மூத்தகுமாரரான ஹுமாயூன் என்பவர் ஒரு கடு

மையான பிணியால் வருந்தினர். அவர் பிழைக்கமாட்டார் என்று வைத்தியர்களும் சொல்லிவிட்டார்கள். அப்போது பேபர் தம் குமாரரைக் காப்பாற்றியருள வேண்டுமென்றும் அவருக்குப் பதிலாகத் தம் உயிரைக் கொடுத்துவிடுவதாகவும் கடவுளைப் பிரார்த்தித்து ஹுமாயூனுடைய படுக்கையை மூன்று முறை சுற்றிவந்தார். பிறகு ஹுமாயூன் வரவரக் குணமடைந்து பிழைத்தார். பேபருக்கு இருந்த நோய் அதிகப்பட அவர் சீக்கிரத்தில் இறந்துபோனர்.

## ஹுமாயூன் முதல்முறை அரசாட்சி செய்தது.

(1530–1546.)

பேபருக்குப்பிறகு ஹுமாயூன் பட்டத்துக்கு வந்தார்; தம்முடைய தம்பியாகிய குஸ்ருவுக்கு, அவர் கந்தகார், காபூல், பஞ்சாப் இந்த மாகாணங்களைக் கொடுத்துவிட்டு மற்ற ராஜ்யங்களுக்குத் தாம் அதிபதியானர். ஹுமாயூன் சிம்மாசனமேறியபிறகு பல கஷ்டங்களை யனுபவித்தார். அவருக்கு நிம்மதியென்பதே சிறிதுமில்லை.



ஹுமாயூன்.

ஹுமாயூன் செய்த காரியங்களால் அவர் தைரியசாலியென்றும் இரக்கமுள்ளவரென்றும் சொல்லலாம். ஆனல் பேபருக்கிருந்த சுறுசுறுப்பும் மனோபலமும் அவருக்கு இல்லை. வயதானபிறகு அவர் அடிக்கடி அபின் சாப்பிட்டுவந்ததால் சோம்பேறியாகவும் சலனபுத்தியுள்ளவராகவும் ஆய்விட்டார்; பட்டத்துக்கு வந்தவுடன் கூர்ஜரத்தை ஜயிக்க எண்ணங்கொண்டு அதன்மேல் படையெடுத்துச் சென்று அதை வென்றார்; ஆனல் கொஞ்சகாலத்துக்குப்பிறகு கூர்ஜரத்தின் ஸுல்தான் சண்டைபோடாமலே சுதந்தரமடைந்தார். வங்காளத்தில் அரசராக இருந்த

ஷர்கான் என்பவர் கலகம் செய்ததால் ஹுமாயூன் பிறகு வங்காளத்தை நோக்கிச் சென்றார்.

ஷர்கானுக்கு ஷர்ஷா என்றும் பெயருண்டு. அவர் பராக்கிரமமுள்ள ஓர் ஆப்கானிய பிரபு. தம் வாளால் ஒரு புலியைக் கொன்றமையால் அவருக்கு ஷர்கான் (புலித்தலைவன்) என்னும் பெயர் கிடைத்தது. பேபர் இறந்தபிறகு தாமே டில்லியை ஆளவேண்டுமென்று அவர் எண்ணி சூனார் என்னும் கோட்டையை முற்றுகைபோட்டு அதைப் பிடித்துக் கொண்டார். ஹுமாயூனோடு வெகுகாலம் சண்டைசெய்து பக்ஸார் என்னுமிடத்தில் அவரை வென்றார். ராத்திரி வேளையில் அவர் ஹுமாயூனுடைய வீரர்களைத் தாக்க ஆரம்பித்ததால் எல்லாரும் நடுநடுங்கிப் பலதிசைகளுக்கும் ஓடிப்போனார்கள். ஹுமாயூன் கங்கைநதியை ஒரு தோற்பையின் உதவியால் கடந்து ஆக்ரா போய்ச் சேர்ந்தார். அவர் மறுபடியும் ஒருமுறை ஷர்ஷாவினால் தோல்வியடைந்தார். ஒரு யானையின்மேலேறிக்கொண்டு கங்கையைக் கடந்து செல்லும்போது அவர் முழுகிப்போய் விடுவாரோ என்று பயந்து இரண்டு யுத்த வீரர்கள் உதவிசெய்து அவரைக் கரையேற்றினார்கள். அப்பால் அவர் ஆப்கானிஸ்தானத்திலுள்ள தமது தம்பியிடம் போய்ச் சேர்ந்தார். ஆனால் அவன் ஷர்ஷாவோடு சமாதானம் செய்துகொண்டு பஞ்சாபை அவருக்குக் கொடுத்துவிட்டு ஹுமாயூனைக் காப்பாற்றவில்லை. ஆதலால் அவர் பலவிதமான ஆபத்துக்களுக்கும் உட்பட்டு அலைந்து திரிந்துகொண்டிருந்தார். கடைசியில் அமரக்கோட்டை என்னும் இடத்தை யடைந்தார். அங்கே 1542–ஆம் வருஷத்தில் அவருடைய குமாரரான அக்பர் பிறந்தார். பிறகு அவர் தம் தம்பியிடம் அக்பரை ஒப்பித்துவிட்டுப் பாரசீகம் சென்று பல வருஷம் பாரசீக வேந்தனுடைய விருந்ினராக இருந்து வந்தார்.

### ஷர்கான். (1540–1545.)

மொகலாயர்களைத் துரத்திவிட்டு ஷர்கான் ஐந்து வருஷகாலம் டில்லியில் ஆண்டுவந்தார். அவர் சிறிதும் சோம்பலில்லாதவர். ஒவ்வொரு காரியத்தையும் தாமே கவனிப்பார்; தினந்தோறும் வேலைசெய்து ஜீவனம் செய்பவர்களைப்போல

வே தாமும் உழைத்துவருவார். தமக்குக் கீழ்ப்பட்டவர்களையும் தம்மைப்போலவே வேலை செய்யும்படி செய்வார். குடிகளைக் காத்தல் அரசனுக்குக் கடமை யென்பதை அவர் நன்கு அறிந்தவர். ஆதலால் மற்ற ஆப்கானிய அரசர்களைக் காட்டிலும் நன்றாக அரசாட்சி செய்தார். இந்துக்களுக்கு ராஜாங்கத்தில் உயர்ந்த வேலைகளைக் கொடுத்து துரைத்தன முறைமையை அவர்களுக்கு நன்றாகக் கற்றுக்கொடுத்தார். பிரசித்திபெற்ற தோடர்மால் என்பவர் ராஜ்யவரும்படியைக் கவனிக்கும்விஷயத்தில் அவருக்கு மந்திரியாக இருந்தார்.

ஜனங்களுக்கு ஷர்ஷா பல நன்மைகளைச் செய்தார். அவர்காலத்தில் பல கப்பிச்சாலைகள் போடப்பட்டன. சாலையின் இரண்டு பக்கங்களிலும் மரங்கள் பயிராக்கப்பட்டன. வழிப்போக்கர்களுடைய சௌகரியத்துக்காகச் சாலைகளில் ஆங்காங்கு சத்திரங்களை ஏற்படுத்திப் பற்பல கிணறுகளையும் வாய்க்கால்களையும் அவர் வெட்டுவித்தார். தபால் அனுப்பும் வழக்கத்தை முதல் முதல் ஏற்படுத்தியவர் அவரே.

அவர் மாளவதேசத்தை ஜயித்து அதைத் தம் ஆட்சிக்குக் கொண்டுவந்தார்; ரஜபுத்திரர்களை அடக்குவதற்குப் பலவாறு முயன்று சித்தூரையும் ஜோதிபுரியையும் முற்றுகையிட்டார். கலிஞ்சர் என்னும் இடத்தை முற்றுகைபோட்டுக் கொண்டிருந்தபோது தற்செயலாய் ஒரு துப்பாக்கி வெடித்து அவர்மேற் பட்டது; அதனால் இறந்துபோனார். அவருக்குப் பின்பு வந்தவர்கள் சாமர்த்தியசாலிகளாக இல்லை.

## ஹுமாயூன் இரண்டாம் முறை அரசாட்சி செய்தது.

(1555–1556.)

ஷர்ஷாவுக்குப் பின்பு பட்டத்துக்கு வந்தவர்கள்காலத்தில் ஆப்கானியர்கள் அவர்களுக்கடங்காமல் கலகம் செய்துகொண்டிருந்தார்கள். ஸகண்டர் ஸர் என்பவர் பஞ்சாபில் மிகுந்த செல்வாக்கை அடைந்து தாமே அந்த மாகாணத்துக்கு அரசரென்று எல்லாருக்கும் அறிவித்தார். பிறகு அவர் டில்லியையும் ஆக்ராவையும் கைப்பற்றிக்கொண்டார். அந்தச் சமயத்தில் ஹுமாயூன் பாரசிக அரசனுடைய பேருதவியால் ஒரு பெருத்த சேனையுடன் இந்தியாவுக்கு வந்து 1555–ஆம் வருஷத்தில் லாகூரைப் பிடித்து

ஸகண்டர் ஸர் என்பவரை யுத்தத்தில் வென்று பிறகு நேரே டில்லிக்குச் சென்று மகுடம் சூட்டிக்கொண்டார்; ஆனால் மறுபடி கிடைத்த ராஜ்யத்தை அவர் அதிககாலம் ஆளவில்லை. 1556–ஆம் வருஷத்தில் அரண்மனை மெத்தைப் படிக்கட்டில் தவறி விழுந்து இறந்துபோனார்.

## 25. மகா என்று பெயர்பெற்ற அக்பர்.

(1556–1605.)

இந்தியாவை ஆண்ட மகம்மதிய அரசர்களில் அக்பர் மிகவும் சிறந்தவர். 'அக்பர்' என்பது மேன்மையைக் காட்டும் ஒரு சொல். அதற்குத் தக்கபடி அக்பர் உண்மையிலேயே மிக்க பெருமை வாய்ந்தவர். சற்றேறக்குறைய ஐம்பது வருஷகாலம் இந்தியாவில் அவர் அரசாட்சி செய்தார். அவருடைய காலத்தில் இங்கிலாந்தில் எலிஸபெத் என்ற சக்கரவர்த்தினியார் மிக்க புகழோடு விளங்கினார்.



அக்பர்.

ஹுமாயூன் இறந்தபோது அக்பருக்கு வயது பதினைந்து; அக்காலத்தில் அவருக்கு விரோதிகள் பலருண்டு. ஆயினும், அவரிடம் அபிமானமுள்ள சில அதிகாரிகள் இருந்தார்கள். அவர்களில் அக்பருடைய அத்தை புருஷரான பைராம்கான் என்பவர் முக்கியமானவர். அவர் போர்வீரருக்கு வேண்டிய குதிரையேற்றம், வில்வித்தை, வாள்வித்தை முதலிய எல்லாக் கலைகளையும் அக்பருக்கு நன்றாகப் பழக்குவித்தார். அவர் முதலில் ஐந்து வருஷம் அக்பருடைய பிரதிநிதியாக இருந்து கடுமையாகவும் நியாயம் தவறாமலும் அரசாட்சி செய்தார்.

அப்போது மொகலாய ராஜ்யத்தில் பஞ்சாப் மாகாணமும், டில்லியைச் சுற்றிய தேசமுமே அடங்கியிருந்தன. வங்காளத்திலும், சிந்துவிலும், கூர்ஜரத்திலும் சில மகம்மதிய அரசர்கள் பராக்கிரமசாலிகளாக இருந்துகொண்டு தனித்தனியே அரசாட்சி செய்துவந்தார்கள். ரஜபுத்திரர்களும் மிக்க பலத்தோடு தங்கள் கோட்டைகளில் இருந்தார்கள்.

ஷர்ஷா பரம்பரையில் கடைசி அரசர்காலத்தில் ஹேமு என்னும் ரஜபுத்திரவீரன் மந்திரியாக இருந்தான். அவன் மொகலாய வம்சத்தையே வேரோடு அழித்து டில்லியை இந்து ராஜ்யமாகச் செய்யவேண்டுமென்ற கருத்துடன் வங்காளத்தையும், டில்லியையும், ஆக்ராவையும் கைப்பற்றிக்கொண்டு பெருத்த சேனையுடன் லாகூரை நோக்கிச் சென்றான். பிறகு அக்பருக்கும் அவனுக்கும் பானிப்பட்டு என்னுமிடத்தில் ஒரு பெரிய யுத்தம் நடந்தது. அதில் பைராம்கானுடைய உதவியினால் ஹேமுவை அக்பர் ஜயித்து அவனைக் கைதியாக்கினார். அவனைக் கொன்றுவிடவேண்டுமென்று பைராம்கான் நிரம்பச்சொல்லியும் அக்பர் கேட்கவில்லை; ஆனால் பைராம்கானே அவனை வாளால் வெட்டிவிட்டார். இப்பேர்ப்பட்ட கொடிய காரியங்களில் அக்பருடைய மனம் செல்வதில்லை.

அக்பருக்குப் பிராயம் பதினெட்டு ஆனவுடன் பைராம்கானுடைய கடுமையான குணத்துக்கு இணங்கி நடக்க அவர் இஷ்டப்படவில்லை. அவருடைய தாயாரும் சில பிரதானிகளும் ராஜ்யாதிகாரத்தை, பைராம்கானிடம் ஒப்பிக்காமல் தாமே நடத்திவரும்படி அக்பரைத் தூண்டினார்கள். சில காலம் மிகுந்த செல்வாக்கோடு அதிகாரத்தை நடத்திவந்த பைராம்கானுக்கு அக்பரிடம் அதை விட்டுவிட இஷ்டமில்லை; அதனால் அவர் கலகம்செய்ய ஆரம்பித்தார். அக்பரும் பிடிவாதமாக இருந்ததால் பைராம்கான் ராஜ்யத்தை அக்பரிடம் ஒப்பித்துவிட்டு மெக்காவுக்கு யாத்திரைபோனார். சில வருஷங்களுக்கு முன்பு அவரால் கொல்லப்பட்ட ஓர் ஆப்கானியனுடைய புதல்வன் அவரை நடுவழியில் சூழ்த்திரத்தால் கொன்றுவிட்டான்.

பிறகு அக்பருக்கு ஒரு தடையும் ஏற்படவில்லை. அவர் இயற்கையிலேயே நல்ல ஞானமும், ஒவ்வொரு விஷயத்தை

யும் நுட்பமாக ஆராய்ந்தறியும் சக்தியும் உள்ளவர். இந்துக்களை நேசித்துவந்தால்தான் மகம்மதிய ராஜ்யத்தை இந்தியாவில் ஸ்தாபிப்பதற்கு முடியுமென்று அவர் நன்றாக அறிந்து கொண்டார். இந்துஸ்தானத்தில் ஏறக்குறைய நூறு ரஜபுத்திர ராஜ்யங்கள் இருந்தன. அக்பர் ரஜபுத்திரர்களையெல்லாம் வசப்படுத்திக்கொண்டு அவர்களுடைய சகாயத்தால் தம்முடைய விரோதிகளான பட்டாணியர்களை வெல்ல முயன்றார். அவருடைய பலபராக்கிரமங்களைக் கண்டு ரஜபுத்திரர்கள் முதலில் அச்சமடைந்தாலும் பிறகு அவருடன் நட்புப் பாராட்டினார்கள். சிறந்த வீரர்கள் ஒருவரை யொருவர் பாராட்டிவருவது இயற்கையல்லவா?

அக்பர் ராஜபுத்திர ஸ்திரீகளை மணம்புரிந்து அவர்களுடைய பந்துக்களுக்கு ராணுவத்தில் உயர்ந்த உத்தியோகங்கள் கொடுத்தார். அவர்கள் எல்லாரும் அக்பரிடம் பிரியமாக இருந்துவந்தார்கள். தம்முடைய மூத்த குமாரரான ஸாலிமுக்கு ஒரு ராஜபுத்திர கன்னிகையான ஜோதிபாய் என்பவளை விவாகம் செய்வித்தார்; ஆனால் மேவார் ராஜ்யத்திற்கு அதிபதியான உதயசிங்கர் என்னும் ராஜபுத்திரர் அக்பரோடு உறவுகொண்டாட இஷ்டப்படாமல் அவரை எதிர்க்க ஆரம்பித்தார். பிறகு அக்பருக்குப் பயந்து ஆரவல்லி மலைக்குப் பக்கத்திலுள்ள காடுகளுக்கு ஓடினார். அப்போது அக்பர் அவருடைய ராஜதானியான சித்தூரை முற்றுகை செய்தார். ஆனாலும் பின்பு சித்தூரிலிருந்த பிரதாபசிங்கர் என்பவர் பல வருஷங்கள் அக்பரோடு கடுமையாக யுத்தஞ்செய்து 1580-ஆம் வருஷத்தில் வெற்றியடைந்து புதிய ராஜ்யமொன்றை ஸ்தாபித்துக்கொண்டார்.


ஜோதிபாய்.

இந்துஸ்தானத்திலிருந்த பட்டாணி ராஜ்யங்களையெல்லாம் ராஜபுத்திரர்களுடைய உதவியால் அக்பர் ஒவ்வொன்றாக அடக்கினார். ஜான்புரியும், வங்காளமும், காஷ்மீரமும், சிந்துதேசமும், மாளவமும், கூர்ஜரமும், காபூலும், கண்டஹாரும் ஒன்றன்பின் ஒன்றாக அவருடைய ஆட்சிக்கு வந்தன. அவருடைய அரசாட்சியின் இறுதியில் விந்தியமலைக்கு வடக்கேயுள்ள இந்துஸ்தானம் முழுவதும் மொகலாய ராஜ்யத்தில் சேர்ந்துவிட்டது.

அக்பர் சிறிது உயரமான அழகிய வடிவமுள்ளவர்; அகன்ற மார்போடு கூடிய ஆஜானுபாகு. அவருடைய கண்கள் கரியநிறமானவை. இளமையில் அவர் முகம் அழகாக

வும் சிவந்தும் இருந்தது. வயதாக ஆக அது பழுப்புநிற மாக மாறிற்று. ஒருவிதத்தில் பாரசீகரென்றும் வேறொரு விதத்தில் துருக்கியரென்றும் அவரைச் சொல்லலாம். பாரசீக பாஷையும் துருக்கிய பாஷையும் அவர் பேசுவார்; பல பராக்கிரமம் உள்ளவர். குதிரை ஸவாரி செய்வதில் அவ ருக்கு விருப்பம் அதிகம்.

பல சமயங்களில் அவர் ஒரேதினத்தில் முப்பது நாற்பது மைல் நடப்பதுண்டு. அவரிடம் பல துப்பாக்கிகள் இருந் தன. ஒவ்வொன்றுக்கும் தனித்தனியான பெயர் வைத்தி ருந்தார். ஒரே துப்பாக்கியினால் அவர் 1900 காட்டு மிருகங் களைக் கொன்றிருக்கிறார். அதற்கு 'குறி தவறாதது' என்று பெயர்.

சாந்தகுணமும், இரக்கமும், அன்பும் அக்பருக்கு வர வர அதிகரித்தன. அவசியமாக இருந்ததால் பல யுத் தங்களை நடத்தினாரேயல்லாமல், அவர் ஒரு தேசத்தையும் அழிக்கவில்லை; ஜனங்களிடமிருந்து கொள்ளையடிக்கவுமில்லை.

அக்பர் மகம்மதியராகவே வளர்க்கப்பட்டார். ஆதலால் மகம்மதியர்களிடத்திலேயே அவருக்கு விசேஷமான பற்று இருக்கும் என்று யாவரும் நினைக்கலாம். ஆனால் அவர் இந்துக்களை மிக்க மரியாதையாகவும், அன்பாகவும் நடத்தி னார். ஒவ்வொரு மதத்திலும் நன்மை உண்டென்றும், இந்து வானாலும், மகம்மதியனானாலும், கிறிஸ்தவனானாலும் கடவுளை நம்பினவன் கைவிடப்படமாட்டான் என்றும் அவர் சொல் லுவார். அவருடைய காலத்தில் ஜனங்கள் தங்கள் தங்க ளுக்கு இஷ்டமான மதக்கொள்கைகளை யாதோர் இடை யூறும் இல்லாமல் அனுஷ்டித்துவந்தார்கள். அவருடைய நாணயம் ஒன்றில் 'ஒழுங்காக நடப்பதே கடவுளுக்குத் திருப்தி; நல்வழியில் நடப்பவன் கெட்டுப்போவதை நான் கண்டதேயில்லை' என்னும் வாக்கியங்கள் வரையப்பட்டி ருந்தன.

அவருடைய இளமையில் அவரைப் பழக்கிவந்த பைராம் கான் அவருக்குக் கல்வி கற்பிக்கவில்லை. ஆதலால் வெகு காலம்வரையில் அவருக்கு எழுதவும் தெரியாது; படிக்கவும் தெரியாது. அதிகமாகப் படித்திராவிட்டாலும் பிறரைக்




கொண்டு நல்ல புஸ்தகங்களை வாசிக்கச் சொல்லி அவர் கேட்பார். ஐயாயிரத்துக்கு மேற்பட்ட புஸ்தகங்கள் அவருடைய புஸ்தகசாலையில் இருந்தன. சித்திரவேலையில் அதிகமான பிரியம் உள்ளவராதலால் அநேகம் படங்கள் அவரிடம்

உண்டு. இனிமையான பாட்டுக்களை அடிக்கடி பாடச்சொல் லிக் கேட்டு அவர் மகிழ்வார்.

இந்துக்களிலும், மகம்மதியர்களிலும் கல்வியில் தேர்ந்த புகழ்பெற்ற பலர் துரைத்தன காரியங்களில் அவருக்கு உதவி புரிந்து வந்தார்கள். அவர்களுள் அபுல்பாசல் என்பவர் முக் கியமானவர். அவரை அக்பர் ஒரு சகோதரராகப் பாவித்து ஒவ்வொரு காரியத்திலும் அவருடைய யோசனைப்படி நடந்தார். அபுல்பாசல் மிக்க அமைதியும், சிறந்த ஞானமும் உள்ளவர். அக்பருடைய அரசாட்சி முறையைப்பற்றி அவர் விஸ்தாரமாக ஒரு சரித்திரம் எழுதியிருக்கிறார். அதற்கு 'அயன் ஆக்பரி' என்று பெயர். அவரிடத்தில் அக்ப ரின் மூத்த குமாரரான ஸாலிம் என்பவர் பொறாமையால் துவேஷம் பாராட்டிவந்தார். ஒருமுறை அபுல்பாசல் தனி யாகப் பிரயாணம் செய்துகொண்டிருந்தபோது ஸாலிம் அவ ரைக் கொலைசெய்துவரும்படி ஒரு போர்வீரனை அனுப்பி னார். அவ்வாறே அவன் கொலைசெய்துவிட்டான். அவர் மரணத்தைக் கேட்ட அக்பர் மிக்க வருத்தமடைந்து இரண்டு தினங்கள்வரையில் பட்டினியாகவே யிருந்தார்.

அக்பருடைய சமஸ்தானத்தில் இருந்த இந்துக்களுள் பிரதானமானவர் ராஜா தோடர்மால். அவர் வெகுகாலம் ஷர்ஷாவினிடம் உத்தியோகமாக இருந்தவர். அக்பருக்கு அவர் துரைத்தனவிஷயத்தில் மிக்க உதவிபுரிந்துவந்தார். அரசிறை சம்பந்தமான வேலைகளையெல்லாம் அவரிடம் அக் பர் ஒப்பித்துவிட்டார்.

இந்துஸ்தானத்தை ஜயித்தபிறகு ரஜபுத்திரர்களுக்கு அக் பர் ராணுவத்தில் பல உத்தியோகங்கள் கொடுத்தார். ஸாலி மின் மைத்துனரான ராஜா மான்சிங்க் என்பவர் சேனாதிபதி யாக நியமிக்கப்பட்டார். முதலில் காபூலுக்கும், பிறகு வங் காளத்துக்கும் அவர் தலைவரானார்.

வட இந்தியா முழுவதும் தம்முடைய ராஜ்யத்திற் சேர்ந்த பிறகு தக்காணத்தையும் ஜயித்துவிட வேண்டுமென்று அக்பர் முயன்றார். அக்காலத்தில் தக்காணத்திலுள்ள மகம்மதிய ராஜ்யமான பாமினியென்பது ஐந்து சிறு ராஜ்யங்களாகப் பிரிவுபட்டிருந்தது. அவற்றுள் வடகோடியிலுள்ள ஆமத்

நகரை நோக்கி அக்பர் முதலில் சென்றார். அங்கே சிம்மாசனத்தில் ஒரு சிறு குழந்தை இருந்தது. ஆனாலும் ராஜ்யாதிகாரத்தை வகித்த 'சாந்து பிபி' என்னும் ராணி மொகலாயர்களுக்குச்சிறிதும் இடங்கொடாமல் அவர்களை எதிர்த்து நின்றாள். போர்வீரர்களை நடத்துவதில் அவள் மிக்க சாமர்த்தியமுடையவள்; அஞ்சாத நெஞ்சு படைத்தவள்; சிறந்த தேசாபிமானமுள்ளவள். ஐக்கியமே பலமென்று தன்னுடைய யுத்தவீரர்களுக்கு அடிக்கடி போதித்து அவர்களுக்கு ஊக்கமளித்துவருவாள். எப்போதாவது அவர்கள் மயங்கி நிற்பதாகத் தெரிந்தால் போர்வீரனுடைய உடையைத் தரித்துக்கொண்டு சண்டை பலமாக நடக்குமிடத்தில் மிக்க தைரியத்துடன் தானே முன்வந்து நிற்பாள்; பிறகு அவளுடைய வீரர்கள் தைரியமாகப் போர்புரிவார்கள். அதனால் மொகலாயர்களால் அவளுடைய பட்டணத்தை முதலில் பிடிக்க முடியவில்லை. ஆனால் அவளுடைய பிரதானிகள் அவளிடம் பொறாமைகொண்டதனாலும் சேனைக்குள் ஒற்றுமை குறைந்துபோனமையாலும் கி. பி. 1600 – இல் மொகலாய வீரர்கள் அவளைச் சிறைப்படுத்தி அவளுடைய கோட்டையையும் பிடித்துக்கொண்டார்கள். அக்பர் பலவாறு முயன்றும் தக்காணம் முழுவதையும் தம்முடைய ஆட்சிக்குள் கொண்டுவர முடியவில்லை.



ராஜா மான்ஸிங்.

அக்பருடைய அரசாட்சியில் ஜனங்கள் அதற்குமுன்பு அநுபவியாத பல சௌக்கியங்களை அநுபவித்தார்கள். பட்டாணி அரசர்கள் காலத்திலிருந்த தீர்வைகள் அக்பரால் குறைக்கப்பட்டன. ஜாதிவித்தியாசமில்லாமல் எல்லாருக்கும் ஒரேவிதமாக வரி விதிக்கப்பட்டது. மகம்மதியர்கள்

அல்லாதவர்கள்மட்டும் கொடுத்துவந்த 'ஜஸையா' என்னும் வரியையும் புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போகும் ஜனங்கள் செலுத்திக்கொண்டுவந்த வரியையும் அக்பர் நீக்கிவிட்டார். ஜனங்கள் தங்கள் தங்களுக்கு இஷ்டமான மதக்கொள்கைகளை நிர்ப்பயமாக அனுஷ்டித்துவந்தார்கள். அக்காலத்தில் இந்தியர்களுள் ஒருவன் இறந்துபோனால் அவன் பிணத்தைக் கொளுத்தும்போது அவனுடைய மனைவி அந்தத் தீயில் குதித்து உயிரை மாய்த்துக்கொள்வாள். அதற்கு உடன் கட்டை யேறல் அல்லது சககமனம் என்று பெயர். அவ் வழக்கத்தையும் இந்துக்களுள் வழங்கிவந்த வேறு சில கெட்ட அனுஷ்டானங்களையும் அக்பர் தடுத்தார்.

தோடர்மாலுடைய அபிப்பிராயப்படி நிலங்கள் அளக்கப் பட்டு விளைவுக்குத் தக்கவாறு எட்டு வகைகளாகப் பிரிக்கப் பட்டன. செழிப்பான நிலத்துக்கு அதிக வரியும் நன்றாக விளையாத நிலத்துக்குக் குறைந்த தீர்வையும் விதிக்கப்பட்டன. அதற்கு முன் கொடுத்துக்கொண்டு வந்தபடி துரைத் தனத்துக்குச் செலுத்தவேண்டிய தீர்வையைத் தானியமாகக் கொடாமல் பணமாகக் கொடுக்கவேண்டுமென்றும் வரியை வாங்கும் உத்தியோகஸ்தர்களுடைய சம்பளத்தையும் பணமாகவே கொடுக்கவேண்டுமென்றும் தோடர்மால் ஏற்பாடு செய்தார். பத்து வருஷங்களுக் கொருமுறை துரைத்தனத் துக்குச் செலுத்தவேண்டிய தீர்வை மாற்றப்பட்டு வந்தது.

மிகவும் சிறந்து புகழ்பெற்று விளங்கிய சக்கரவர்த்திகளுள் அக்பரொருவர். மதவித்தியாசம் பாராட்டாமல் அவர் எல்லாருக்கும் சிறந்த உத்தியோகங்களைக் கொடுத்தார். மகம்மதியர்களுக்கும் ஹிந்துக்களுக்கும் நேசத்தை யுண்டுபண்ணி அதைப் பலப்படுத்தினர். தம்முடைய அதிகாரிகளை நம்பி விசேஷமான பலனை யடைந்தார். இந்த முறையை அநுசரிக்க வேண்டுமென்று அலாஉத்தீனும் ஷர்ஷாவும் முயற்சி செய்தார்கள்; ஆனல் அது அவர்களால் நிறைவேருமல் அக்பரால்தான் சாத்தியமாயிற்று.

ஐம்பது வருஷகாலம் அரசாட்சிசெய்து அறுபத்துமூன்ரும் பிராயத்தில் அக்பர் காலகதியடைய ஸாலிம் பட்டத்திக்கு வந்தார்.



# 26. இன்பப்பிரியரான ஜிஹாங்கீர்.

(1605–1627.)

ஸலீம் பட்டத்துக்கு வந்தவுடன் 'ஜிஹாங்கீர்' (உலகம் ஜயிப்போன்) என்னும் பெயரை வகித்துக்கொண்டார். அவருடைய தாயார் ரஜபுத்திர ஸ்திரீயாதலால் அவரை ஒரு விதத்தில் ரஜபுத்திரரென்று சொல்லலாம்.



ஜிஹாங்கீர்.

அக்பரைப்போலவே அவர் பல ரஜபுத்திர ஸ்திரீகளை விவாகம் செய்துகொண்டார். இளவரசரான ஷாஜிஹான் என்பவர் அவர்களுள் ஒருத்திக்குப் பிறந்தவர். 1611-ஆம் வருஷத்தில் ஜிஹாங்கீர் நூர்ஜஹான் என்னும் பாரசீக ஸ்திரீயை விவாகம் செய்துகொண்டார்.

நூர்ஜஹானுடைய தகப்பனர் மிக்க எளிய குடும்பம் ஒன்றில் பிறந்தவர். அக்பருடைய சமஸ்தானத்தில் அவர் ஒரு வேலையைச் சம்பாதித்துக்கொண்டு காலக்கிரமத்தில் தனுதிகாரி வேலைக்கு வந்தார். ஜிஹாங்கீர் நூர்ஜஹான்மீது ஆசைகொண்டு அவளைக் கலியாணம் செய்துகொள்ள விரும்பினர். ஆனல் அவளுடைய தகப்பனர் அவளை ஏற்கனவே வங்காளத்திலுள்ள ஷர் ஆப்கன் என்பவருக்குக் கொடுப்பதாக வாக்குத்தத்தம் செய்திருந்தமையால் அதை மாற்றமுடியாதென்று சொல்லிவிட்டார். அக்பரை அதுவிஷயத்தில் உதவிசெய்ய வேண்டுமென்று ஜிஹாங்கீர் கேட்க அவர் அதற்கு இடங்கொடுக்கவில்லை. பிறகு நூர்ஜஹான் ஷர் ஆப்கனை மணம் செய்துகொண்டு வங்காளத்துக்குப் போய்விட்டாள். ஜிஹாங்கீர் அவள்மேலேயே ஞாபகமாக இருந்தார்.




நூர்ஜஹான் தோழிகளுடன் இருப்பது.

அவர் பட்டத்துக்கு வந்ததும் ஷர் ஆப்கனைக் கொலை செய்வித்து நூர்ஜஹானை வருவித்து அவளுக்கு நூர்மகால் என்று பெயரிட்டார். ஆனால் தனக்குப் பிரியமாயிருந்த புருஷரைக் கொன்றுவிட்டபடியால் ஜிஹாங்கீரிடம் நூர்ஜஹான் மிக்க கோபமடைந்து ஆறு வருஷ காலம்வரையில் அவரைக் கண்ணெடுத்துப் பாராமலேயிருந்தாள். அவள் கோபம் அப்பால் அடங்கிற்று. பிறகு ஜிஹாங்கீரைக் கலியாணம் செய்துகொண்டாள்.

அவளுடைய பெயர் 'ஜகத்ஜோதி' என்று பிறகு மாற்றப்பட்டது. எல்லா அதிகாரத்தையும் அவளே நடத்திவந்தாள். ராஜ்யாதிகாரத்தைத் தாம் வைத்துக்கொள்ளாமல் ஜிஹாங்கீர் அவளிடம் ஒப்பித்துவிட்டார். அவருக்குப் பதிலாக அவளே எல்லா உத்தரவுகளிலும் கையெழுத்துப் போட்டாள். அவளுடைய தந்தைக்கும் சகோதாருக்கும் ராஜாங்கத்தில் தலைமையான உத்தியோகங்கள் கிடைத்தன. கலியாணமானபிறகு அரசாட்சியை நூர்ஜஹான் நடத்திவந்தாளேயல்லாமல் ஜிஹாங்கீர் அதைப்பற்றிக் கவனிக்கவே இல்லை. உயர்ந்த ஆகாரமும் மதுபானமுமே தமக்கு வேண்டியவையென்று அவர் சொல்லுவார். அரசாட்சி செய்வதில் தம்மைக்காட்டிலும் அவளே சிறந்தவள் என்பது அவருக்கு நன்றாகத் தெரியும்; ஆதலால் அவர் துரைத்தன சம்பந்தமான ஒருவிஷயத்திலும் தலையிட்டுக் கொள்வதில்லை.

அக்பருக்கிருந்த குணமும் சாமர்த்தியமும் ஜிஹாங்கீருக்கு இல்லாமையால் ராஜ்யாதிகாரத்தை நூர்ஜஹானிடம் ஒப்பித்தது அவருக்கும் க்ஷேமம்; இந்துஸ்தானத்திற்கும் க்ஷேமம். சுகானுபவத்தைத் தவிர வேறொன்றிலும் அவர் மனம் செல்லவில்லை. மொகலாய அரசர்களுள் அவரே போகத்திலும், மதுபானத்திலும் முழுகிக்கிடந்தவர். ஒருமுறை அவர் தக்காணத்தின்மேற் படையெடுத்துச் சென்று ஆமத் நகரைப் பிடித்தார்.

ஆங்கிலேயர்களுக்கு இந்தியாவில் வர்த்தகம் செய்ய அனுமதி கொடுக்கவேண்டுமென்று இங்கிலாந்தின் அரசரான முதலாம் ஜேம்ஸ் என்பவர் ஸர் தாமஸ் ரோ என்னும் தூதரை

ஜிஹாங்கீரிடம் அனுப்பினுர். ஆங்கிலேயர்களுக்கு முன்னமேயே ஸுராத் என்னுமிடத்தில் ஒரு பண்டசாலை இருந்தது. ஸர் தாமஸ் ரோ என்பவர் இந்தியாவில் மூன்று வருஷமிருந்து அக்காலத்து விஷயங்களைப்பற்றி ஒரு சரித்திரம்எழுதியிருக்கிறுர். அதனுல் அரசாட்சியானது அக்பர் காலத்தில் இருந்தது போல் ஜிஹாங்கீர் காலத்தில் இல்லையென்று தெரிகிறது.



முதலாவது ஜேம்ஸ்.

தன் மகனே ஜிஹாங்கீருக்குப் பிறகு பட்டத்துக்கு வரவேண்டுமென்று நூர்ஜஹான் விரும்பினுள். அதனுல் ஷாஜிஹானுக்கு மிக்க வருத்தமுண்டாயிற்று. ஆனுலும் கொஞ்சகாலத்தில் ஜிஹாங்கீர் இறந்துபோக ஷாஜிஹானே சிம்மாசனம் ஏறி நூர்ஜஹானுக்கு ஏராளமான உபகாரச் சம்பளம் கொடுத்து அவளை மரியாதையாக நடத்திவந்தார். அவள் முப்பது வருஷங்களுக்குப் பிறகு இறந்தாள். ராஜ்யவிஷயங்களில் ஜிஹாங்கீருக்குப் பிறகு அவளுக்கு ஒருவிதமான சம்பந்தமுமில்லை.

## 27. கட்டிடப் பிரியரான ஷாஜிஹான்.

(1627–1658.)

**ஷாஜிஹானுடைய** தாயார் ஒரு ரஜபுத்திர ஸ்திரீ; அவர் தந்தையும் ஒருவிதத்தில் ரஜபுத்திரர். ஆதலால் அவரைத் துருக்கியரென்று சொல்லாமல், ரஜபுத்திரரென்று சொல்வது பொருத்தமாகும். மற்ற மொகலாய அரசருடைய அரசாட்சியைக்காட்டிலும் அவருடைய அரசாட்சியே மிக்க பெருமை வாய்ந்தது. அவர் அரசாக இருந்த முப்பது வருஷ காலத்துக்குள் பற்பல அழகான அரண்மனைகளையும், கோரி

களையும், பொதுமண்டபங்களையும் நூதனமாகக் கட்டி முடித்தார்.

ராஜ்யத்துக்காக ஒருவேளை சண்டைக்கு வருவார்களோ என்று கருதி அவர் பட்டத்துக்கு வந்தவுடன் தம்முடைய சகோதரர்களையும் அவர்கள் குழந்தைகளையும் சிறிதும் இரக்கமில்லாமல் கொலைசெய்து தம் ஸ்தானத்தை ஸ்திரப்படுத்திக் கொண்டார். இவ்வளவு கொடுமையான காரியத்தை அவர் ஆரம்பத்தில் செய்தாலும் ஜிஹாங்கீரைக்காட்டிலும் மிகவும் நன்றாக அரசாட்சி செய்தார். தந்தைக்கு இருந்த துர்க்குணங்களாகிய சோம்பலும், மதுபானமும் அவரிடம் இல்லை.


ஷாஜிஹான்.

மும்தாஜ்மஹால் என்ற பெயருள்ள அழகிற் சிறந்த ஒரு பாரசீக ஸ்திரீயை அவர் விவாகம் செய்துகொண்டார். அவள் நூர்ஜஹானுக்கு மருமகள்; ஷாஜிஹானிடத்தில் விசேஷமான பக்தியுடையவள்; அவரும் அவளிடம் மிக்க அன்புபாராட்டிவந்தார். கலியாணமானபிறகு பதினைன்கு வருஷகாலமே அவள் ஜீவித்திருந்தாள். இறக்கும் சமயத்தில் அவள் ஷாஜிஹானை நோக்கி, தனக்குப் பிறகு அவர் வேறொரு ஸ்திரீயையும் விவாகம் செய்து கொள்ளாமலிருக்க வேண்டுமென்றும், தன் பெயர் என்றைக்கும் அழியாமல் இருக்கும்படி ஒரு கோரி கட்டவேண்டுமென்றும் சொன்னாள். அவர் அப்படியே செய்வதாக வாக்களித்து அவள் இறந்தபிறகு அவ்வாறே நிறைவேற்றினார். இரண்டாம் தாரம் அவர் கலியாணம் செய்துகொள்ளவில்லை. அவனை


மும்தாஸ் மஹால்.

அடக்கம் செய்த இடத்தில் தாஜ் மஹால் என்ற பெயருள்ள அதிவிநோதமான கோரியைக் கட்டினார். அவ்வளவு அழகான கோரி உலகத்தில் வேறு எங்குமில்லை. அது யமுனை



தாஜ் மஹால்.

நதிக்கரையில் அமைந்திருக்கிறது. அதைப் பார்த்தால் இன்றே அல்லது நேற்றே கட்டின கட்டிடம்போல் தோற்றும். அதைக் கட்டி முடிப்பதற்கு முப்பது வருஷகாலமும், முப்பதுலக்ஷம் ரூபாய் செலவும் ஆயின. ரத்தினங்கள் இழைத்த சலவைக் கற்களால் அது கட்டப்பட்டிருக்கிறது.

டில்லியிலுள்ள ஜம்மாமசூதியும், ஆக்ராவிலுள்ள முத்து மசூதியும் அவரால் கட்டப்பட்டவைகளே; முதல் முதல் டில்லியில் மயிலாசனத்தை ஏற்படுத்தியவர் அவரே; அவர் கட்டிட வேலைகளைக் கவனித்துக்கொண்டிருக்கையில் அவர் குமாரரான ஔரங்கசிப் என்பவர் தக்காணத்தை ஜயித்துக் கொண்டிருந்தார்.

ஷாஜிஹான் காலத்திலே தான் ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் என்னும் ஆங்கிலேய வர்த்தகச்சங்கத்தார்கள் அப்போது

சிறு கிராமமாக இருந்த சென்னையைச் சம்பாதித்து ஸெண்டு ஜார்ஜ் கோட்டையைக் கட்டினார்கள். அல்லாமலும் கங்கை யாற்றின் முகத்துவாரத்தில் ஒரு வர்த்தகசாலையை ஏற்படுத்திக்கொண்டார்கள். இப்போது கல்கத்தாவாக விளங்குவது அந்த இடமே.

ஷாஜிஹானுக்குப் புத்திரர்கள் நால்வர். நான்குபேர்களும் நான்குவிதமான இயற்கையுடையவர்கள். மூத்தவரான தாரா என்பவர் தைரியமும், கம்பீரமும்பொருந்தியவர்; தாராளமான மனமும், பிறரிடம் அன்பும் உள்ளவர். ஆனால் கர்வியாகவும், முன் யோசனையில்லாதவராகவும் இருந்தார்; அக்பரைப்போல் இந்துக்களிடத்தில் அன்புபாராட்டிவந்தார். அதனால் மகம்மதியர்களுக்கு அவரிடம் வெறுப்பு ஏற்பட்டது. இரண்டாம் குமாரருக்கு ஷூஜா என்று பெயர். அவர் தைரியமும், சாமர்த்தியமும் உடையவர்; ஆனால் ஜிஹாங்கிரைப்போல் சுகானுபவத்திலேயே விசேஷமான பிரியமுள்ளவராக இருந்தார். மூன்றும் குமாரரான ஔரங்கசிப் அதிகாரத்தில் ஆசைகொண்டவர்; மிக்க தந்திரசாலி; மத வைராக்கியமும் உடையவர்; இந்துக்களையும் அவர்கள் மதத்தையும் வெறுத்தார். நான்காம் குமாரரான மூராத் என்பவர் வேட்டையாடுவதிலும், கள் குடிப்பதிலும் பிரியம் உள்ளவர்; சிறிதும் கபடமில்லாதவர். அவரிடம் ஔரங்கசிப் தமக்கு உலக இன்பத்தில் பிரியமில்லை யென்றும், தம்முடைய காலத்தையெல்லாம் கடவுளைத் தொழுவதிலேயே செலுத்தப் போவதாகவும், அவருக்கு ராஜ்யத்தைச் சம்பாதிக்கத் தாம் உதவி செய்வதாகவும் சொன்னார். அவ்வார்த்தைகளையெல்லாம் மூராத் உண்மையென்று நம்பி மோசம்போனார். நான்கு சகோதரர்களும் தனித்தனியான சேனையுடன் ஒவ்வொரு மாகாணத்தை ஆண்டுவந்தார்கள். தாரா டில்லியிலும், ஷூஜா வங்காளத்திலும், ஔரங்கசிப் தக்காணத்திலும், மூராத் கூர்ஜாத்திலும் இருந்தார்கள்.

தம்முடைய எழுபதாம் பிராயத்தில் ஷாஜிஹான் ஒரு கடுமையான வியாதியால் வருந்தினார். அவர் இறந்துவிடுவார் என்று எல்லாரும் எண்ணினார்கள். உடனே ராஜ்யத்திற்காக அவருடைய நான்கு குமாரர்களும் சண்டைபோட ஆரம்பித்தார்கள். அவர்களுக்குள் ஐந்து வருஷம் சண்டை

நடந்தது. கடைசியில் ஔரங்கசிப் வெற்றியடைந்து சக்கரவர்த்தியானார். தாராவும், மூராதும் கொலையுண்டார்கள்; ஷுஜா அஸ்ஸாமுக்கு ஓடினார்; ஆனால் அஸ்ஸாம் அரசன் அவரை ஔரங்கசிபினிடம் காட்டிக்கொடுத்தான். பிறகு ஔரங்கசிப் அவரையும் அவர் குழந்தைகளையும் கொன்றுவிட்டார். ஷாஜிஹான் ஔரங்கசிபினால் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டு அதில் ஏழு வருஷம் இருந்து இறந்தார்.

பாவஞ்செய்தால் அதை அனுபவித்தே தீரவேண்டுமென்பது ஷாஜிஹான் விஷயத்தில் உண்மையாயிற்று. தம்முடைய பிதாவுக்கு விரோதமாக அவர் ஆரம்பத்தில் கலகஞ் செய்து தம் சகோதரர்களையும் அவர்கள் குழந்தைகளையும் கொன்றார்; ஆதலால் அந்தியகாலத்தில் ஔரங்கசிபினால் மிகுந்த துன்பத்தை அனுபவித்தார். மொகலாய சக்கரவர்த்திகளுள் முதல் இருவருக்கும் கடைசி இருவருக்கும் உள்ள வித்தியாசத்தைக் கவனிக்கவேண்டும். பேபர் தம் பிள்ளைக்காக உயிரைக் கொடுத்தார். ஹுமாயூன் தம் தம்பிகள் என்ன கெடுதி செய்தபோதிலும் அவர்களை மன்னித்துவந்தார். ஷாஜிஹானும் ஔரங்கசிபும் தந்தைகளிடம் விரோதம் பாராட்டிக் கலகஞ் செய்ததல்லாமல் தங்கள் சகோதரர்களையும் அவர்கள் குழந்தைகளையும் கொலை செய்தார்கள்.



## 28. ஔரங்கசிப்.

(1658–1707.)

ஔரங்கசிப் சிம்மாசனம் ஏறியபொழுது அவருக்கு வயது நாற்பது; அக்பரைப்போல் அவர் சற்றேறக்குறைய ஐம்பது வருஷம் அரசாண்டார்; அவரைப்போலவே மிகுந்த தைரியமுமுள்ளவர். ஆனால் இரண்டுபேர்களுக்கும் அதிக வித்தியாசமுண்டு. அக்பர் இந்துக்களை நம்பினார்; அவர்களால் மிகுந்த உதவிகளையடைந்து மொகலாய ராஜ்யத்தை உறுதியாக ஸ்தாபித்தார். ஆனால் ஔரங்கசிப் இந்துக்களையும் ஷியா என்ற பிரிவினரான மகம்மதியர்களையும் மிகவும் துவேஷித்து வந்தார். இந்தக் காரணத்தால் மொகலாய ராஜ்யமானது அவர் பட்டத்துக்கு வந்ததுமுதல் சிதைந்துபோக ஆரம்பித்

தது. ஷாஜிஹான் காலத்திற்குப் பிறகு பக்கத்துள்ள மகம்மதிய சிற்றரசர்கள் மகம்மதியரல்லாதவர்களை உபத்திரவம் செய்யத் தலைப்பட்டார்கள். ஔரங்கசிபுக்கு முன்பு இருந்த எந்த மொகலாய சக்கரவர்த்தியும், ஜாதிவித்தியாசம் பாராட்டி நடந்ததாகத் தெரியவில்லை. மகம்மதியர்களுக்குள் ஸுன்னி என்றும் ஷியா என்றும் இரண்டு வகுப்புக்கள் உண்டு. ஔரங்கசிப் முதல் வகுப்பைச் சேர்ந்தவர். இந்துக்களையும் ஷியர்களையும் அவர் மிகவும் வெறுத்துவந்தாலும், அக்காலத்திலிருந்த மற்ற மகம்மதிய அரசர்களைப் போல் அவர்களைத் துரத்தியடிக்கவும் இல்லை; தமது மதத்தையே அனுஷ்டிக்க வேண்டுமென்று நிர்ப்பந்திக்கவுமில்லை.


ஔரங்கசிப்.

ஆனால் ஷியர்களுக்கும் இந்துக்களுக்கும் ராஜாங்கத்தில் அவர் பெரிய உத்தியோகங்கள் கொடுக்கவில்லை; இந்து ஆலயங்களையும் அவற்றிலுள்ள விக்கிரகங்களையும் வேண்டிய அளவு நாசம் செய்தார். அவர் இந்துக்களையும் ஷியர்களையும் மரியாதையாக நடத்திவந்திருந்தால் அவருடைய அரசாட்சியில் ஜனங்களுக்கு அக்பர் அரசாட்சியைக் காட்டிலும் விசேஷமான அனுகூலங்கள் ஏற்பட்டிருக்கும். ஏனெனில் பெரிய சக்கரவர்த்திக்கு இருக்கவேண்டிய சிறந்த யோக்கியதைகள் பெரும்பாலும் அவருக்கு உண்டு.

தெய்வத்துக்கு அவர் பயந்து நடப்பார். மகம்மதிய வேதமென வழங்கும் கொரான் என்னும் புஸ்தகம் முழுவதையும் அவர் நன்றாக ஒப்பிப்பார்; அதை இரண்டுமுறை தம் கையினாலேயே அவர் பிரதி செய்திருக்கிறார். அவர் மதுபானம் செய்ததேயில்லை. துரைத்தன வரும்படியை அவர் சிறிதும் உபயோகித்துக்கொள்ளாமல் ஜனங்களின் க்ஷேமத்துக்கே செலவிட்டார். குல்லாக்கள் செய்து விற்று அந்த

வரும்படியைத் தம் சொந்தச் செலவுக்கு வைத்துக்கொண்டார். தெருவில் வேலைசெய்யும் சாமான்னிய வேலைக்காரனைப்போல் மிகவும் சாதாரணமான ஆகாரத்தை அவர் புசித்துவந்தாரேயல்லாமல், டாம்பிகமான உணவை விரும்பினதில்லை. விரத தினங்களில் அவர் பட்டினி இருப்பது வழக்கம்; சிம்மாசனத்தில் உட்காரும் காலத்தைத்தவிர மற்றக் காலங்களில் அவர் தம்மை ஆடையாபரணங்களால் அலங்கரித்துக் கொள்வதில்லை. அவர் சன்மார்க்கத்திலேயே ஒழுகிவந்தார்.

அவர் ஒரு புலித்தோலின்மேல் படுத்துத் தூங்குவது வழக்கம். வேறு வேலைகளைக் காரணமாகச் சொல்லி ஜபம் செய்யும் வழக்கத்தை அவர் நிறுத்தியதேயில்லை. மிகவும் கடுமையாக யுத்தம் நடக்கும்போதும் அவர் ஜபம் செய்யாமல் இருந்ததில்லை. தமது மதத்தில் அவருக்கிருந்த விசேஷமான பற்றே இந்துக்களுடைய கோயில்களை அவர் அழித்ததற்கும் அவற்றிலுள்ள விக்கிரங்களை உடைத்ததற்கும் காரணமாக இருந்தது. அக்பர்காலத்தில் நின்றிருந்த ஜஸையா என்னும் வரி அவரால் திரும்பவும் ஏற்படுத்தப்பட்டது. இக்காரணங்களால் இந்துக்களில் அநேகர் அவருக்கு விரோதிகளானார்கள். ராஜ்யமும் பலக்குறைவையடைந்தது.

அப்போது ஜோதிபுரியை ஆண்ட ரஜபுத்திர அரசர் ஒருவர் ஔரங்கசிபுக்குப் பின்வருமாறு ஒரு கடிதம் எழுதியனுப்பினார்:—

"எல்லா ஜனங்களாலும் மிகவும் உயர்வாகப் பாராட்டப்படுகிற மதநூல்களை நன்றாக ஆராய்ந்து படித்துப்பார்த்தால், மகம்மதியர்களுக்கு மாத்திரமேயல்லாமல் எல்லா மதத்தினர்களுக்கும் தெய்வமுண்டென்பது மகாராஜா அவர்களுக்கு நன்கு தெரியவரும். இந்துக்கள் ஆலயங்களில் தெய்வத்தைத் தொழுகிறார்கள்; மகம்மதியர்கள் பள்ளி வாசல்களில் கடவுளை வழிபடுகிறார்கள். மகா சமுகத்தின் முப்பாட்டனாரும், மிக்க புகழ்பெற்றவருமான அக்பர் சக்கரவர்த்தியானவர் மதவித்தியாசமும் ஜாதிபேதமும் பாராட்டாமல் எல்லாரையும் ஒரே மாதிரியாக நடத்திவந்தார். அவருக்குப்பின் அரசாட்சிசெய்த அவ்விடத்திய முன்னோர்




களும் அக்பருடைய கொள்கையை மாற்றவில்லை. ஆனால் மகாராஜா அவர்கள்மட்டும் இந்துக்களை வருத்தவேண்டு மென்ற வைராக்கியத்துடன் இருந்து வருவது நன்றாக

இல்லை. இவ்வாறு இருப்பது ஜனங்களின் அபிவிருத்தியை யும் க்ஷேமத்தையும் குறைத்துவிடும்."

அக்கடிதத்திற்கு ஔரங்கசிப் இன்னபதில் எழுதினு ரென்று தெரியவில்லை.

ஔரங்கசிப் ரஜபுத்திரர்களை மிகவும் கொடுமையாக நடத்தினுர். உதயபுரிக்கு அரசரான ஜஸ்வந்த சிங்கு என் பவர் மொகலாய சக்கரவர்த்தியிடம் வெகுகாலம் சேனுதிபதி யாக இருந்தார். அவர் இறந்ததும் அவருடைய குமார ரான அஜித சிங்கை ஔரங்கசிப் சிறையில் வைத்து உதய புரியை அராஜகமாகச் செய்துவிட்டார். அதனுல் ரஜபுத் திரர்களுக்கு மிகுந்த கோபம் உண்டாயிற்று. அவர்கள் எல்லாரும் ஒன்றுசேர்ந்து கலகம் செய்து சுதந்தரம் கொண் டாடினுர்கள். ஜயபுரி (Jeypore) அரசர்மாத்திரம் ஔரங்க சிபுக்கு அடங்கியிருந்தார்; ரஜபுத்திரர்களுடைய விரோதத் தைச் சம்பாதித்துக்கொண்டது ஔரங்கசிப் செய்த தவறு களுள் முதன்மையானது.

இந்துராஜ்யங்களுள் ஔரங்கசிபுக்கு மிகுந்த உபத்திரவத் தை விளைவித்தது மகாராஷ்டிர ராஜ்யம். இந்துக்களில் ராஷ் டிரகுதர்களின் பரம்பரையினரான மகாராஷ்டிரர்கள் என்னும் ஒருவகையார் மேற்குத் தொடர்ச்சிமலையின் அருகில் குடி யேறி, கொஞ்சங்கொஞ்சமாகப் பலமடைந்து பிரபலத்துக்கு வந்தார்கள். சிவாஜியென்பவர் முதலில் அவர்களுக்குத் தலைவராக இருந்தார். விஜயபுரியை ஆண்டுவந்த சுல்தான் கள் மகாராஷ்டிரர்களுக்கு ராஜ்யத்தில் தகுந்த உத்தியோகங் கள் கொடுத்துவந்தார்கள். சிவாஜியின் தகப்பனுர் ஒரு சுல்தானிடம் வேலைபார்த்துவந்தவர்; மகம்மதிய சிற்றரசர் களுக்குள் ஒற்றுமைக்குறைவு ஏற்பட்டதனுல் மகாராஷ்டி ரர்கள் தலையெடுக்க ஆரம்பித்தார்கள். சிவாஜி அவர்களுக்கு அரசராக முடிசூட்டிக்கொண்டார். அவர் மிக்க தந்திரசாலி. மொகலாயர்களுக்குப் பலவிதமான இடையூறுகளை அவர் செய்துவந்தார். ஔரங்கசிபுக்கும் அவரிடத்தில் கொஞ்சம் அச்சம் உண்டு. மகாராஷ்டிர ராஜ்யத்தை விருத்திபண்ணு வதற்கு அவர் முயற்சி செய்து சில இடங்களைப் பிடித்துக் கொண்டார். அவர் 1680-இல் இறந்தார்.

மகாராஷ்டிரர்களுக்கும் ஔரங்கசிபுக்கும் இருபதுவருஷம் சண்டை நடந்தது. சில சமயங்களில் ஔரங்கசிபுக்கு ஜயமும் சில சமயங்களில் மகாராஷ்டிரர்களுக்கு ஜயமும் உண்டாயின. மகாராஷ்டிரர்கள் சிறந்த குதிரைவீரர்கள். ஔரங்கசிபினுல் அவர்களுடைய பலத்தை முற்றிலும் அடக்க முடியவில்லை. சிவாஜி இறந்தபிறகு அவருடைய குமாரரான சாம்பாஜியைச் சிறைப்படுத்தி அவனைச் சில வருஷங்களுக்குப்பிறகு ஔரங்கசிப் கொன்றுவிட்டார். மகாராஷ்டிரர்களுடன் நடந்த சண்டையில் ஔரங்கசிபின் சேனைவீரர்களில் அநேகர் இறந்துபோனுர்கள்.

ஔரங்கசிப் தம் அரசாட்சியில் வேருெரு பெரிய தவறு செய்தார். தக்காணம் முழுவதையும் ஜயிக்கவேண்டுமென்று முயன்ருர். பாமினி ராஜ்யத்தில் பிரிவுபட்ட ஐந்து சிறிய ராஜ்யங்களுள் பீடார், பேரார், ஆமத்நகரம் ஆகிய இம்மூன்றும் ஷாஜிஹான் காலத்திலேயே ஔரங்கசிபுக்கு வசமாயின. பாக்கி நின்ற விஜயபுரியையும் கோல்கொண்டாவையும் கைப்பற்றவேண்டுமென்ற எண்ணம் அவருக்கு உண்டாயிற்று. அவருடைய யுத்தவீரர்கள் அந்த இரண்டு ராஜ்யங்களின்மேலும் படையெடுத்துச் சென்று இருபத்தைந்து வருஷம் ஒருவிதமான பயனையும் அடையாமல் சண்டை செய்துவந்தார்கள். அதைப் பார்த்த ஔரங்கசிப் தாமே பெருத்த படையுடன் சென்று இரண்டு ராஜ்யங்களையும் கைப்பற்றிக்கொண்டார். அதனுல் மொகலாய ராஜ்யம் அதிக விஸ்தீரணத்தை அடைந்தது. இந்த இரண்டு ராஜ்யங்களுக்கும் ஒருவிதமான இடையூறும் ஏற்படாதவரையில் இவற்றிற்குத் தெற்கிலுள்ள ஆயிரக்கணக்கான இந்து ராஜ்யங்கள் அடங்கி இருந்தன. இந்த இரண்டையும் ஔரங்கசிப் வென்று கைப்பற்றியபிறகு எல்லா இந்து ராஜ்யங்களும் ஒன்றுசேர்ந்து பலமடைந்து அவருக்கு விரோதமாகக் கிளம்பி மொகலாய ராஜ்யத்தின் பலத்தைக் குறைக்க வழிதேடின. சேனைகளின் பலம் ஔரங்கசிபுக்கு வரவரக் குறைந்துபோனமையால் அங்கங்கே நடந்துவந்த கலகங்களை அவரால் அடக்க முடியவில்லை. அவருக்கு உதவி செய்யவும் ஒருவரும் வரவில்லை. அவருடைய குமாரர்களே அவரை வெறுக்க ஆரம்பித்தார்கள். அவருக்கு விருத்தாப்பியம் மேலிட்டது. தம்மு

டைய மரணகாலம் சமீபித்துவிட்டது என்பதை அவர் அறிந்து ஆமத்நகரம் போய்ச் சேர்ந்தார். அங்கிருந்து தம்மு டைய குமாரனன அஜீமுக்கு அடியில் வருமாறு ஒரு கடிதம் எழுதியனுப்பினர்:—

"இப்போது நான் கிழவனுனேன். பலக்குறைவினல் வரு ந்துகிறேன். பிறந்தபொழுது இவ்வுலகத்துக்கு நிர்வாணியாக வந்தேன். இதனை விட்டுப் போகையில் நான் செய்த பாவங் களையெல்லாம் மூட்டைகட்டிக்கொண்டு போகிறேன். என் ஆயுளெல்லாம் வீணுயிற்றே. குடிகளை எவ்வாறு காக்க வேண்டுமோ அவ்வாறு நான் காக்கவில்லையே. மறுமையில் எனக்கு என்னகதி கிடைக்குமோ அறியேன். கடவுள்தான் என்னைக் காப்பாற்றவேண்டும். நான் செய்த காரியங்களை நினைத்தால் உடல் நடுங்குகிறது. ஆனது ஆகிவிட்டது. நான் போகிறேன், போகிறேன், போகிறேன்."

ஔரங்கசிப் 1707—இல் இறந்தார். அவருடைய காலத் துக்குப் பிறகு கொஞ்சங் கொஞ்சமாக மொகலாய ராஜ்யம் நசித்துப்போயிற்று. ஔரங்கசிப் தம்முடைய பிதாவைச் சிறையில் வைக்காமலும் சகோதரர்களைக் கொல்லாமலும் ஹிந் துக்களையும் ஷியர்களையும் வெறுக்காமல் அவர்களிடம் நம்பிக் கை வைத்தும் இருந்திருந்தால் அவருக்கும் மொகலாய ராஜ் யத்துக்கும் இப்பேர்ப்பட்ட துர்த்தசை ஏற்பட்டிராது.

107—ஆவது பக்கத்திலுள்ள படத்தைப் பார்த்தால் ஔரங்கசிப் காலத்தில் இருந்த மொகலாய ராஜ்யத்தின் விஸ் தீரணம் தெரியவரும். அவரால் ஜயிக்கப்படாத ரஜபுத்திர ராஜ்யங்களும் மகாராஷ்டிர ராஜ்யமும் அப்படத்தில் மொக லாய ராஜ்யத்தோடு சேர்க்கப்பட்டுள்ளன.

## 29. மொகலாய அரசாட்சியில் இந்தியாவின் நிலைமை.

அக்பருடைய காலத்தில் இந்தியாவானது பலமாகாணங் களாக வகுக்கப்பட்டது. அம்மாதிரியான மாகாணங்கள் வட இந்துஸ்தானத்தில் பதினைந்து உண்டு. ஒவ்வொரு மாகா ணத்துக்கும் 'சுபை' என்று பெயர். அபுல் பாசல் என்பவர்

எழுதிய 'அயன் ஆக்பரி' என்ற புஸ்தகத்தினால் இந்தப் பிரிவுகளைப்பற்றிய விவரங்களெல்லாம் நன்கு தெரியவரும். வங்காளத்தில் இருபத்துநான்கு ஜில்லாக்கள் அடங்கியிருந்தன. வங்காள ராஜ்யத்திலிருந்து வருஷந்தோறும் ராஜாங்கத்துக்கு ஒன்றரைக்கோடி ரூபாய் வரும்படி வந்தது. அங்கே பல ஜமீன்தார்கள் இருந்தார்கள். ஜனங்களிடத்தில் அவர்கள் மிக்க அன்புகொண்டு அவர்களுக்கு வேண்டிய நன்மைகளைக் கவனித்துவந்தார்கள். ஒவ்வொரு ஜமீன்தாரிடத்திலும் ஒவ்வொரு சேனையுண்டு. டில்லி பாக்ஷா விரும்பும்போது ஜமீன்தார்கள் தங்கள் சேனைகளை அவருக்கு அனுப்பி உதவுவார்கள். பட்டு வஸ்திரங்களும் ரவை சல்லாக்களும் வங்காளத்தில் நெய்யப்பட்டு வந்தன. நெல் ஏராளமாக விளைந்தது. ராஜ்யம் முழுவதும் செழிப்பாயிருந்தது. ஜனக்கூட்டம் அதிகம். வியாபாரம் நன்றாக நடந்துவந்தது.

ஒவ்வொரு மாகாணத்திலும் அக்காலத்தில் எல்லா வளங்களும் நிரம்பியிருந்தன. ஒவ்வொரு சபை அல்லது மாகாணத்தின் தலைமை அதிகாரிக்கு, சுபேதார் என்று பெயர்; அவருக்குக் கீழே வரிதண்டும் வேலையில் திவான் என்ற பெயரோடு பல உத்தியோகஸ்தர்கள் இருந்தார்கள். சேனைகளையெல்லாம் யுத்த முறையில் பழக்கிக்கொண்டு ஒரு சேனாதிபதி இருந்தார். நியாய விசாரணைக்காகவும் ஜனங்களின் பாதுகாப்புக்காகவும் ஒவ்வொரு நகரத்திலும் 'காஜி' என்றும் 'கொத்தவால்' என்றும் பெயர்களையுடைய அதிகாரிகள் இருந்தார்கள். கிராமங்களைப்பற்றிய எல்லா விஷயங்களும் பஞ்சாயத்தாரால் கவனிக்கப்பட்டு வந்தன.

### கல்வி யபிவிருத்தி.

வங்காளத்தில் பல வைஷ்ணவ வித்துவான்கள் பிரசித்திபெற்று, ஸம்ஸ்கிருதத்திலும் வங்காளியிலும் அநேக நூல்களை இயற்றினார்கள். வட இந்துஸ்தானத்தில் இருந்த துளசிதாஸ் என்பவர் ராமாயணத்தை இந்தி பாஷையில் மொழிபெயர்த்தார். அந்த ராமாயணம் எல்லாராலும் கொண்டாடப்பட்டு வருகிறது. தக்காண தேசத்தில் ஸ்ரீதரர் என்னும் பண்டிதரால் மஹாபாரதமும் ராமாயணமும் மகாராஷ்டிர பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டன. துகாராம் என்னும் பக்தசிரோ

மணியால் பக்திமார்க்கத்தைப் போதிக்கும் கீர்த்தனங்கள் வெளிவந்தன. தெலுங்கிலும் தமிழிலும் அநேக வித்துவார்கள் பக்தியைப் புகட்டும் பல நூல்களைச் செய்தார்கள்.

### இந்தியாவுக்கு யாத்திரையாகவந்த அன்னியர்கள்.

மொகலாயர்களுடைய காலத்தில் ஐரோப்பா கண்டத்திலிருந்து பல யாத்திரிகர்கள் இந்தியாவுக்கு வந்து சிலகாலம் தங்கியிருந்து இந்தியாவைப்பற்றியும் ஜனங்களைப்பற்றியும் தாங்கள் தெரிந்துகொண்டமட்டில் விசேஷமாக எழுதியிருக்கிறார்கள். அரிசி, கோதுமை, ரவை முதலியவைகள் இந்தியாவில் அதிகமாக உண்டென்றும், வங்காளத்திலிருந்தும் சீனுவிலிருந்தும் சேணியர்கள் பட்டை வரவழைத்து சரிகை கலந்த பல பட்டு வஸ்திரங்கள் நெய்தார்கள் என்றும், இன்ன இன்ன ஜனங்கள் இன்ன இன்ன வேலைகளைச் செய்துவந்தார்களென்றும், வியாபாரம் செவ்வையாக நடந்துவந்ததென்றும் அவர்களுடைய குறிப்புகளால் தெரிகின்றன. அந்த யாத்திரிகர்களுள் முக்கியமானவர் 'பர்னியா' என்பவர். விவசாயத்திற்கு உபயோகமான கால்வாய்களும், குளங்களும், ஏரிகளும், ஊற்றுகளும் அமைந்திருந்தனவென்றும், ஜனங்கள் நிறைந்த நகரங்கள் பல இருந்தனவென்றும், ஒவ்வொரு இடத்திலும் ஜனங்களுக்கு வேண்டிய முக்கியமான சாமான்கள் யாவும் கிடைத்தன என்றும், சில இடங்களில் பொட்டிலுப்பு, ஈயம், வெடிமருந்து முதலியவைகள் காணப்பட்டனவென்றும், எந்த இடத்தைப் பார்த்தாலும் தமக்கு மிகவும் ஆச்சரியமாகவும் சந்தோஷமாகவும் இருந்ததென்றும் அவர் தெரிவித்திருக்கிறார். 1661-ஆம் வருஷத்தில் இந்தியாவுக்கு வந்த தேவர் நியர் என்னும் ஐரோப்பிய வியாபாரி சில வருஷங்கள் இவ்விடத்திலேயே இருந்து பல இடங்களையும் சுற்றிப்பார்த்தார். இந்தியாவிலுள்ள ரத்தினங்களின் விசேஷத்தைப்பற்றியும் ஷாஜிஹானால் ஏற்படுத்தப்பட்ட மயிலாசனத்தின் அழகைப்பற்றியும் அவர் மிகவும் பாராட்டிக் கூறியிருக்கிறார். ஔரங்கசிபினுடைய காலத்துக்குப் பிறகு மொகலாய ராஜ்யம் நசித்துப்போக ஆரம்பித்ததென்றும் தேசம் செவ்வையாக அரசாட்சி செய்யப்படவில்லையென்றும் அவருடைய குறிப்பினால் தெரிகின்றன.

பதினாறு பதினேழாம் நூற்றாண்டுகளில் இந்தியாவில் அரசாட்சி மிகவும் செவ்வையாக நடந்துவந்ததென்றும், ஜனங்கள் வியாபாரத்தில் அதிக ஊக்கங் கொண்டிருந்தார்களென்றும், ஐரோப்பிய நாடுகளுக்கும் ஆசியா கண்டத்திலுள்ள மற்றத் தேசங்களுக்கும் சாமான்கள் தரைவழியாகவும் கடல்வழியாகவும் போய் வந்துகொண்டிருந்தனவென்றும், ஜனங்களெல்லாரும் நல்ல தேக திடத்தோடு ஆரோக்கியமாக இருந்துவந்தார்களென்றும் பொதுவாக நமக்குத் தெரியவருகின்றன.



## 30. மொகலாய ராஜ்யத்தின் அழிவு.

(1708–1748.)

ஔரங்கசிபுக்குப்பிறகு ஆறு மொகலாய அரசர்கள் டில்லியில் 1757 வரையில் ஐம்பது வருஷகாலம் அரசாட்சிசெய்தார்கள். அவர்களில் ஒருவரும் டில்லி சக்கரவர்த்தியா யிருக்கத் தகுந்த யோக்கியதைகளைப் பெற்றிருக்கவில்லை. தேசத்தில் அவர்களுக்கு அதிகமான செல்வாக்கு இல்லை. மொகலாய ராஜ்யம் நாளுக்கு நாள், தாழ்ந்த நிலைமையை அடைந்துவந்தது. ஔரங்கசிப் காலம்வரையில் அடங்கி இருந்தசுபேதார்களும் ஜமீன்தார்களும் அவருக்குப்பிறகு பிரபலமடைந்து சிறிய தனி ராஜ்யங்களை ஏற்படுத்திக்கொண்டு சுதந்தரம் பாராட்டினார்கள். தேசத்தில், பற்பல இடங்களில் சண்டை நடந்தது. அன்னிய நாட்டார்கள் இந்தியாவுக்கு வந்து இங்கேயுள்ள செல்வங்களைக் கொள்ளையடித்துக் கொண்டு போனார்கள். சீக்கர்களும், மகாராஷ்டிரர்களும், ரஜபுத்திரர்களும் சிறப்புற்று விளங்கினார்கள்.



நானக்ஷா.

### சீக்கர்கள்.

பஞ்சாபில் நானக்ஷா என்ற ஒரு பெரியவர் இருந்தார். அவர் இந்தியர்களையும் மகம்மதியர்களையும் ஒன்றாக்கி ஒரு புதிய மதத்தை ஸ்தாபித்தார். அவருடைய மதத்தை அனுஷ்டித்தவர்களே சீக்கர்கள் (ஸிக் ஜாதியார்) ஆவர். ஔரங்கசிப் காலத்தில் குருகோவிந்தர் என்பவர் சீக்கர்களுக்கு ஆசாரியாராக இருந்தார். ஔரங்கசிப் சீக்கர்களுக்கு அளவற்ற துன்பங்களை உண்டாக்கி அவர்களை இமயமலைக்கு அப்பால் ஓடிப்போகும்படி செய்து குருகோவிந்தரையும் கொன்றுவிட்டார். ஆனால் ஔரங்கசிப் இறந்தபிறகு அவர்கள் மறுபடி பழைய இடத்துக்கு வந்து பிரபலமாக இருந்தார்கள்.

### மகாராஷ்டிரர்களும், ரஜபுத்திரர்களும்.

ஔரங்கசிபுக்கும் மகாராஷ்டிரர்களுக்கும் நடந்த பலமான யுத்தங்களின் விவரம் முன்னமே சொல்லப்பட்டது. ஔரங்கசிபுக்குப் பிறகு டில்லியில் ராஜ்யபரிபாலனம் நன்றாக இல்லாதபொழுது மகாராஷ்டிரர்கள் பலமடைந்து பற்பல ராஜ்யங்களை ஏற்படுத்திக்கொண்டார்கள். ரஜபுத்திரர்களும் அப்படியே மேன்மையடைந்தார்கள்.

### பகதர்ஷா.

(1708–1712.)

பகதர்ஷா என்பவர் ஔரங்கசிபின் மூத்த குமாரர்.


பகதர்ஷா.

ஔரங்கசிபுக்குப் பிறகு அவர் பட்டத்துக்கு வந்தார். அவர் அரசாட்சி செய்தது ஐந்து வருஷகாலமே. ரஜபுத்திரர்களோடும் மகாராஷ்டிரர்களோடும் சமாதானம் செய்துகொண்டார். அவர் காலத்தில் சீக்கர்கள் லாகூரிலிருந்து டில்லி வரையில் வந்து கொள்ளையடித்துச் சென்றார்கள். அப்போது அவர்களை மொகலாயர்கள் கொஞ்சம் தடுக்க முயன்றார்கள். பகதர்ஷா 1712–ஆம் வருஷத்தில் இறந்துபோக அவருக்குப்பிறகு ஏழு வருஷங்களுக்குள் மூன்று அரசர்கள் பட்டத்துக்கு வந்துவிட்டார்கள். அவர்களை 'ஸையத்' வம்சத்தில் பலசாலிகளாக இருந்த இரண்டு

சகோதரர்கள் கொன்றுவிட்டார்கள். 1719-ஆம் வருஷத்தில் மகம்மதுஷா என்பவர் சிம்மாசனம் ஏறினார். அவர் பெயருக்குமட்டும் 1748-ஆம் வருஷம்வரையில் அரசராயிருந்தார். ராஜ்யாதிகாரங்களை யெல்லாம் பலிஷ்டர்களான சுபேதார்கள் நடத்திவந்தார்கள். ஆனாலும் அவர்கள் அவருக்குச் செலுத்த வேண்டிய பகுதிப்பணத்தை முற்றிலும் நிறுத்தாமல் தங்களுக்கு இஷ்டமான தொகையை அனுப்பிவந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் அவருக்கு அடங்கியிருப்பதுபோல் வெளிக்குமட்டும் காட்டிவந்தார்கள். உண்மையில் மகம்மதுஷா டில்லிக்குமட்டும் அதிபதியாக இருந்தார்.



மஹம்மதுஷா.

சுபேதார்களுக்கு அடங்கியிருந்த பல நவாபுகள் காலக்கிரமத்தில் அவர்களுக்கு அடங்காமல் சுவாதீனத்தை அடைந்தார்கள். அவர்களுள் முக்கியமானவர்கள் (1) வங்காளத்திலும் பேகாரிலும், (2) லக்னோவிலும், (3) ரோஹில் கண்டிலும் இருந்தவர்கள்; அரசனுக்கு அடங்காமல் சுவாதீனம் பாராட்டிய சுபேதார்களுள் 'நைசாமுல்முல்க்' என்பவர் ஒருவர். அவர் ஹைதராபாத்தில் இருந்தார். அவருக்கு ஆற்காட்டு நவாபான அன்வருதீன் அடங்கியிருந்தார்.

மகம்மதுஷா காலத்தில் ஹிந்து மகாராஷ்டிர ராஜ்யங்களும், பல ரஜபுத்திர ராஜ்யங்களும் சுதந்தரம் கொண்டாடின. தென் இந்தியாவிலும் சில மகாராஷ்டிர ராஜ்யங்கள் உண்டாயின. அவற்றுள் தஞ்சாவூர் ஒன்றுக்கு ராஜதானியாக இருந்தது. திருச்சிராப்பள்ளி, மைசூர், திருவாங்கூர், கொச்சி, மலையாளம் முதலிய இடங்களில் பல ராஜ்யங்களும் அநேகம் பாளையப்பட்டுக்களும் உண்டாயின. இந்த இடங்களுக்கு அதிபதிகளாயிருந்தவர்கள் தங்கள் தங்கள் இடங்களில் பலமான கோட்டைகளைக் கட்டிக்கொண்டு அதிகாரம் செலுத்திவந்தார்கள்.



நைசாமுல்முல்க்.

### நாதர்ஷா.

மகம்மதுஷாவின் காலத்தில் பாரசீகத்தில் நாதர்ஷா என்னும் ஒரு மகம்மதியர் அரசாட்சி செய்துவந்தார். அவர் காபூல், கந்தகார் என்னும் இடங்களை ஜயித்து, கைபர் கணவாய் வழியாக ஒரு பெருஞ் சேனையுடன் 1739–ஆம் வருஷத்தில் இந்தியாவுக்கு வந்து டில்லியை நோக்கிச் சென்றார்.

தமக்கு ஏராளமான பணங்கொடுத்தால் டில்லியை ஒன்றும் செய்யாமல் திரும்பிப்போய் விடுவதாக அவர் முதவில் சொன்னார்; ஆனால் டில்லியிலிருந்த ஜனங்கள் இராத்திரிவேளையில் நாதர்ஷாவின் வீரர்கள் தூங்கிக்கொண்டிருந்த சமயம் பார்த்து அவர்களில் சிலரைக் கொன்றுவிட்டார்கள். பொழுது விடிந்ததும் நாதர்ஷா நடந்த விஷயத்தை அறிந்து கொண்டு கோபாவேசமடைந்து டில்லிவாசிகளைக் கொல்லும்படிக்கும் அந்த நகரத்தையே கொள்ளையடித்துப் பாழாக்கும்படிக்கும் தம் சேனை வீரர்களுக்குக் கட்டளையிட்டார். உடனே ஆப்கானிய வீரர்களும் பாரசீக வீரர்களும் கிளம்பி ஜனங்களைக் கொன்றும் வீடுகளில் நெருப்பு வைத்தும் பெரிய கட்டிடங்களை யெல்லாம் இடித்தும் தங்களுக்கு இஷ்டமான படி கொள்ளையடித்தும் அன்று மாலை வரையில் பொழுது போக்கினார்கள். அப்போது மகம்மதுஷா தாங்கமுடியாத துக்கத்துடன் நாதர்ஷாவிடம் சென்று அவர் காலில்விழுந்து பொறுத்துக் கொள்ளும்படி பலவாறு கேட்டுக் கொண்டார். பிறகு நாதர்ஷா மனமிரங்கி அதற்குமேல் ஒன்றும் செய்ய வேண்டாமென்று தம் படைவீரர்களுக்கு உத்தரவிட்டார்.

பேபர் காலம் முதல் மொகலாய சக்கரவர்த்திகள் சேர்த்து வைத்திருந்த விலை மதிப்பில் அடங்காத அரிய பெரிய பொருள்களையும், உயர்ந்த கிரீடங்களையும், ரத்தினாபரணங்களையும், உலகத்தில் இப்போது மிகவும் சிறந்ததாய் விளங்கும் கோகினூர் என்னும் வைரத்தையும், ஷாஜிகான் செய்துவைத்த மயிலாசனத்தையும், டில்லியிலும், அயோத்தியிலும் இருந்த தனவான்களுடைய வீடுகளில் அகப்பட்ட பொருள்களையும் எடுத்துக்கொண்டு மறுநாள் நாதர்ஷாவும் அவருடைய யுத்த வீரர்களும் பாரசீகத்துக்குப் போனார்கள். அங்கு போய்ச் சேர்ந்ததும் தாம்கொண்டுவந்ததிரவியங்களைப்பார்த்து அவற்றை இன்னது செய்வதென்றுதெரியாமல் நாதர்ஷா திகைத்துப்போனார்.

நாதர்ஷா படையெடுத்துவந்து போனபிறகு மொகலாய ராஜ்யம் மிகவும் துர்ப்பலத்தையடைந்து நசித்துப்போயிற்று. சுபேதார்களும் நவாபுகளும் தாங்கள் வழக்கமாகச் செலுத்திக்கொண்டுவந்த கப்பத்தை அதுமுதல் நிறுத்திவிட்டார்கள். மகராஷ்டிரர்கள் முன்னிலும் அதிகமான தைரியமடைந்து வங்காளத்தையும் தென்னிந்தியாவையும் ஜயித்துஜனங்களுக்கெல்லாம் 'சௌத்' என்னும் ஆள்வரியை விதித்தார்கள். கல்கத்தாவில் வியாபாரம் செய்துகொண்டிருந்த ஆங்கிலேயர்களிடத்தும் சென்று தங்கள் பராக்கிரமத்தை அவர்களுக்குக் காட்ட ஆரம்பித்தார்கள்; ஆனால் ஆங்கிலேயர்கள் தங்களிடம் மகராஷ்டிரர்கள் நெருங்காமல் இருக்கும்படி பெரியதோர் அகழியை வெட்டினார்கள்.



நாதர்ஷா.

1747–ஆம் வருஷத்தில் நாதர்ஷா இறந்துபோக அவருடைய பிரதானிகளில் ஒருவரான ஆமத்ஷா அப்துல் ஆலி என்பவர் ஆப்கானிஸ்தானத்துக்கு அதிபதி யானார்.

மகம்மதுஷா 1748–ஆம் வருஷத்தில் காலஞ்சென்றார். அவருக்குப் பிறகு அவருடைய குமாரரான ஆமத்ஷா என்பவர் டில்லியை ஆறு வருஷம் ஆண்டார். அவருடைய காலத்தில் ஆப்கானிஸ்தானத்திலிருந்து ஆமத்ஷா அப்துல் ஆலி டில்லிக்குவந்து ஜனங்களைச் சித்திரவதை செய்தார். ஆனாலும் அவரோடு ஆமத்ஷா போர்புரிந்து அவரை ஆப்கானிஸ்தானத்துக்குத் துரத்திவிட்டார்; பிறகு ரோகில்கண்டு என்னும் இடத்தில் பிரபலத்தை யடைந்துவந்த ரோகிலர்களை ஆமத்ஷா அடக்கினார்.

1751–ஆம் வருஷத்தில் ஆமத்ஷா அப்துல்ஆலி இரண்டாம்முறை படையெடுத்துவந்தார். அப்பொழுது ஆமத்ஷா பஞ்சாபைக் கொடுத்து அவருடன் சமாதானம் செய்து

கொண்டார். பிறகு 1754-ஆம் வருஷத்தில் ஆமத்ஷாவை ஆப்கானிய அரசரான ஆமத்ஷா அப்துல்ஆலி பட்டத்திலிருந்து நீக்கி அவர் கண்களைப் பிடுங்கிவிட்டார்; பிறகு கியாஸுடீன் என்னும் மந்திரி அலங்கீர் என்னும் மொகலாயரைச் சிம்மாசனத்திலேற்றி மகாராஷ்டிரர்களுடைய உதவியைப் பெற்று, பஞ்சாபின்மேல் படையெடுத்துச் சென்றார். அதனால் ஆமத்ஷா அப்துல் ஆலி கோபமடைந்து மூன்றாம் முறை டில்லியை நோக்கிப் படையெடுத்துவந்து ஜனங்களைத் துன்பப்படுத்தி விட்டுத் தம்மிடம் போனார். பிறகு அலாங்கீர் கியாஸுடீனால் கொல்லப்பட்டார்.

சில காலத்துக்குப் பிறகு ஆமத்ஷா அப்துல் ஆலி இந்தியாவின்மேல் நான்காம் முறை படையெடுத்து வந்தார். அவர் மகாராஷ்டிரர்களையும் மற்ற இந்தியர்களையும் அழிக்க எண்ணி மகம்மதியர்களை யெல்லாம் தம் கக்ஷியில் சேர்த்துக்கொண்டார்; ஹிந்துக்களுக்கும் மகம்மதியர்களுக்கும் 1761-ஆம் வருஷத்தில் பானிப்பட்டு என்னும் இடத்தில் பலமான யுத்தம் நடந்தது. லக்ஷக்கணக்கான மகாராஷ்டிரர்கள் அதில் மடிந்து போனார்கள். மொகலாய ராஜ்யம் இருந்த இடம் தெரியாமற் போய்விட்டது. கடைசியில் மொகலாய அரசராக இருந்த அலாங்கிருடைய குமாரர் ஷாஆலம் என்பவர் ஆங்கிலேயர்களிட மிருந்து உபகாரச் சம்பளம் பெற்று ஜீவித்து வந்தார்.

சிலகாலம் வரையில் இந்தியாவானது ஒருவராலும் ஆளப்படாமல் இருந்தது. அங்கங்கே இருந்த சிறு ராஜ்யங்களை அடக்கியாளத்தக்க சக்கரவர்த்தி ஒருவருமில்லாமையால் ஜனங்களுக்குள் கலகங்களும் திருட்டுப் பயமும் உண்டாயின. ஒருவன் தன்னுடைய சொத்தைத் தனது என்று நினைக்க இடமில்லாமலிருந்தது. அக்கிரமங்கள் அதிகரித்தன. நியாயம் செய்பவர்களைக் கண்டிக்கும் அதிகாரிகள் இல்லை. தேசம் இந்த நிலைமையிலிருந்தபொழுது ஆங்கிலேயர்கள் இந்தியாவுக்கு வந்து பிரபலமடைந்து கொஞ்சங் கொஞ்சமாக இந்திய முழுவதையும் ஜயித்து ஜனங்களுக்குப் பலவிதமான அனுகூலங்களைச் செய்து அவர்களுக்கு அமைதியையும் சௌக்கியத்தையும் அளித்தார்கள். இவ்வாறு ஏற்பட்டது கடவுளுடைய கிருபையென்றே சொல்லவேண்டும்.

# PART IV.

## நான்காம் பாகம்.

### 31. பழையகாலத்தில் ஐரோப்பாவுக்கும் இந்தியாவுக்கும் நடந்த வர்த்தகம்.

இப்போது இந்தியாவானது ஆங்கிலேய அரசாட்சிக்கு உட்பட்டிருக்கிறது. இங்கிலாந்தின் அரசரே இதனை ஆண்டு வருகிறார். ஆங்கிலேயர்கள் இந்தியாவுக்கு எப்போது வந்தார்கள்? எப்படி வந்தார்கள்? எதற்காக வந்தார்கள்? ஆங்கிலேய அரசாட்சிக்கு இந்தியா எப்படி வந்தது? இந்த விஷயங்களைப்பற்றி இனிமேல் தெரிந்துகொள்வீர்கள்.

சற்றேறக்குறைய முந்நூறு வருஷங்களுக்கு முன் ஆங்கிலேயர்கள் இந்தியாவுக்கு வியாபாரநிமித்தம் வந்தார்கள்; ஐரோப்பாவில் கிடைக்காத பொருள்களை இந்தியாவுக்கு வந்து வாங்கிக்கொண்டு போனார்கள். இங்கிலாந்தானது மிகவும் குளிர்ந்த தேசம்; அதனால் அவ்விடத்தில் மிளகு, நெல், பருத்தி, அவுரி, இஞ்சி, வாசனைத் திரவியங்கள், தேங்காய், கசகசா, கரும்பு முதலியன உண்டாவதில்லை; பழைய காலத்தில் இங்கிலாந்தைக்காட்டிலும் இந்தியாவில் மிகவும் அழகான பட்டு வஸ்திரங்களும், மெல்லிய சல்லாக்களும் நெய்யப்பட்டு வந்தன. அக்காலத்தில் ஆங்கிலேயர்கள் இந்தியாவில் அகப்படாத தாமிரம், கம்பளங்கள், கண்ணாடிரசம், இரும்பு ஆயுதங்கள், எஃகினால் செய்த சாமான்கள் முதலியவற்றை இந்தியாவுக்குக் கொண்டுவந்தார்கள்.

வியாபாரிகள் ஒட்டகங்களின்மேலும் கோவேறு கழுதைகளின்மேலும் சாமான்களை ஏற்றிக்கொண்டு இந்தியாவிலும் ஐரோப்பாவிலும் வியாபாரத்தை நடத்தினார்கள். இந்தியாவிலிருந்து ஆப்கானிஸ்தானம், பாரசீகம், ஆசியா மைனர் முதலியவற்றின் வழியாக ஐரோப்பாவுக்குப் போகவேண்டும்.

இந்த நாடுகளையெல்லாம் அரேபியர்கள் ஒருகாலத்தில் பிடித்துக்கொண்டபோது வியாபாரமே நின்றுவிட்டது. ஐரோப்பியர்களுக்கும் அவர்களுக்கும் பலமான சண்டை பல நூற்றுண்டுகள் வரையில் நடந்தபடியால் ஐரோப்பியர்கள் அந்த நாடுகளின் வழியாகத் தங்கள் தேசங்களுக்குப் போக முடியவில்லை.

தங்களுக்கு வேண்டிய சாமான்களை ஐரோப்பியர்கள் தரைமார்க்கமாகக் கொண்டுவர முடியாமையால் கடல் வழியாகக் கொண்டுவர முயன்றார்கள். அக்காலத்தில் ஐரோப்பிய வர்த்தகர்கள் ஆபிரிக்காகண்டத்தைச் சுற்றிக்கொண்டு நன்னம்பிக்கைமுனைவழியாக இந்தியாவுக்கு வரவேண்டியிருந்தது. முதல் முதல் இந்தவழியைக் கண்டுபிடித்தவர்கள் போர்ச்சுகல் தேசத்தார்கள். அவர்கள் ஆபிரிக்கா கண்டத்தின் ஓரமாகப் பிரயாணம் செய்து நன்னம்பிக்கை முனையைத் தாண்டி இந்துமகாசமுத்திரம்வரையில் வந்தார்கள். கடைசியில் போர்ச்சுகல் தேசத்துக் கப்பற் படைத்தலைவரான வாஸ்கோடிகாமா என்பவர் 1498–ஆம் வருஷத்தில் இந்தியாவின் மேற்குக்கரையிலுள்ள கள்ளிக்கோட்டையை அடைந்தார்.

கள்ளிக்கோட்டையில் உள்ள அரசருக்குத் தம்பிரான் என்று பெயர். அப்போது இருந்த அரசர் தம்முடைய தேசத்தாரோடு வியாபாரம் செய்யலாமென்று வாஸ்கோடிகாமாவுக்கு உத்தரவு கொடுத்தார். அல்லாமலும் அவர் இந்தியாவில் மிளகு, இஞ்சி, லவங்கம், லவங்கப்பட்டை முதலியவை ஏராளமாகக் கிடைக்குமென்றும் அவற்றைப் பெற்றுக்கொண்டு தங்கம், வெள்ளி, பவழம், சாயத்துணி முதலியவற்றைக் கொடுக்கவேண்டுமென்றும் வாஸ்கோடிகாமாவுக்குத் தெரிவித்தார்.

1500-ஆம் வருஷத்துக்குப் பிறகு சற்றேறக்குறைய ஒரு நூற்றுண்டு வரையில் இந்தியாதேசத்தோடு வியாபாரம் நடத்திக்கொண்டிருந்த ஐரோப்பியர்கள் போர்ச்சுகல் தேசத்தவர்களே ஆவர். அவர்களுக்கு, கோவா என்னும் இடத்தில் பலமான கோட்டை ஒன்று இருந்தது. இன்றைக்கும் அது அவர்களுடைய சுவாதீனத்தில்தான் இருக்கிறது.



வாஸ்கோடி காமாவும், ஜாமொரினும்.

வியாபாரத்தில் போர்ச்சுகல் தேசத்தார்களுக்கு விசேஷமான லாபம் கிடைத்துவந்ததை அறிந்த மற்ற ஐரோப்பிய நாட்டார்கள் தாங்களும் வியாபாரம் செய்து பணம் சம்பாதிக்க எண்ணினார்கள். ஆகையால் டச்சுக்காரர்கள், ஆங்கிலேயர்கள், பிரெஞ்சுக்காரர்கள், டேனிஷ்காரர்கள், ஜர்மானியர்கள், ஸ்வீடிஷ்காரர்கள் முதலியோர் தங்கள் கப்பல்களை இந்தியாவுக்கு அனுப்பி வியாபாரம் செய்துவந்தார்கள். ஆனால் முதல் மூன்று தேசத்தார்களுக்குமட்டுமே தகுந்தலாபம் கிடைத்தது. மற்றவர்களுக்கு லாபம் கிடைக்காமையினால் அதைரியமடைந்து இந்தியாவோடு வியாபாரம் செய்வதை நிறுத்திக்கொண்டார்கள்.

போர்ச்சுகல் தேசத்தாருக்குப்பிறகு இந்தியாவுக்கு வந்தவர்கள் டச்சுக்காரர்கள். அவர்களுடைய ஜன்மதேசம் ஹாலண்டு என்பது. அதனால் அவர்களை உலாந்தாக்காரர்களென்றும் சொல்வதுண்டு. முந்நூறு வருஷங்களுக்கு முன்பு மிகவும் உயர்ந்த கப்பல்களும் கப்பற்படையும் அவர்களுக்கு இருந்தன. போர்ச்சுகல் தேசத்தாரைக்காட்டிலும் அவர்கள் மிக்க தைரியசாலிகளாயிருந்தமையால் இந்தியாவில் கோவா

வைத்தவிர வேறு எந்த இடத்திலும் அவர்களை இருக்கவொட்டாமற் செய்தார்கள். 1600-ஆம் வருஷம்முதல் 1700-ஆம் வருஷம்வரையில் வாசனைத்திரவிய வியாபாரம் முழுவதும் டச்சுக்காரர்கள் கையிலேயே இருந்தது. கொச்சி, இலங்கைத்தீவு, ஸுமாட்ரா என்னும் இடங்களில் அவர்களுக்கு அநேகம் பண்டசாலைகள் உண்டு.



## 32. ஈஸ்ட் இந்தியா கம்பெனியார்.

1600-ஆம் வருஷத்தில் லண்டன் நகரத்திலிருந்த சற்றேறக்குறைய நூறு வர்த்தகர்கள் இந்தியாவோடு வியாபாரம் செய்ய எண்ணினார்கள். அதற்காக அவர்களெல்லாரும் ஒன்றுசேர்ந்து ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் என்னும் பெயரை வைத்துக்கொண்டார்கள். பிறகு தாங்களே இந்தியாவோடு வியாபாரம் செய்யலாம் என்னும் உரிமையை அக்காலத்தில் இங்கிலாந்தின் அரசியாயிருந்த எலிஸபெத் மகாராணியாரிடமிருந்து பெற்றுக்கொண்டார்கள். அக்காலத்தில் அக்பர் சக்கரவர்த்தி இந்தியாவை ஆண்டு வந்தார்.



எலிஸபெத் ராணி.

1612-ஆம் வருஷத்தில் மேலேசொன்ன வர்த்தக சங்கத்தார்கள் இந்தியாவின் மேற்குக்கரையிலுள்ள சூரத் என்னும் இடத்தில் ஒரு பண்டசாலையை ஏற்படுத்திக்கொண்டார்கள். மொகலாயர்களுக்கு முக்கியமான கோட்டை சூரத்தில் இருந்தது. வர்த்தக சங்கத்தார்கள் தங்களுடைய சாமான்களையெல்லாம் அந்தப் பண்டசாலையில் சேர்த்து வைத்துக்கொண்டு அவைகளைக் கப்பலின் மூலம் இங்கிலாந்துக்கு அனுப்பி வந்தார்கள்.

அன்றியும் இங்கிலாந்திலிருந்து சில சாமான்களை வரவழைத்து இந்திய வியாபாரிகளுக்கு விற்றுவந்தார்கள்.

ஈஸ்ட் இந்தியா வர்த்தக சங்கத்தாருக்கு விசேஷமான லாபம் கிடைத்துவந்ததைக் கண்டு இங்கிலாந்திலுள்ள மற்ற வியாபாரிகள் மிகவும் பொருமைகொண்டு தாங்களும் பணம் சம்பாதிக்க ஆசைப்பட்டார்கள். போட்டியாகப் பல வர்த்தக சங்கங்கள் அதனால் ஏற்பட்டன. ஒரு நூற்றாண்டு வரையில் வர்த்தக சங்கத்தார்கள் எல்லாரும் சண்டை போட்டுக்கொண்டே இருந்தார்கள். கடைசியில் அவர்கள் எல்லாரும் சேர்ந்து சமாதானம் செய்துகொண்டு ஈஸ்ட் இந்தியா ஐக்கிய வர்த்தக சங்கம் என்ற ஒரு சங்கத்தை ஏற்படுத்திக்கொண்டார்கள். அப்பொழுது இருந்த ஆங்கிலேய அரசர் இந்தச் சங்கத்தார்களுக்கு இந்தியாவில் இஷ்டப்படி வியாபாரம் நடத்திவரும்படி அதிகாரம் கொடுத்தார்.

1639-ஆம் வருஷத்தில் இந்த வர்த்தக சங்கத்தார் சந்திரகிரி அரசரிடமிருந்து சென்னை நகரை வாங்கிக்கொண்டார்கள். அந்தக்காலத்தில் சென்னையானது மிகவும் சிறிய கிராமமாக இருந்தது. பிறகு ஆங்கிலேயர்கள் ஸெண்ட் ஜார்ஜ் என்னும் கோட்டையைக் கட்டினார்கள். இந்திய வியாபாரிகள் பலர் இந்தப் புதிய கோட்டையினருகில் பயமில்லாமல் வசித்து வந்தார்கள். ஆங்கிலேயரோடு செய்த வியாபாரத்தினால் இந்தியர்களுக்கும் விசேஷமான திரவிய லாபம் கிடைத்தது. அவர்கள் அப்போது வசித்து வந்த இடத்துக்கு பிளாக் டௌன் என்று பெயர். இப்பொழுது அது ஜார்ஜ் டௌன் என்று வழங்கப்படுகிறது. பம்பாய் நகரமானது அப்போது போர்ச்சுகல் தேசத்தார் வசத்தில் இருந்தது. ஆங்கிலேய அரசரான இரண்டாம் சார்ல்ஸ்



இரண்டாம் சார்ல்ஸ்.




என்பவர் போர்ச்சுகல் தேசத்து ஒரு ராஜ குமாரியை விவாகம் செய்துகொண்டு பம்பாய் நகரத்தை ஸ்திரீ தனமாக அடைந்தார். ஆறு வருஷங்களுக்குப் பிறகு அவர் பம்பாய் நகரத்தை ஈஸ்ட் இந்தியா கம்பெனியாருக்கு விற்று

விட்டார். அது மிகவும் அழகான துறைமுகப் பட்டினம். இந்திய வியாபாரிகள் அநேகர் அவ்விடத்திலேயே குடியேறி ஞர்கள். அதனுல் அந்த நகரமானது சீக்கிரத்தில் மிகவும் பெரிய பட்டணமாக ஆயிற்று. சிலகாலத்துக்குப்பிறகு ஆங்கிலேயர்கள் தங்கள் பண்டசாலையை, சூரத்திலிருந்து பம்பாய்க்கு மாற்றிக்கொண்டார்கள்.

ஒருகாலத்தில் ஷாஜிஹான் சக்கரவர்த்தியின் அருமைப் புத்திரிக்கு மிகவும் கடுமையான நோய் கண்டது. அப்போது சக்கரவர்த்தி சூரத்திலிருந்து ஆங்கிலேய வைத்தியர் ஒருவரை வரவழைத்தார். அந்த வைத்தியர் சக்கரவர்த்தியின் குமாரிக்கு இருந்த அசௌக்கியத்தைச் சீக்கிரத்தில் குணப்படுத்தவே ஷாஜிஹான் மிகவும் திருப்தியடைந்து வைத்தியர் விரும்பும் பொருளை வெகுமதி யளிப்பதாகச் சொன்னுர். அப்போது வைத்தியர் வங்காளத்தில் ஆங்கிலேயர்கள் வியாபாரம் செய்வதற்கு அனுமதி தரவேண்டுமென்று கேட்டுக் கொண்டார். ஷாஜிஹான் அவ்வாறே அனுமதி கொடுத்தார். பிறகு ஆங்கிலேயர்கள் 1640-ஆம் வருஷத்தில் கங்கையின் முகத்துவாரமாகிய ஹூக்ளியில் ஒரு பண்டசாலையைக் கட்டினுர்கள். ஷாஜிஹான் காலம்முழுவதும் ஆங்கிலேயர்கள் ஒருவிதமான தடையுமில்லாமல் சௌகரியமாக வியாபாரம் செய்துவந்தார்கள்; ஆனுல் ஔரங்கசிப் பட்டத்துக்கு வந்ததும் அவர்களுக்குச் சிறிது கஷ்டம் ஏற்பட்டது. ஔரங்கசிப் அவர்களுடன் சமாதானமாக இருந்துகொண்டு அவர்களை வங்காளத்துக்குப் போகும்படிக்கும் அவர்களிடமிருந்து வரி வாங்குவதில்லையென்றும் சொன்னுர். அதன்பிறகு அவர்கள் கங்கை முகத்துவாரத்தில் மூன்று கிராமங்களை வாங்கினுர்கள். அவற்றுள் ஒன்றுக்கு, காளிகட்டம் என்று பெயர். பின்பு கல்கத்தா என்ற பெயர் அதற்கு வழங்கலாயிற்று. 1690-ஆம் வருஷத்தில் ஆங்கிலேயர்கள் அங்கே ஸெண்டு வில்லியம் கோட்டையைக் கட்டினுர்கள்.

ஔரங்கசிப் இறந்தபிறகு நாற்பது வருஷ காலம்வரையில் இந்தியாவில் எங்கேபார்த்தாலும் சண்டை இருந்து வந்தது; ஆனுல் ஆங்கிலேயர்கள் தங்கள் பண்டசாலைகளுக்கு வெளியில் நடக்கும் விஷயங்களில் சிறிதும் தலையிட்

டுக்கொள்ளாமல் வியாபாரத்தை நன்ருக நடத்திக்கொண்டு கல்கத்தாவுக்காகவும், சென்னைக்காகவும் கொடுக்கவேண்டிய வாடகையை வங்காளத்து நவாபுக்கும், கர்நாடகத்து நவாபுக்கும் கொடுத்துவந்தார்கள்.

மேலே சொன்ன இடங்களையல்லாமல் ஆங்கிலேயர்களுக்கு வேறு சில இடங்களிலும் பண்டசாலைகள் இருந்தன. சென்னைக்குத் தெற்கே ஸெண்டு டேவிட் என்னும் கோட்டையும், வடக்கே மசூலிபட்டணம், பாட்னு (பாடலிபுத்திரம்), டெக்கா ஆகிய இடங்களில் பண்டசாலைகளும் அவர்கள் வசத்தில் இருந்தன.

ஆங்கிலேயர்கள் இந்தியாவுக்கு வந்தகாலத்தில் பிரெஞ்சுக்காரர்களுக்கும் இந்தியாவில் சில வியாபாரஸ்தலங்கள் சொந்தமாக இருந்தன. அவையாவன: மேற்குச் சமுத்திரக்கரையிலுள்ள மாகியும், சென்னைக்குத் தெற்கேயுள்ள புதுச்சேரியும் வங்காளத்தில் கல்கத்தாவுக்கு இருபதுமைல் தூரத்தில் உள்ள சந்திரநாகூரும் ஆகும்.

அக்காலத்தில் கொச்சி, பழவேற்காடு, சந்திரநாகூருக்கு அருகில் உள்ள சின்ஸூரா என்னும் இடங்களில் டச்சுக்காரர்களுக்கும் பண்டசாலைகள் இருந்தன.



## 33. மகராஷ்டிரர்கள் பிரபலமடைதல். — சிவாஜி.

### 1627—1680.

இப்போது பம்பாய் ராஜதானி என்று வழங்கும் மேற்கேயுள்ள மலைப்பிரதேசங்களில் மகராஷ்டிரர்கள் வசித்து வந்தார்கள். இந்துஸ்தானத்தை ஆண்டுவந்த அரசர்களுக்குச் சற்றேறக்குறைய ஆயிரவருஷம் வரையில் அவர்கள் அடங்காமலே இருந்தார்கள். அவர்கள் இந்தியாவில் ஒரு காலத்தில் பிரசித்திபெற்றிருந்த ராஷ்டிரகூதர்கள் என்னும் சாளுக்கியர்கள் வம்சத்தைச் சேர்ந்தவர்கள் என்பது சிலருடைய கொள்கை. அவர்கள் பார்வைக்குக் குள்ளமாக இருந்தாலும் தேகபலமும் மனோதைரியமும் சுறுசுறுப்பும் அடக்கமும் அமைந்தவர்கள். அக்காலத்தில் அவர்களுடைய தேசத்

தில் நல்ல சாலைகள் இல்லை. அவர்களுடைய குன்றுகளி லெல்லாம் காடுகள் நிரம்பி இருக்கும். ஒவ்வொரு குன்றி லும் ஒவ்வொரு கோட்டை உண்டு. அதில் ஒரு தலைமை அதி காரி இருந்துகொண்டு குன்றுக்குக் கீழேஉள்ள பல கிராமங் களுக்கு அதிபதியாக இருப்பான். வெகுகாலம் வரையில் இந்த அதிகாரிகள் தக்காணத்திலிருந்த மகம்மதிய அரசர் களுககு அடங்கி அவர்களுக்குக் கப்பம் கட்டிவந்தார் கள். மகம்மதிய சேனைகளோடு அவர்கள் சேர்ந்துகொண்டு மொகலாயர்களுக்கு விரோதமாகச் சண்டைசெய்ய ஆரம்பித் தார்கள். மகராஷ்டிரர்களுக்குள்ளே பல பிரிவுகள் உண்டு. அவற்றையெல்லாம் சிவாஜி யென்பவர் ஒன்றாக்கினார்.

ஷாஜிஹான் பட்டத்துக்கு வந்த வருஷத்திலேதான் சிவாஜி பிறந்தார். அவருடைய பிதாவானவர் பீஜபூர் (விஜய புரி) சுல்தானிடம் வேலையாக இருந்தார். சிவாஜி புனாவில் வளர்ந்துவந்தார். அவருக்கு எழுதவும் தெரியாது; படிக்கவும் தெரியாது. குதிரையேற்றம், வேட்டையாடுதல், மல்யுத்தம் செய்தல், வாள்வித்தை, வில்வித்தை முதலியவைகளில் அவர் பழகிவந்தார். யுத்தத்தில் புகழ்பெற்ற பழைய வீரர் களைப்பற்றி உள்ள பாட்டுக்களைக் கேட்பதில் அவருக்கு மிகுந்த பிரியம் உண்டு; நாளடைவில் தாமும் மேன்மை யடைந்து பெயர் பெறவேண்டுமென்று ஆசைகொண்டார். அவருக்கு இந்துமதத்தில்தான் பற்று அதிகம். மகம்மதி யர்கள் இந்துமதத்தை வெறுத்து வந்ததையும் இந்துக்களை யெல்லாம் அவர்கள் மகம்மதியர்களாகச் செய்ததையும் கண்டு, அவர் மிகுந்த கோபமடைந்தார். அவருடைய முக்கிய எண்ணமெல்லாம் இந்துமதத்தைப் பாதுகாக்கவேண்டுமென் பதே. அவர் உபாசித்துவந்த முக்கியதேவதை பவானி; தம்முடைய கத்திக்குப் பவானி என்று பெயரிட்டார். பசுக் களையும் இந்துமதத்தையும் ஆபத்தினின்றும் காப்பாற்ற வேண்டியதற்காக அந்தக் கத்தியை உபயோகப்படுத்துவதாக அவர் சொல்லுவார். இருபதாம் பிராயத்தில் அவர் ஒரு கூட்டத்துக்குத் தலைவரானார். புரந்தர் கோட்டை என்னு மிடத்தை அவர் பிடித்துக்கொண்டார். நாளடைவில் மலை களிலிருந்த கோட்டைகளெல்லாம் ஒவ்வொன்றாக அவர் வசமாயின. வரவர அவருக்குச் செல்வமும் எந்தப்பக்

கத்திலும் கீர்த்தியும் அதிகரித்தன. பலவிதமான ஆயுதங்கள் அவரிடம் உண்டு.

எல்லாக் கோட்டைகளும் பீஜப்பூர் சமஸ்தானத்தில் இருந்தபடியால் பீஜப்பூர் சுல்தான் பயமடைந்து சிவாஜியினுடைய தகப்பனரைச் சிறைப்படுத்தினர். அப்போது சிவாஜி ஷைஸ்டாகான் என்பவருடைய உதவியை நாடி ஐயாயிரம் மொகலாய வீரர்களுடன் சென்று சுல்தானை வென்று தமது பிதாவைச் சிறையிலிருந்தும் மீட்டார். சிலவருஷங்களுக்குப் பிறகு சிவாஜி மறுபடியும் பீஜப்பூர் சமஸ்தானத்தில் சில



சிவாஜியினுடைய புரந்தரபுரக் கோட்டை.

இடங்களைப் பாழாக்கவே சுல்தான் மிகவும் கோபமடைந்து அப்சுல்கான் என்னும் தளகர்த்தரை ஒரு பெருத்த படையுடன் சிவாஜியை வெல்லும்படி அனுப்பினர். அப்போது சிவாஜி அவருக்கு மிகவும் பயந்தவர்போல் பாசாங்கு செய்து நிராயுதபாணியாகத் தம்மை வந்து பார்க்கும்படி சொல்லியனுப்பினரென்றும் அவர் வார்த்தையை நம்பி அப்சுல்கான் தம் வீரர்களையெல்லாம் பின்னே விட்டுவிட்

டுத் தனியே சிவாஜியினிடம் போனார் என்றும் சமீபத்தில் வந்தவுடனே சிவாஜி அவரைத் துரோகமாகக் கொன்றுவிட்டார் என்றும் மகம்மதிய சரித்திரக்காரர்கள் எழுதியிருக்கிறார்கள். மறைவிலிருந்த சிவாஜியின் ஜனங்கள் அப்சல்கானுடைய வீரர்களின்மேல் பாய்ந்து அவர்களைத் துரத்தி அடித்தார்கள்.

அந்தக்காலத்தில் தென்னிந்தியாவில் இருந்த மகம்மதியர்கள் ஔரங்கசிபின் போர்வீரர்களோடு யுத்தம் செய்து கொண்டிருந்தமையால் சிவாஜியினுடைய செல்வாக்கை அவர்களால் குறைக்க முடியவில்லை. இவ்வாறு அவருடைய பிரதாபம் அதிகரிக்கவே பீஜப்பூர் சுல்தான் அவருடன் சமாதானம் செய்துகொண்டு மேலைக்கரையிலுள்ள கொங்கணத்தின் அதிபதியாக அவரை ஏற்றுக்கொண்டார்.

அப்போது சக்கரவர்த்தியாக இருந்த ஔரங்கசிப் சிவாஜியின் மேன்மையைக் கண்டு பொறாமைகொண்டு தக்காணத்தில் சுபேதாராக இருந்த தமது மாமனை ஒரு பெரும் படையுடன் அவரை எதிர்க்கும்படி அனுப்பினார். அவரும் ஒரு பெருத்த சேனையுடன் புனாவுக்குச் சென்றார். அவ்வளவு பெரிய சேனையோடு தம்மால் போர்புரிய முடியாதென்று சிவாஜி நன்றாக அறிந்துகொண்டார். அதனால் அவரும் அவரைச்சேர்ந்த வேறு சிலரும் பிச்சைக்காரர்களைப்போல் வேஷம் போட்டுக்கொண்டு ஔரங்கசிபின் சேனாதிபதியாகிய ஷைஸ்டாகான் இறங்கியிருந்த வீட்டுக்குள் புகுந்து அவனையே கொல்ல யத்தனித்தார்கள். ஆனால் அவன் ஒரு ஜன்னல்வழியாக வெளியே ஓடி உயிர் தப்பினான். அப்போது அவனுடைய விரல்கள் சிவாஜியினால் துண்டிக்கப்பட்டன; பிறகு மகராஷ்டிரர்கள் எல்லாரும் வேகமாகத் திரும்பிப் போய் விட்டார்கள். ஷைஸ்டாகான் மிகவும் பயந்து புனாவை விட்டு ஓடிப்போனான். அதனால் சிவாஜி சிறிதும் பயமில்லாமல் தேசமெங்கும் சஞ்சரித்துத் தம் ராஜ்யத்தை விருத்தியாக்கிக்கொண்டார்.

பிறகு சிவாஜி ஒரு பெரும்படையுடன் சூரத்தை நோக்கிச் சென்றார். அது அப்பொழுது ஏராளமான செல்வத்

துக்கு மிகவும் பெயர்பெற்றிருந்தது. கடல்வழியாக மெக்காவுக்குப் போகும் கப்பல்களையெல்லாம் சிவாஜி ஆறுநாள்வரையில் அந்த இடத்தைவிட்டுப் போகாமல் தடுத்தார். அப்போது ஔரங்கசிப் வேறொரு பெரிய சேனையை ஜயபுரிக்கு அதிபதியான ஜயசிங்கு என்பவர் வசமாக அனுப்பினார். உடனே சிவாஜி ஜயசிங்கோடு சமாதானம் செய்துகொண்டார். அந்த உடன்படிக்கையினால் (1) தமக்காகப் பன்னிரண்டு கோட்டைகளை வைத்துக்கொண்டு ஔரங்கசிபினிடம் இருபது கோட்டைகளைக் கொடுத்தார்; (2) சிவாஜியின் மகன் சாம்பாஜி 5,000 குதிரைவீரர்களுக்கும், காலாட்படைக்கும் தலைவனானான்; (3) பீஜப்பூர் சமஸ்தானத்தில் நான்கிலொரு பங்கு வரியை (சௌத்) வாங்கிக்கொள்ள அதிகாரம் பெற்றார். இதுதான் மகாராஷ்டிரர்கள் சௌத் என்னும் வரியை வாங்க ஆரம்பித்த காலம். சிவாஜி சொன்ன நிபந்தனைகளுக்கெல்லாம் ஔரங்கசிப் ஒப்புக்கொண்டபடியால் தமது மகனை அழைத்துக்கொண்டு அவர் டில்லிக்குப் போனார். 1666–ஆம் வருஷத்தில் அவர் சாம்பாஜியுடன் அரண்மனை சென்று ஔரங்கசிபைப் பார்க்கப் போனார். அங்கே தம்மை நடத்தியமாதிரியில் தம் உயிருக்கே மோசம் வந்துவிடுமோ வென்று எண்ணினார். அதனால் அவர் தமக்கு உடம்பு அசௌக்கியமென்று வேஷம்போட்டு ஒரு வீட்டுக்குள்ளேயே தங்கியிருந்தார். மொகலாய வீரர்கள் வீட்டைச் சுற்றிக் காவல் இருந்தார்கள். சிவாஜியின் ஜனங்கள் அவரை ஒரு கூடையில் எடுத்து வைத்துக்கொண்டு வெளியே ஜாக்கிரதையான ஓரிடத்துக்குப் போய்விட்டார்கள். மொகலாயர்கள் கூடையில் என்ன என்று கேட்க அவர்கள் பட்சணம் என்று பதில் உரைத்துவிட்டார்கள். பிறகு சிவாஜி மொட்டையடித்துக்கொண்டும் தேகம் முழுவதும் சாமபலைப் பூசிக்கொண்டும் ஒரு பரதேசியைப்போல் நாடெங்கும் பத்துமாத காலம் அலைந்து திரிந்துகொண்டிருந்தார்; கடைசியில் தம் மகனுடன் சுதேசம்போய்ச் சேர்ந்தார்.

ஔரங்கசிப் மறுபடியும் இனியவார்த்தைகளால் சிவாஜியை மயக்க ஆரம்பித்தார்; ஆனால் சிவாஜியோ அந்த வார்த்தைகளால் மோசம் போகவில்லை; ஔரங்கசிபினிடமிருந்து ஒருமுறை தந்திரமாகத் தப்பி வந்தபிறகு அவரை



சிவாஜி குதிரைமேல் ஏறிப்போதல்.

கம்பவேயில்லை. மொகலாய சக்கரவர்த்தி ஜோதிபுரி அரசனை
ஒரு பெருத்த சேனையுடன் சிவாஜியை எதிர்க்க அனுப்பி
னார். அப்போது அவருடன் சண்டைசெய்ய முடியாமல்

சிவாஜி சமாதானம் செய்துகொண்டார். ஜோதிபுரியாசர் டில்லிக்குத் திரும்பிவிட்டார். பிறகு ஔரங்கசிப் மகபத்கான் என்பவனை நாற்பதினாயிரம் குதிரைவீரர்களுடன் சிவாஜியோடு போர் புரியும்படி அனுப்பினார். அவர்கள் மகாராஷ்டிரர்களால் தோல்வியடைந்தார்கள். அதன்பிறகு 1674-ஆம் வருஷத்தில் சிவாஜி மகாராஷ்டிரர்களுக்கு அரசராக முடிசூட்டிக்கொண்டார். அவர் ஒரு பெரிய சேனையுடன் தெற்கே வெகுதூரம் சென்று துங்கபத்திரா நதிவரையில் தமது ராஜ்யத்தை விஸ்தாரப்படுத்தினார். அவரால் ஜயிக்கப்பட்ட அரசர்கள் தங்கள் வரும்படியில் நாலில் ஒரு பங்காகிய சௌத் என்னும் வரியை அவருக்குக் கொடுத்துவர ஒப்புக்கொண்டார்கள். சிவாஜி மகுடஞ் சூட்டிக்கொண்ட போது ஆங்கிலேயர்கள் அவருடன் சமாதானம் செய்து கொண்டார்கள். அப்போது பம்பாயில் டிப்டி கவர்னராக இருந்த ஆங்கிலேயர் பட்டாபிஷேககாலத்தில் போய் சிவாஜி பட்டங் கட்டிக்கொண்டதில் ஆங்கிலேயர்களுக்குள்ள சந்தோஷத்தைத் தெரிவித்து, மேலைச் சமுத்திரக்கரையில் நான்கு இடங்களில் பண்டசாலைகள் கட்டிக்கொள்ள அனுமதி தரவேண்டுமென்று கேட்டார். சிவாஜியும் அதற்கு இசைந்தார்.

சிறிது காலத்துக்குப் பிறகு 1680-ஆம் வருஷத்தில் ஐம்பத்திரண்டாம் பிராயத்தில் சிவாஜி இறந்துபோனார். சிவாஜியைப்போன்ற தலைமையதிகாரி மகாராஷ்டிரர்களுக்கு அப்பால் ஏற்படவில்லை. அவரிடம் பல நற்குணங்கள் இருந்தன. அவர் மகம்மதியர்களுடைய ஜன்மவிரோதியாக இருந்தாலும், மகம்மதிய வேதமாகிய கொரானை அவமதிக்கவில்லையென்றும், மகம்மதியர்களைக் கடுமையாக நடத்தவில்லையென்றும் மகம்மதிய சரித்திரக்காரர்கள் எழுதியிருக்கிறார்கள்.

சிவாஜிக்குப்பிறகு அவர் மகன் சாம்பாஜி பட்டத்துக்கு வந்தான். அவன் சிவாஜியை ஒருவிதத்திலும் ஒத்திருக்கவில்லை. மிகவும் கொடியவனாகவும், சோம்பேறியாகவும் இருந்தபடியால், ஔரங்கசிப் அவனைக் கைதியாக்கிக் கொன்றுவிட்டார்.

### மகாராஷ்டிரர்களுடைய அரசாட்சி.

சிவாஜி தம் ராஜ்யத்தை 14 ஜில்லாக்களாகப் பிரித்தார். அவற்றில் ஏழு தக்காணத்தில் இருந்தன. மற்றவை தார்வார், பல்லாரி, பங்களூர், ஆரணி, செஞ்சி, தஞ்சாவூர் முதலியனவும், தென்னிந்தியாவிலுள்ள வேறு சில ஜில்லாக்களுமாம். ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒவ்வொரு கோட்டையுண்டு. ராஜ்யகாரியங்களை அஷ்டப்பிரதானிகள் என்னும் எட்டு மந்திரிகள் நடத்திவந்தார்கள்; எட்டுப்பேர்களும் எட்டுவிதமான காரியங்களைக் கவனித்தார்கள்.

மந்திரிக்குப் பேஷ்வா என்று பெயர். நிலப்படைக்கும், கப்பற்படைக்கும் தலைவனாக ஒரு சேனாதிபதி இருந்தான். நியாயவிசாரணை செய்யும்பொருட்டு முக்கிய நியாயாதிபதியும், அவருக்குக் கீழே பல நியாயாதிபதிகளும் இருந்தார்கள். மதவிஷயங்களையும் கோவில் காரியங்களையும் கவனிக்கத் தனியே ஓர் அதிகாரி இருந்தார். எவனும் உத்தியோகத்தைப் பாம்பரையாக அனுபவிக்க முடியாது. ஒவ்வொருவனும் தன் முயற்சியாலும், திறமையினாலும் ஒரு வேலையைப் பெறலாமேயன்றிப் பாம்பரை உரிமையினால் ஒரு வேலைக்கு வரக்கூடாதென்பது சிவாஜியின் கருத்து. குடிகளிடமிருந்து அரசரே நேரில் வரியை வாங்கவேண்டுமென்று அவர் விதித்திருந்தார். வரியை ஏலத்தில் விட்டு ஜமீன்தார்கள் அதிகமான வரிகளைக் குடிகளிடமிருந்து வாங்கி அவர்களை வருத்திவந்தார்கள். சிவாஜிக்கு அந்த வழக்கத்தில் திருப்தியில்லை.

## 34. மகராஷ்டிர ராஜ்யத்தின் வளர்ச்சி.

(1708–1761)

சிவாஜி இறந்துபோனார் என்ற சமாசாரம் தெரிந்தவுடனே ஔரங்கசிப் பெரிய சேனையைத் திரட்டிக்கொண்டு தக்காணத்தை நோக்கிப் படையெடுத்துச் சென்று பீஜப்பூர், கோல்கொண்டா என்னும் மகம்மதிய ராஜ்யங்களை ஜயித்தார்; பிறகு சிவாஜியின் மகன் சாம்பாஜியையும் கொன்றார். அப்போது சாம்பாஜியின் மகன் சாகு என்பவன் பட்டத்துக்கு வந்தான். அவன் மிகச் சிறுவனாக இருந்தமை




யால் அவன் மாமனை ராஜாராம் என்பவன் ராஜப்ரதிநிதியாக இருந்து ராஜ்யாதிகாரத்தை நடத்தினான். பிறகு ஔரங்கசிப் சாகுவையும் அவன் தாயாரையும் சிறையில் அடைக்கவே ராஜாராம் சில மகாராஷ்டிரத் தலைவர்களுடன் ஓடி, தென்

ஆற்காடு ஜில்லாவில் உள்ள செஞ்சிக்கோட்டையில் இருந்து வந்தான். ஔரங்கசிப் இறந்தபிறகு அவருக்குப்பின் பட்டத்துக்குவந்த மொகலாய சக்கரவர்த்தியோடு சாகு சமாதானம் செய்துகொண்டு அவருக்கு அடங்கி நடப்பதாகத் தெரிவித்தான். பிறகு அவன் மகாராஷ்டிர நாட்டிற்குப் போய், சதாரா என்னும் இடத்தை ராஜதானி யாக்கிக்கொண்டான். பாலாஜி விசுவநாதர் என்பவர் அப்போது பேஷ்வாவாக இருந்தார். சாகுவுக்குப் பிறகு பட்டத்துக்கு வந்தவர்களெல்லாம் சதாரா அரசர்களென்றே வழங்கப்பட்டுவந்தார்கள். 1848–ஆம் ஆண்டில் சதாரா அரசர் சந்ததியில்லாமல் இறந்துபோனமையால் ஆங்கிலேயர்கள் அந்த ராஜ்யத்தைத் தங்கள் ராஜ்யத்தோடு சேர்த்துக்கொண்டார்கள்.

## பேஷ்வாக்கள்.

மகாராஷ்டிர அரசனான சாகுவென்பவன் திறமையற்றிருந்ததோடு சிற்றின்பப் பிரியனாகவும் இருந்தான். அவன் தேகம் ஒருகாரியத்திலும் வணங்குவதில்லை; அவனுடைய ராஜ்யாதிகாரத்தையெல்லாம் பிராமண மந்திரியாகிய பேஷ்வா நடத்திவந்தார். சிவாஜியின் கொள்கைக்கு இது மாறானது. எந்த அதிகாரத்தையும் பரம்பரையாக ஒருவரும் செலுத்திவரக் கூடாதென்பது அவருடைய நோக்கம்; ஆனால் சாகுவின் காலம்முதல் பேஷ்வாக்கள் அரசர்களைப் போல் வம்சபாரம்பரையாய் ராஜ்யாதிகாரத்தை நடத்திவந்தார்கள். ஓர் அரசனுடைய ஸ்தானத்தில் தாங்கள் அரசாட்சி செய்வதாக வெளிக்குமட்டும் காட்டிவந்தார்களே அல்லாமல் உண்மையில் அவர்களே அரசர்களாக இருந்தார்கள். மகாராஷ்டிரர்கள் பேஷ்வாக்களையே தங்கள் தலைவர்களாகக் கருதினார்கள். சண்டைக்குப் போவதோ, சமாதானம் செய்வதோ எதுவும் பேஷ்வாவைச்சேர்ந்த வேலையாக இருந்தது. 1749–ஆம் வருஷத்தில் புனாநகரம் பேஷ்வாக்களுக்கு ராஜதானி ஆயிற்று.

## பாலாஜி விசுவநாதராவ்: முதல் பேஷ்வா.
## (1708–1720)

ஔரங்கசிப் இறந்த மறு வருஷத்தில் சாகு பாலாஜி விசுவநாதராவ் என்பவரை மந்திரியாக்கினான். அதுமுதல்

1720-ஆம் வருஷம் வரையில் அவர் பேஷ்வாவாக இருந்தார். தக்காணம், தென்இந்தியா, ஹைதராபாத், கர்நாடகம், மைசூர் முதலிய இடங்களில் சௌத் என்னும் வரியை வாங்கிக்கொள்ளும்படி மகாராஷ்டிரர்களுக்கு மொகலாய சக்கரவர்த்தி அனுமதி கொடுத்ததல்லாமல் சததசமுகி என்னும் வரியையும் வாங்கிக்கொள்ள உத்தரவு அளித்தார். தமக்குக் கிடைக்கவேண்டிய வரியை வாங்கிக் கொடுப்பவர்களுக்கு வரியில் நூற்றுக்குப் பத்துவீதம் சுல்தான் கொடுத்துவந்தார். இதற்குத்தான் சததசமுகி என்று பெயர். புனுவிலும், அதைச் சுற்றிய பதினைந்து ஜில்லாக்களிலும் சுய அரசாட்சி நடத்திக்கொள்ளும்படி மொகலாய சக்கரவர்த்தி சுதந்தரம் கொடுத்தார்.

## பாஜிராவ்: இரண்டாம் பேஷ்வா.

## (1720-1740)

பாஜிராவ் மிக்க தைரியமும் திறமையும் உள்ளவர்; இந்துஸ்தானத்திலும் மகாராஷ்டிர ராஜ்யத்தைப் பரவச்செய்ய வேண்டுமென்று அவர் ஆசைகொண்டார். டில்லியிலிருந்த சக்கரவர்த்தி திறமையற்றவரென்று தெரிந்துகொண்டு ஒரு பெரும் படையுடன் சென்று டில்லி, ஆக்ரா, கூர்ஜாம், மாளவம், ரோஹில்கண்டு முதலிய இடங்களையெல்லாம் வென்று அந்த இடங்களிலுள்ளவர்களிடமிருந்து சௌத் வரியையும், சதத சமுகி என்னும் வரியையும் வாங்கினர்; ஆனல், தக்காணத்தி லுள்ள ஹைதராபாத்து நைஸாம்மட்டும் சௌத் என்னும் வரியை மகாராஷ்டிரர்களுக்குக் கொடுக்க உடன்படவில்லை. அதனுல் மகாராஷ்டிரர்கள் ஒரு யுத்தத்தில் நைஸாமை வென்றார்கள். சௌத்தையும், சததசமுகியையும் வாங்கத் தலைப்பட்ட மகாராஷ்டிரர்கள் அங்கங்கே தனியான புதுராஜ்யங்களை ஏற்படுத்திக்கொண்டார்கள். அவற்றுள், நாகப்பூர், பேரார், மாளவம், குவாலியர், இந்தூர், கூர்ஜாம் முதலியவை முக்கியமான ராஜ்யங்கள்.

### (i) நாகப்பூர்.

மொகலாயர்கள் காலத்தில் இந்த மாகாணமானது கொண்டாவனம் என்னும் பெயரால் வழங்கப்பட்டுவந்தது. பாஜிராவ் காலத்தில் சதாராவிலிருந்து ராகோஜிபான்ஸ்லே என்

பவர் பீராரில் சௌத் வரி தண்டுவதற்காக அனுப்பப்பட்டார். அவர் வங்காளத்திலிருந்த மொகலாய சுபேதாரை வென்று அவரிடமிருந்து சௌத் வரியை வாங்கி ஓரிஸ்ஸா என்னும் இடத்தை மகராஷ்டிர ராஜ்யத்தோடு சேர்த்துக்கொண்டார். மத்திய மாகாணமும், பீராரும், ஒரிஸ்ஸாவும் முன்பு ஒன்றாயிருந்தன. பேஷ்வாக்களும், நாகப்பூர் அரசரும் சில யுத்தங்கள் செய்தார்கள். முடிவில் நாகப்பூர் அரசர் சுய அரசாட்சியை அடைந்தார். நாகப்பூர் அரசர்களுக்கு, 'பான்ஸ்லே' என்னும் பட்டப்பெயர் உண்டு.

### (ii) மாளவம்.

இந்த ராஜ்யத்தை முல்ஹார்ராவ் ஹோல்கார் என்பவர் ஏற்படுத்தினர். புனாவுக்கு நாற்பதுமைல் தூரத்தில் ஹோல்கார் என்ற ராஜ்யமொன்று இருந்தது. முல்ஹார்ராவ் ஹோல்கார் என்பவர் ஜாதியில் இடையர். பாஜிராவின் பட்டாளத்தில் அவர் சேர்ந்து கொஞ்சம் கொஞ்சமாகப் பிரபலமடைந்து முடிவில் மாளவத்துக்கு அரசரானார். அவரது ராஜ்யமானது விந்தியமலை முதல் கங்கைநதி வரையில் பரவியிருந்தது. பேஷ்வாக்களுக்கும், மாளவ தேசாதிபதிகளுக்கும் பல யுத்தங்கள் நடந்தன.

### (iii) குவாலியர்.

பாஜிராவ் என்னும் பேஷ்வாவுக்கு மிகவும் அற்பவேலை செய்துகொண்டிருந்த ராணுஜி சிந்தியா என்பவர் சேனையில் செல்வாக்கையடைந்து மாளவத்தில் சௌத் வரி வாங்குவதற்கு அதிகாரம் பெற்றார். நாளடைவில் குவாலியரில் அவர் ஒரு ராஜ்யத்தை ஸ்தாபித்துக்கொண்டார். குவாலியர் அரசர்களுக்கு விந்தியர்கள் என்று பெயர்.

### (iv) கூர்ஜாம் (பரோடா).

பிலாஜி கெயிக்வார் என்பவர் இந்த ராஜ்யத்துக்கு மூல புருஷர். கூர்ஜாத்தில் சௌத் வரி தண்டுவதற்கு, பாஜிராவ் அவரை அனுப்பினர். 1727–ஆம் வருஷத்தில் அவர் பிரபலமடைந்து கூர்ஜாத்துக்குஅதிபதியாகி, பரோடாவை ராஜதானியாக்கிக்கொண்டார். இன்றைக்கும் அதுவே ராஜதானியாக உள்ளது. பரோடா அரசர்கள் கெயிக்வார்களென்ற பட்டப்பெயா உள்ளவர்கள்.

இவ்வாறு, சதாராவில் இருந்த சிவாஜியின் பரம்பரையினரும், நாகப்பூரிலுள்ள பான்ஸ்லேக்களும், ஹோல்காரும், சிந்தியாவும் கெயிக்வாரும் பிரபலத்தை அடைந்தார்கள். ஆனால் இந்த ஐந்து ராஜ்யங்களிலும் உள்ள அரசர்கள் அடிக்கடி ஒருவரோடொருவர் சண்டைபோட்டுக்கொண்டு வந்து மவினமடைந்தார்கள். மகாராஷ்டிர ராஜ்யத்தில் இப்போது உள்ளவை பரோடா, குவாலியர், இந்தூர் என்னும் சமஸ்தானங்களே.

## பாலாஜி பாஜிராவ்: மூன்றும் பேஷ்வா.

## (1740–1761)

பாலாஜி பாஜிராவ்காலத்தில் மகராஷ்டிரர்கள் மிகவும் மேலான பதவியில் இருந்தார்கள். வட இந்தியாவில் அநேக இடங்களில் அவர்கள் சௌத் வரியை வாங்கிவந்தார்கள். அவர்கள் அடிக்கடி வட இந்தியாவிலும், வங்காளத்திலும் சண்டைபோட்டுக்கொண்டிருந்தமையால் தேசம் அமைதியற்றிருந்தது. பாலாஜி பாஜிராவ் அரசாட்சியின் கடைசி வருஷத்தில் மகாராஷ்டிரர்களது பலம் குறைய ஆரம்பித்தது. காபூலுக்கும், பஞ்சாபுக்கும் அரசராக இருந்த ஆமத்ஷா துரானி என்பவர் டில்லியை நோக்கிப் படையெடுத்துச் சென்றார். அப்போது டில்லியிலிருந்த சுல்தான் ஆமத்ஷா துரானியை டில்லியிலிருந்து துரத்தும்பொருட்டு, மகாராஷ்டிரர்களுடைய உதவியை நாடினார். 1761–ஆம் வருஷத்தில் பானிப்பட்டு என்னும் இடத்தில் மகாராஷ்டிரர்களுக்கும் மகம்மதியர்களுக்கும் பலமான யுத்தம் நடந்தது. அதில் மகாராஷ்டிரர்கள் தோல்வியடைந்தார்கள். அதற்குப்பிறகு வட இந்தியாவில் சிந்தியாமட்டுமே பிரபலமாக இருந்தார்.



# 35. தேன் இந்தியாவில் ஆங்கிலேயர்களும், பிரேஞ்சுக்காரர்களும் போர்புரிதல்.

இதற்குமுந்திய பாடங்களில் 1761–ஆம் வருஷம்வரையில் மொகலாய ராஜ்யத்திலும், மகாராஷ்டிர ராஜ்யத்திலும் நடந்த பல விஷயங்கள் தெரிந்துகொண்டோம். போர்ச்சுகல்

நாட்டாரும், ஆங்கிலேயரும், உலாந்தாக்காரும், பிரெஞ்சுக்காரரும் வியாபாரத்துக்காக இந்தியாவுக்கு வந்து அங்கங்கே கடலோரமாகப் பல பண்டசாலைகளைக் கட்டிக்கொண்டார்களென்றும் ஈஸ்டு இந்தியா கம்பெனியாரும், வேறு வர்த்தக சங்கத்தாரும் இந்தியாவுக்கு வந்து சென்னை, பம்பாய், கல்கத்தா என்னும் இடங்களைப் பிடித்துக்கொண்டார்களென்றும் ஔரங்கசிப் இறந்த மறுவருஷத்தில் ஐக்கிய ஈஸ்டு இந்தியா கம்பெனி என்ற ஒரு வர்த்தக சங்கம் ஏற்பட்டதென்றும் 31–ஆம் பாடத்தில் படித்திருப்பீர்கள். ஐம்பது வருஷங்களுக்குப் பிறகு இந்தியாவுக்கு வந்த ஐரோப்பியர்களுடைய நிலைமையைப்பற்றி இனிமேல் படிப்போம்.

பதினெட்டாம் நூற்றூண்டுக்கு முன்னதாகவே ஆங்கிலேயர்கள் போர்ச்சுகல் தேசத்தாரையும் உலாந்தாக்காரரையும் துரத்திவிட்டார்கள்; அதுமுதல் இந்த இரண்டு தேசத்தார்களுடைய புகழ் குறைய ஆரம்பித்தது. பதினெட்டாம் நூற்றூண்டு முழுவதும், ஆங்கிலேயர்களுக்கும், பிரெஞ்சுக்காரர்களுக்கும் ஐரோப்பாவிலும், அமெரிகாவிலும், இந்தியாவிலும் பலமான யுத்தம் நடந்தது. வியாபாரத்தில் தங்களுக்கே அதிக லாபம் வரவேண்டுமென்பதும், தங்களுக்கே அதிக ராஜ்யம் இருக்கவேண்டுமென்பதுமே சண்டைக்கு முக்கிய காரணங்கள்.

இந்தியாவில் வியாபாரம் செய்யும் உரிமை முழுவதும் ஆங்கிலேயர்களுடையதா அல்லது பிரெஞ்சுக்காரர்களுடையதா என்பதைப்பற்றியும், அராஜகமாக இருந்த இந்தியாவானது இன்னூர்வசத்தில் இருக்கவேண்டியது என்பதைப்பற்றியும் சரியான வரையறையொன்றும் ஏற்படாமையால் ஆங்கிலேயர்களும் பிரெஞ்சுக்காரர்களும் போர்புரிய ஆரம்பித்தார்கள். இந்தியாவிலேயே இருந்த சுதேச மன்னர்கள் ஒருவரோடொருவர் சண்டைபோட்டுக்கொண்டிருந்தார்கள். அவர்களில் சிலர் ஆங்கிலேயர்களையும் வேறு சிலர் பிரெஞ்சுக்காரர்களையும் உதவிக்கு அழைத்தார்கள். தென்னிந்தியாவிலும் வங்காளத்திலும் ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் சண்டை நடந்துகொண்டிருந்தது.

## தென்னிந்தியாவில் ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் நடந்த முதல்நாள் யுத்தம்.

1744-ஆம் வருஷத்தில் ஐரோப்பாவிலேயே இருதிறத்தாருக்கும் பலமான யுத்தம் நடந்தது. அதனால் உலகத்தில் அவர்கள் அப்போது எந்த எந்த இடங்களில் இருந்துவந்தார்களோ அந்த அந்த இடங்களிலெல்லாம் இரண்டு ஜாதியார்களும் சண்டைபோடத் தலைப்பட்டார்கள். சென்னையிலும் புதுச்சேரியிலும் ஆங்கிலேயர்களும், பிரெஞ்சுக்காரர்களும் முறையே அனுபவித்துவந்த நிலங்களின் வரிகளை, கர்நாடக நவாபான அன்வர்உதீனிடம் செலுத்திவந்தார்கள். தம் உத்தரவில்லாமல் ராஜ்யத்தில் சண்டைபோடக் கூடாதென்று அவர் ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் கட்டளையிட்டார்.

ஆங்கிலேயர்கள் அமைதியாகவே வியாபாரம் செய்துவந்தார்கள். சண்டைபோடுவதில் அவர்களுக்கு இஷ்டமில்லை. வியாபாரிகளும், அவர்களிடம் அலுவல் பார்ப்பவர்களுமே சென்னையில் இருந்தார்கள். வியாபாரிகளின் தலைவருக்கு 'கவர்னர்' என்று பெயர். கோட்டைக்குக் காவலாகச் சில காவற்காரர்கள்மட்டும் இருந்தார்களே அல்லாமல் போர் வீரர்கள் ஒருவரும் அப்போது சென்னையில் இல்லை.



ட்யூப்ளே.

புதுச்சேரியில் இருந்த பிரெஞ்சு கவர்னர் மிகவும் சாமர்த்தியசாலி. அவருக்கு, ட்யூப்ளே என்று பெயர். வெகுகாலமாக இந்தியாவிலேயே அவர் இருந்தமையால் இந்தியர்களுடைய இயற்கை அவருக்கு நன்றாகத் தெரியும். இந்தியாவிலிருந்து ஆங்கிலேயரைத் துரத்திவிட்டு, வியாபாரலாபம் முழுவதையும் பிரெஞ்சுக்காரரே அடையும்படி செய்யவேண்டுமென்பது அவருடைய எண்ணம். ஆனால்

வியாபாரத்தோடு நிற்க இஷ்டப்படாமல் தென்இந்தியா முழுவதையும் ஜயித்து அதற்குத் தாம் கவர்னராக இருக்கவேண்டுமென்று அவர் ஆசைகொண்டார்.

யுத்தமுறையில் பழக்கப்பட்ட இந்திய போர்வீரர்களுக்கு, சிபாய்கள் என்று பெயர். ட்யூப்ளே, பல சிபாய்களை ஐரோப்பிய யுத்தமுறையில் பழக்கி ஒரு பெரும்படையைச் சேர்த்தார். பிரான்சுக்கு எழுதி அங்கிருந்த பல பிரெஞ்சு யுத்தவீரர்களையும் வரவழைத்தார். இந்தப் பெரிய



இந்திய போர்வீரர்கள்.

சேனையுடன் அவர் சென்னைக்கு 1746–ஆம் வருஷத்தில் வந்து அதை முற்றுகையிட்டார். அப்போது சென்னையானது கர்நாடக நவாபின் ஆதீனத்தில் இருந்தமையால் ஆங்கிலேயர்கள் நவாபின் உதவியை விரும்பினார்கள். ஸெண்டு ஜார்ஜ் கோட்டையை ஆங்கிலேயரிடம் திருப்பிக் கொடுக்கும்படி அவர் ட்யூப்ளேக்கு உத்தரவிட்டார். ஆனால் ட்யூப்ளே அவர் வார்த்தையைச் சிறிதும் காதில் போட்டுக்கொள்ளாமல் அவரை அவமதிக்கவே 10,000 யுத்தவீரர்களை அவர் தமது குமாரர்வசம் அனுப்பி, பிரெஞ்சுக்காரர்களை இந்தியாவை

விட்டுத் துரத்தும்படி கட்டளையிட்டார். ஆனால் பிரெஞ்சுக் காரர்களோ 200 யுத்தவீரர்களையும், 700 சிபாய்களையும் வைத்துக்கொண்டு நவாபின் சேனையைச் சிதற அடித்தார்கள். இதுதான் ஐரோப்பியர்களுக்கும், இந்தியர்களுக்கும் நடந்த முதல் யுத்தமாகும். போர்வன்மையில் ஐரோப்பியர்களுக்கும், இந்தியர்களுக்குமுள்ள வித்தியாசத்தை நாம் இதனால் தெரிந்துகொள்ளலாம். சிபாய்கள் நன்றாக யுத்தம் செய்வார்கள் என்று தெரிந்துகொண்டு பிரெஞ்சுக்காரர்கள் அவர்களை யுத்தமுறையில் நன்றாகப் பழக்கினார்கள்.

பிறகு பிரெஞ்சுக்காரர்கள் ஸெண்டு டேவிட் கோட்டையையும் பிடித்துக்கொள்ள யத்தனித்தார்கள். அதற்குள் ஆங்கிலேயர்கள் இங்கிலாந்திலிருந்து பல சேனைவீரர்களை வருவித்து, பிரெஞ்சுக்காரர்களை மூன்று முறை துரத்தியடித்தார்கள். மகா தைரியசாலியான மேஜர் லாரன்ஸ் என்பவர் இங்கிலாந்திலிருந்து ஒரு பெரும்படையுடன் இந்தியாவுக்கு வந்தார். புதுச்சேரியை ஆங்கிலேயர்கள் பிடிக்க முயன்றார்கள்; ஆனால் அது சாத்தியப்படவில்லை.

1748–ஆம் வருஷத்தில் ஐரோப்பாவில் ஆங்கிலேயர்களுக்கும், பிரெஞ்சுக்காரர்களுக்கும் உடன்படிக்கை ஏற்பட்டமையால் இந்தியாவில் அவர்களுக்குள் இருந்த விரோதம் குறைந்துபோயிற்று. பிறகு சென்னை ஆங்கிலேயர்கள் வசத்தில் வந்துவிட்டது. 1756–ஆம் வருஷம்வரையில் ஆங்கிலேயர்களும், பிரெஞ்சுக்காரர்களும் சமாதானமாகவே யிருந்து வந்தார்கள்.



## 36. ராபர்ட் கிளைவ்.

ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் யுத்தம் தொடங்கிய வருஷத்தில் ஈஸ்ட் இந்தியா கம்பெனியாரிடம் கணக்காக ராபர்ட் கிளைவ் என்ற பெயருள்ள ஏழைச்சிறுவனொருவர் சென்னைக்கு வந்தார். அவருக்கு அப்போது பிராயம் பத்தொன்பது.

சிறுவயதில் அவர் துஷ்டத்தனமாகத் திரிந்துகொண்டும் அயலார்களோடு அடிக்கடி சண்டைபோடுவதிலே பொழுது

போக்கிக்கொண்டும் இருந்தபடியால் அவருடைய பிதா அவர் விஷயத்தில் மிகுந்த கவலைகொண்டிருந்தார். இன்னது செய்வதென்று அவருக்கே தெரியவில்லை. கடைசியில் ஒரு பள்ளிக்கூடத்துக்கு அனுப்பினார். மகா துஷ்டர் என்றும் ஒருவருக்கும் அடங்காதவர் என்றும் சண்டைபோடுவதிலேயே விருப்பம் உள்ளவரென்றும் அவர் பள்ளிக்கூடத்தில் பெயர் வாங்கினார். பல சிறுவர்களைச் சேர்த்துக்கொண்டு அவர்களுக்குத் தலைமையை வகித்து வேடிக்கையாகப் பொழுதுபோக்குவார். தாம் கேட்கும் பொருள்களைக் கடைக்காரர்கள் கொடாவிட்டால் கடைகளில் புகுந்து கதவுகளையும் ஜன்னல்களையும் தம் இஷ்டப்படி கற்களால் அடித்து உடைப்பார். ஒருமுறை தெருவில் ஓடும் சாக்கடை ஜலத்தையெல்லாம் கடைக்குள் திருப்பிவிட்டார். அவர் ஒருவேலைக்கும் உதவமாட்டார் என்று பள்ளிக்கூடத்து உபாத்தியாயர் சொன்னபடியால் அவருடைய பிதா அவருடைய படிப்பை நிறுத்திவிட்டுத் தம் கண்முன்னே அவர் இல்லாமலிருந்தாற் போதுமென்றெண்ணி அவரை இந்தியாவுக்கு அனுப்பினார்.

பிரெஞ்சுக்காரர்கள் சென்னையை முற்றுகை போட்ட போது ராபர்ட் கிளைவ் சுதேசியைப்போல் உடைதரித்துக் கொண்டு கூடலூர் ஜில்லாவிலுள்ள ஸெண்ட் டேவிட் கோட்டைக்கு ஓடினார். ஸெண்ட் ஜார்ஜ் கோட்டையைப் பிடிப்பதற்குப் பிரெஞ்சுக்காரர்கள் மூன்றுதடவை முயன்றார்கள். ஆனால் மேஜர் லாரென்ஸ் என்பவர் தம்முடைய அபூர்வமான திறமையினால் அவர்கள் வசமாகாமல் அதைக் காத்தார். அப்போதுதான் ராபர்ட் கிளைவ் யுத்தமுறையை முதல் முதல் அறிந்துகொண்டார். யுத்தத்துக்கு ஏற்ற திறமை அவரிடம் இருந்ததை அறிந்துகொண்ட கவர்னர் அவரைப் பட்



ராபர்ட் கிளைவ்.

டாளத்தில் சேர்த்துவிட்டார்; அதனால் கிளைவ் அதற்குமுன் பார்த்துவந்த கணக்குவேலையை விட்டுவிட்டார்.

சிலகாலத்துக்குப் பிறகு அவர் சேனையில் ஒரு பெரிய வேலைக்கு வந்தார். ஒரு தளகர்த்தனுக்கு இருக்கவேண்டிய திறமையை அவர் அப்போது நன்கு தெரிவித்தார். பாலியம் முதலாக அவருக்கு இருந்த ஆசையெல்லாம் ஒரு சேனாதிபதியாக வரவேண்டும் என்பதே. பிறவியிலேயே தாம் ஒரு பெரிய யுத்தவீரர் என்பதை அவர் வெகு சீக்கிரத்தில் காட்டினார். எங்கே போர் பலமாக நடக்குமோ எந்த இடத்தில் அபாயம் அதிகம் என்று எல்லாரும் நினைப்பார்களோ அந்த இடத்துக்குப் போய்ச் சிறிதும் பயமில்லாமல் முன்னே நிற்பார். அவர் எந்த இடத்திலும் தோல்வியடைந்ததேயில்லை; எங்கே போனாலும் அவருக்கு ஜயந்தான்.

அவர் கூப்பிடும் இடங்களுக்கெல்லாம் அபாயத்தைக் கவனியாமல் அவருடைய வீரர்கள் போவார்கள். அவர்கள் எல்லாரும் அவரைப் போரிற் பின்னடையாதவரென்று வழங்கி வந்தார்கள். இந்தியா முழுவதும் இந்தப் பெயரே அவருக்கு அதிகமாக வழங்கிவந்தது. அவர் மிகவும் தைரியசாலியாய் இருந்ததோடு ஜயம் எந்தப்பக்கம் இருக்குமோ என்று நினைக்கும்படியான சமயத்தில் தம்முடைய வீரர்களை மிகவும் நிதானமாக அழைத்துச் செல்வார்.

### பிரசித்தமான ஆற்காட்டு முற்றுகை. 1752.

ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் ஐரோப்பாவில் மன ஒற்றுமை மிகுதியாக இருந்தது. ஆனாலும் இந்தியாவில் சண்டைக்குக் காரணம் உண்டானால் தங்களை உடனே டியூப்ளே தாக்கிவிடுவார் என்று ஆங்கிலேயர்கள் எண்ணிக்கொண்டிருந்தார்கள். புதுச்சேரியில் சுதேச யுத்த வீரர்களும் பிரெஞ்சுவீரர்களும் சேர்ந்த ஒரு சேனையை டியூப்ளே வைத்திருந்தார். அதனால் ஆங்கிலேயர்கள் தங்கள் வீரர்களை இங்கிலாந்துக்கு அனுப்பிவிடத் துணியவில்லை. வியாபாரத்தில் தங்களுக்குக் கிடைத்துவந்த லாபத்தில் பெரும் பாகத்தை ஆங்கிலேயர்களும் பிரெஞ்சுக்காரர்களும் சேனைகளின் விஷயமாகவே செலவிடவேண்டியிருந்தது. ஆகையி

னால் சமயம் நேரும்போது சுதேச அரசர்களுக்குத் தங்கள் சேனைகளை அனுப்பி உதவிவந்தார்கள்.

1748-ஆம் வருஷத்தில் சரித்திரசம்பந்தமான சில பெரிய விசேஷங்கள் நடந்தன. மொகலாய சக்கரவர்த்தியான மகம்மதுஷாவும் மகாராஷ்டிர அரசனான சாகுவும் ஹைதராபாத் நைஸாமான நைஸாமுல்மல்கும் இறந்துபோனார்கள். நைஸாமுல்மல்குக்குப் பிறகு அவருடைய புத்திரரான நாஸர்ஜங்க் என்பவர் தக்காணத்து ஸுபேதார் என்ற பெயருடன் பட்டத்துக்கு வந்தார். அப்பொழுது அவருடைய தாயாதியான முஸபர்ஜங்க் என்பவர் தாமே பட்டத்துக்கு உரியவர் என்று கலகஞ்செய்து தமக்கு உதவிசெய்யும்படி பிரெஞ்சுக்காரர்களைக் கேட்டுக்கொண்டார்.

ஆற்காட்டில் அன்வருதீன் என்பவர் கர்நாடக நவாபு என்ற பட்டத்துடன் அரசாட்சி செய்துகொண்டிருந்தார். அவருடைய காலத்தில் சந்தாஸாஹேப் என்னும் பிரமுகர் ஒருவர் கிளம்பி, தாமே கர்நாடக நவாபு என்று ஆரவாரம் செய்தார். அவரும் பிரெஞ்சுக்காரருடைய உதவியை நாடினார்.

டியூப்ளே மேலேசொன்ன இரண்டுபேர்களுக்கும் உதவி செய்ய ஒப்புக்கொண்டார். பிறகு ஒரு பெரிய சேனையை, பிஸி என்னும் தளகர்த்தர் வசமாக அவர்களுக்கு உதவி செய்ய அனுப்பினார். மூன்று சேனைகளும் ஆற்காட்டுக்குச் சென்று அன்வருதீனை எதிர்த்து அவரை வென்று ஆற்காட்டை வசமாக்கிக்கொண்டன. அன்வருதீனும் கொல்லப்பட்டார். பிறகு அவருடைய குமாரரான மகம்மதாலி என்பவர் திருச்சிராப்பள்ளிக்கு ஓடித் தம்மைப் பாதுகாத்துக் கொண்டார். அப்பால் மேலேசொன்ன மூன்று சேனைகளும் தக்காணத்தை நோக்கிச் சென்று நாஸர்ஜங்கைக் கொன்றன. பிரெஞ்சு தளகர்த்தர் ஜயபேரியுடன் ஹைதராபாத்துக்குச் சென்றார்.

இவ்வாறு டியூப்ளேக்கு எந்த இடத்திலும் ஜயம் ஏற்பட்டது. புதிய நைஸாம் பிரெஞ்சுக்காரர்களுக்கு வடசர்க்கார் என்னும் இடத்தைக் கொடுத்தார். டியூப்ளேக்குக் கர்நாடக கவர்னர் என்ற பட்டம் அளிக்கப்பட்டது; கர்நாடக நவா




பாகிய சந்தாஸாகேப் பிரெஞ்சுக்காரருக்குக் கர்நாடக ராஜ்யத்தில் பெரும்பாகத்தையும் அளவற்ற திரவியத்தையும் கொடுத்தார்.

சந்தாஸாகேபும் பிரெஞ்சுக்காரர்களும் மகம்மதாலி ஒளிந்துகொண்டிருந்த திருச்சிராப்பள்ளியை முற்றுகையிட்டார்கள். அப்போது மகம்மதாலி ஆங்கிலேயர்களுடைய உதவியை நாடினார். அவர்களிடத்தில் சேனைகள் அதிகமாயிருந்தன. வியாபாரத்தில் கிடைத்துவந்த லாபம் முழுவதும் விசேஷமாகச் சேனையைப் பாதுகாப்பதிலேயே செலவாகிவந்தது. அப்போது இருந்த ஆங்கிலேய கவர்னர் பிரெஞ்சுக்காரர்களையும் அவர்களைச் சேர்ந்தவர்களையும் எதிர்க்கக்கூடாதென்று நன்றாக அறிந்திருந்தார். ஏனெனில் எதிர்த்தால் டியூப்ளே தங்களையெல்லாம் சென்னையைவிட்டுத் துரத்திவிடுவாரென்பது அவருக்கு நன்றாகத் தெரியும். மகம்மதுஆலிக்கு உதவிசெய்யப்போனால் ஆங்கிலேய சேனைக்கு அதிக வேலை யேற்படும்; தகுந்த கூலியும் கிடைக்கும். அல்லாமலும் பிரெஞ்சுக்காரர்களுடைய அதிகாரத்தையும் குறைப்பதற்கு ஒரு காரணம் உண்டாகும்.

திருச்சிராப்பள்ளியிலிருந்து பிரெஞ்சுக்காரர்களைத் துரத்தக்கூடிய திறமை அப்போதிருந்த ஆங்கிலேய கவர்னருக்கு இல்லை; ஆனாலும் அவர் கடைசிவரையில் விடாமல் சண்டைபோடவேண்டும் என்றும், தங்களை நம்பியிருக்கலாமென்றும் மகம்மதாலிக்கு ஒரு கடிதம் எழுதியதோடு ஒரு சிறிய சேனையையும் வேண்டிய ஆயுதங்களுடன் அனுப்பினார். கிளைவ் அந்தச் சேனையுடன் திருச்சிராப்பள்ளி சென்று ஜயமடைந்து திரும்பிவந்தார். அவருடைய திறமைக்காக அவருக்கு உடனே தளகர்த்தர் உத்தியோகம் கிடைத்தது.

ராபர்ட் கிளைவ் சென்னபட்டணத்திற்கு வந்தவுடன் கவர்னரைப் போய்ப்பார்த்து மகம்மதாலி மிகவும் பலக்குறைவுள்ளவர் என்றும், தனியாக அவரால் ஒன்றும் முடியாது என்றும் தெரிவித்தார். பிரெஞ்சுக்காரருடைய சேனையில் ஒரு பகுதி திருச்சிராப்பள்ளியிலும் வேறொரு பகுதி புதுச்சேரியிலும் மற்றும் ஒரு பகுதி ஹைதராபாத்திலும் இருப்பதாலும் கர்நாடக ராஜ்யத்துக்கு முக்கிய பட்டணமாகிய ஆர்காட்டைக் காப்பதற்கு அவர்கள் அதிக ஜனங்களை ஏற்படுத்தாமையாலும் தாம அவ்விடத்திற்குப் போய் அதைப் பிடித்துவிடுவதாகவும் கவர்னரிடம் கிளைவ் சொன்னார். இதனால் சந்தாஸாகேப்

ஆற்காட்டை வசப்படுத்திக் கொள்ளும்பொருட்டுத் திருச்சி ராப்பள்ளியை விட்டு ஓடிவரக்கூடுமென்றும் அப்போது மகம் மதாலியை விடுவிக்கலாம் என்றும் அவர் எண்ணினார்.

கிளைவ் சொல்லிய உபாயத்தைக் கவர்னர் மிகவும் மெச்சி அவர் சொன்னபடியே செய்யலாம் என்று உத்தரவு கொடுத் தார். கிளைவுடன் இருநூறு ஆங்கிலேய வீரர்களும் முந்நூறு இந்திய வீரர்களுமே சென்றார்கள். அதற்குமேல் அனுப்ப முடியவில்லை. அவர்களும் யுத்தமுறையில் சிறிதும் பழக்க மில்லாதவர்கள்; அநேகர் யுத்தகளத்தையே பார்த்ததில்லை; ஆனால் கிளைவினுடைய திறமைக்கு இந்தச் சிறு சேனையே போதுமானதாக இருந்தது. சென்னைக்கும் ஆற்காட்டுக்கும் எழுபது மைல் தூரம். சென்னையிலிருந்து அங்குபோய்ச் சேர ஒரு வாரமாயிற்று. போகும்போதே கிளைவ் அந்த ஜனங்க ளுக்கெல்லாம் யுத்தமுறையை நன்றாகக் கற்பித்துக்கொண்டு போனார். அவர் தம் சேனையுடன் ஆற்காட்டுக்கு ஒரு வழி யாகப் போய்க்கொண்டிருக்கையில் சந்தாஸாகேபின் சேனை கள் வேறொரு வழியாக ஓடிப்போய்விட்டன. பின்பு அந்த நகரம் ஆங்கிலேயருடைய வசமாயிற்று.

ஆங்கிலேயர்கள் அப்போது அந்நகரத்திலிருந்த ஜனங் களுக்கு ஒருவிதமான தீங்கும் செய்யவில்லை. ஜனங்களி டத்தில் கிளைவ் மிகவும் அன்பாக இருந்தார். அப்படியே அவர்களும் கிளைவினிடத்தில் மிகவும் பிரியமாக இருந்தார் கள். தம் சேனைக்கு வேண்டிய உணவுப்பொருள் முதலிய வற்றையெல்லாம் கிளைவ் அவர்களிடத்தில் விலைக்கு வாங் கிக்கொண்டார். ஜனங்களெல்லாரும் கிளைவுக்குப் பலவிதத் தில் உதவிசெய்தார்கள். இன்னும் அதிக காலம் ஆற் காட்டில் இருக்கவேண்டி வரும் என்று நினைத்து அவர் கோட்டை மதில்களைச் செப்பனிட்டுப் போர்ச்சேவகர்க ளுக்கு வேண்டிய உணவுப்பொருள்களையும் சேகரித்து வைத் துக்கொண்டார்.

ஆற்காடு பிடிபட்டதை அறிந்தவுடன் கிளைவ் எண்ணிய படியே சந்தாஸாகேப் ஆற்காட்டை வசப்படுத்திக்கொள்ள எண்ணித் தம் குமாரரான ராஜாஸாகேபின் வசம் பதினாயிரம் போர்வீரர்களையும் சில பிரெஞ்சுக்காரர்களையும் அனுப்பினார்.

அவர்கள் ஐம்பது தினங்கள்வரையில் முற்றுகைசெய்து கோட்டையைப் பிடிக்கப் பலவிதமாக முயன்றார்கள்; ஆனால் அம்முயற்சி பலிக்கவில்லை. கோட்டையைக் காத்துக்கொண்டிருந்த ஆங்கிலேய வீரர்களுள் பாதிப்பேர்கள் மடிந்துபோனார்கள். கடைசியில் பாக்கி நின்றவர்களுக்கும் ஆகாரத்துக்கு வழியில்லாமற் போய்விட்டது. ஆனாலும் ஒருவனும் பின்வாங்க நினைக்கவில்லை. கிளைவினுடைய மனோதைரியம் அவர்களிடத்தும் பரவியிருந்தது. இந்திய வீரர்களும் கிளைவினிடம் அபிமானமும் நம்பிக்கையும் வைத்து ஆங்கிலேய வீரர்களைப்போலவே மிகவும் தைரியமாய் யுத்தம்செய்தார்கள். தமக்கு ஆகாரத்துக்கு வழியில்லாமற் போனகாலத்திலும் சோறு முதலியவற்றை ஆங்கிலேய வீரர்களுக்குக் கொடுக்கும்படிக்கும் கஞ்சியைமட்டும் தங்களுக்குக் கொடுத்தால் போதும் என்றும் இந்திய வீரர்கள் சொன்னார்கள்.

இரண்டு மாதங்களுக்குப் பிறகு கிளைவுக்கு உதவியாக, சென்னை கவர்னர் சிலரை அனுப்பினார். அந்த விஷயம் தெரிந்து ராஜாஸாகேப் கோட்டையைப் பிடிக்கக் கடைசியாக முயன்றார்; ஆனால் அதில் தோல்வியடைந்ததல்லாமல் தம்முடைய ஜனங்களில் நானூறுபேர்களையும் இழந்தார். அதற்குப் பிறகு அவருடைய மனோபலம் குறைந்துவிட்டது. கிளைவுக்கும் சென்னபட்டணத்திலிருந்து வரும் சேனைக்கும் மத்தியில் தாம் அகப்பட்டுக்கொள்ளக்கூடும் என்று பயந்து பாக்கியிருந்த தமது படைவீருடன் ஓடிப்போனார். அப்போது கிளைவ் விடாமல் அவரைப் பின்தொடர்ந்து சென்று ஊரூராய்ப் போய்த் துரத்தினார். கடைசியில் ராஜாஸாகேப் மிகவும் திகிலடைந்து இருந்த இடம் தெரியாமல் ஓடிப்போய் விட்டார்.

இந்த ஆற்காட்டு முற்றுகை 1752—ஆம் வருஷத்தில் நடந்தது. அதற்குப் பிறகுதான் ஆங்கிலேயர்களுக்குக் கௌரவம் உண்டாயிற்று. அதுமுதல் அவர்களுடைய பலம் அதிகரிக்க, பிரெஞ்சுக்காரர்களுடைய பலம் குறைந்துவந்தது.

பிறகு மேஜர் லாரென்ஸூம் திருச்சிராப்பள்ளிக்குப் போய் அங்கே பிரெஞ்சுக்காரருடன் போர்புரிந்து அநேகரைச் சிறைப்படுத்தினார். அப்போது திருச்சிராப்பள்ளி ஆங்கி

லேயருடைய வசமாயிற்று. மகம்மதாலியைக் கர்நாடகத்துக்கு நவாபாக நியமித்தார்கள். சந்தாஸாகேப் ஓடிப்போன இடத்தில் தஞ்சாவூரில் மகாராஷ்டிர அரசர் ஒருவரால் கொல்லப்பட்டார்.


மேஜர் லாரென்ஸும் மஹம்மத் ஆலியும்.

சிலகாலத்துக்குப் பிறகு ராபர்ட் கிளைவ் தமது ஜன்மதேசமாகிய இங்கிலாந்துக்குப்போனார். அங்கே ஆங்கிலேய அரசர் அவரை ஒரு கர்னல் ஆக்கினார். ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் ஐந்நூறு பவுனுக்கு மேற்பட்ட விலையுள்ள ஒருவாளை அவருக்கு வெகுமதி யளித்தார்கள். ஆங்கிலேயர்கள் அவரை ஆற்காட்டு வீரர் என்று அழைத்தார்கள்.

ஆங்கிலேய வர்த்தகர்களும் பிரெஞ்சு வர்த்தகர்களும் பின்பு ஒருபோதும் சண்டையிடக் கூடாதென்று தங்கள் தங்கள் உத்தியோகஸ்தர்களுக்கு முறையே உத்தரவு அனுப்பினார்கள். டியூப்ளே பிரான்ஸுக்கு அழைக்கப்பட்டார். இருதிறத்தார்களும் சமாதானமாக இருந்தார்கள்.

அதுமுதல் சென்னை சிறிதும் அபாயமில்லாமல் இருந்தது. ஆங்கிலேய வியாபாரிகளுக்குச் சொந்தமாகச் சிறிது நிலமும் கிடைக்கவில்லை. அவர்களுக்கு அதில் விருப்பமுமில்லை. கிளைவினிடம் பயிற்சிபெற்ற திறமையுள்ள சேனைமட்டும் அவர்களிடத்தில் இருந்தது. அதனால் மகம்மதாலியினுடைய விரோதிகளை அடக்கிவந்தார்கள். அவர் மேஜர் லாரென்ஸினுடைய உதவியினால் பயமில்லாமல் கர்நாடகத்தை ஆண்டுவந்தார். பிஸியிடம் இருந்த பிரெஞ்சுக்காரர்கள் ஹைதராபாத்தில் மிகவும் பிரபலமாக இருந்தார்கள். வட

சர்க்கார் என்னும் பிரதேசம் அவர்களிடமே இருந்தது. அதன் தலை நகராகிய மசூலிபட்டணத்தில் பலமான கோட்டை ஒன்று இருந்தது.

# 37. வங்காளம்.

## 1. கல்கத்தா இருட்டறை (1756).

மொகலாய அரசாட்சியில் வங்காளத்துக்கு ஸூபையென்றும் அதன் அதிகாரிக்கு ஸூபேதார் என்றும் பெயர். இந்தியாவின்மீது நாதர்ஷா படையெடுத்து வந்தபிறகு அலிவர்த்திகான் என்ற போர்வீரன் ராஜ்யத்தைத் தன் வசப்படுத்திக்கொண்டான். கல்கத்தாவில் இருந்த ஆங்கிலேய வர்த்தகர்களுக்கு அவன் வேண்டியவன். அதனால் பாட்னாவிலும், எக்காவிலும் வர்த்தகசாலைகள் அமைத்துக்கொள்ளும்படி அவன் அவர்களுக்கு அனுமதி கொடுத்தான். கல்கத்தாவுக்கு வடக்கே நூறுமைல் தூரத்திலுள்ள மூர்ஷதாபாத்தில் இருந்துகொண்டு அவன் செவ்வையாக அரசாட்சி செய்துவந்தான்.

1756-ஆம் வருஷத்தில் அலிவர்த்திகானுடைய அரசாட்சி முடிவுபெற்றது. அவனுக்குப்பிறகு அவன் பேரன் ஸிராஜ் உட்டௌலா என்பவன் பட்டத்துக்கு வந்தான். பட்டத்துக்கு வந்தபோது அவனுக்குப் பிராயம் இருபது. ராஜ்ய தீபம் என்னும் பட்டப்பெயர் அவனுக்கு உண்டு. அவன் மிகவும் செல்வமாக வளர்ந்தவன். உலகவிஷபம் ஒன்றுமே தெரியாதவன். இளமைப்பருவத்தில் அவன் கேட்டவற்றையெல்லாம் அரண்மனையில் உள்ளவர்கள் அவனுக்குக் கொடுத்துவந்தார்கள். பிறர் சொல்வதை அவன் சிறிதும் கேளாமல் தன் இஷ்டப்படியே நடந்துவந்தான். அவன் பலமற்றவனாகவும் புத்தியில்லாதவனாகவும் குரூரத்



ஸிராஜ்-உட்-டௌலா.




தனம் உள்ளவனுகவும் இருந்தான். ஆங்கிலேயர்களை அவன் மிகவும் வெறுத்தான். கல்கத்தாவில் செல்வம் நிறைந்திருக்கு மென்று எண்ணி அதைக் கொள்ளையிட ஆசைகொண்டான்.

அவன் பட்டத்துக்கு வந்தவுடன் ஆங்கிலேயர்களை ஏதாவது ஒரு காரணம்பற்றிச் சண்டைக்கு இழுக்க வழிபார்த்துக் கொண்டிருந்தான். போர்ட் வில்லியத்தில் இருந்த கவர்

னர் மறுபடியும் பிரெஞ்சுக்காரர்களுடன் சண்டை நேரும் என்று அறிந்து அந்தக் கோட்டையின் சுவர்களைப் பழுது பார்த்தார். அப்போது விராஜ் உட்டௌலா அந்தச் சுவர்களை யெல்லாம் இடித்துவிடும்படி ஆங்கிலேய கவர்னருக்குக் கட்டளையிட்டான். அவ்விதம் இடித்தால் பிரெஞ்சுக்காரர்கள் அந்தக் கோட்டையை எளிதில் கைப்பற்றிக்கொள்ளுவார்கள் என்று எண்ணி அதற்கு அவர் சம்மதிக்கவில்லை.

அதனால் நவாபுக்கு அடங்காத கோபம் வந்துவிட்டது. ஐம்பதினாயிரம்பேர்கள் அடங்கிய ஒரு படையுடனே அவன் கல்கத்தாவை எதிர்த்தான். கோட்டையில் 170 ஆங்கிலேய வீரர்களே இருந்தார்கள். அவர்களில் அநேகருக்கு யுத்த முறையே தெரியாது. கிளைவைப்போன்ற தைரியமுள்ள தலைவரும் அவர்களுக்கு இல்லை. அவர்கள் நான்குநாள்வரையில் கூடியமட்டும் தங்களைப் பாதுகாத்துவந்தார்கள். பிறகு உத்தியோகஸ்தர்களில் சிலர் ஸ்திரீகளுடனும் குழந்தைகளுடனும் ஆற்றில் இருந்த கப்பலில் ஏறித் தப்பிச் சென்றூர்கள். மற்றவர்கள் தங்களை ஒன்றும் செய்யாமல் விட்டுவிடவேண்டும் என்று உறுதிமொழி வாங்கிக்கொண்டு கோட்டையை நவாபினிடம் விட்டார்கள்.

நவாபு தூங்கப் போனபொழுது அவனுடைய காவற்காரர்கள் பாக்கியிருந்த 146 ஆங்கிலேய வீரர்களையும் பிடித்து ஒருவன் இருப்பதற்குக்கூட இடம்பற்றாமல் இருந்த ஒரு சிறிய அறையில் அடைத்துவைத்தார்கள். அது மிகவும் இருளடைந்திருந்தமையால் அதற்கு இருட்டறை என்ற பெயர் ஏற்பட்டது. ஒரு சிறிய அறைக்குள் அத்தனை ஜனங்களை அடைத்துவைத்தால் அவர்கள் உயிர் பிழைத்திருப்பார்களா?

மறுநாட்காலையில் அறையின் கதவைத் திறந்தபோது இருபத்திரண்டு புருஷர்களும் ஒரு ஸ்திரீயுமே உயிரோடிருந்தார்கள். பாக்கியிருந்தபேர்களுடைய பிரேதங்களையெல்லாம் கோட்டைக்கு வெளியிலிருந்த அகழியில் எடுத்து எறிந்துவிட்டார்கள்.

## 2. பிளாஸிச் சண்டை (1757)

1756-ஆம் வருஷத்தில் பிரெஞ்சுக்காரர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் மறுபடியும் ஐரோப்பாவில் சண்டை உண்டாயிற்று. அதற்குச் சிலகாலத்துக்கு முன்பே ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் இந்தியாவில் தங்கள் சேனைக்குத் தலைவராக இருக்கும்படி கிளைவை அனுப்பினார்கள். சென்னைக்கு வந்தவுடன் கல்கத்தாவில் நடந்த அக்கிரமச்செய்தி அவர் காதிற்கு எட்டியது.

அந்தவிஷயத்தைக் கேட்டவுடனே சென்னையிலிருந்த ஆங்கிலேயர்களுக்குக் கோபமும் துக்கமும் உண்டாயின; கல்கத்தாவைத் திரும்பவும் பிடித்துப் பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்று அவர்கள் நிச்சயித்தார்கள். உடனே சென்னையிலிருந்து ஒரு சேனை தரைவழியாகவும் மற்றொரு சேனை கடல்வழியாகவும் கல்கத்தாவுக்குப் போயின. நிலப்படைக்கு ராபர்ட் கிளைவும் கப்பற்படைக்கு அட்மிரல் வாட்ஸன் என்பவரும் தலைவர்களாக இருந்தார்கள். அவர்கள் எல்லாரும் கல்கத்தா போய்ச் சேர மூன்றுமாதகாலம் பிடித்தது. ஆங்கிலேய வீரர்கள் கல்கத்தாபோய்ச் சேர்ந்ததும் உயிர்ச்சேதம் ஒன்றுமில்லாமல் போர்ட் வில்லியத்தை அவர்கள் வசப்படுத்திக்கொண்டார்கள். அப்பால் அவர்கள் ஹூக்ளிக்குச் சென்று அதையும் பிடித்துக்கொண்டார்கள்.

அப்போது ஸிராஜ் உட்டௌலாவுக்குப் பயம் உண்டாயிற்று. தான் பிடித்து வைத்திருந்த ஆங்கிலேயர்களையெல்லாம் விடுவித்து அவர்களோடு சமாதானம் பேசினான். அவர்கள் பட்ட நஷ்டத்துக்கெல்லாம்தான் ஈடுபண்ணுவதாகவும்சொன்னான். ஆனால் வெளிக்குமட்டும் அவன் அவ்வாறு சொன்னானேயல்லாமல் தனக்கு வந்து உதவிசெய்யும்படி சந்திரநாகூரிலிருந்த பிரெஞ்சுக்காரர்களுக்கு எழுதினான். தம்மை நவாபு மோசம்செய்ய யத்தனித்ததை ராபர்ட் கிளைவ் கண்டுகொண்டார். உடனே அவர் சந்திரநாகூருக்குப் போய் அதைப் பிடித்துக்கொண்டார்.

ஸிராஜ் உட்டௌலா பட்டத்துக்கு வந்து ஒருவருஷம் ஆவதற்குள்ளாகவே அவன் தன் குடிகளை மிகவும் கடுமையாக

நடத்தினான். அதனால் அவர்கள் எல்லாரும் அவனிடம் வெறுப்படைந்து அவனை நீக்கிவிட எண்ணினார்கள். அவனைச் சிம்மாசனத்திலிருந்து தள்ளிவிட்டு அவனுடைய சேனாதிபதியான மீர்ஜாபரை நவாபாகச் செய்யும்படி அவனுடைய பிரதான உத்தியோகஸ்தர்கள் சிலர் ரகஸ்யமாக ஆலோசனை செய்தார்கள். தமக்கு உதவிசெய்யும்படி மீர் ஜாபர் கிளைவுக்கு எழுதினார். ஆங்கிலேயர்கள் ஸிராஜ் உட் டௌலாவை எதிர்ப்பதாக இருந்தால் தானும் ஒரு பெரிய சேனையுடன் வந்து அவர்களோடு கலந்துகொள்வதாகச் சொன்னான்.

அப்பால் ராபர்ட் கிளைவ் தம்முடைய சேனையுடன் வடக்கே புறப்பட்டுப் போனார். கல்கத்தாவுக்கும் மூர்ஷிதபாத்துக்கும் மத்தியில் பிளாஸி என்னும் கிராமம் ஒன்று உண்டு. அங்கே ஸிராஜ் உட்டௌலா ஐம்பதினாயிரம் காலாட்களுடனும் பதினெண்ணாயிரம் குதிரைவீரர்களுடனும் சில பிரெஞ்சுக்காரர்களுடனும் தங்கியிருந்தான். அல்லாமல் 50 பீரங்கிகளும் இருந்தன. கிளைவினிடம் 1,100 ஆங்கிலேய வீரர்களும் 2,000 இந்திய வீரர்களுமே இருந்தார்கள். மிகவும் கனமில்லாத 10 பீரங்கிகள் இருந்தன. 1757–ஆம் வருஷம் ஜூன் மாதம் 23–ஆம் தேதியில் ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் பிளாஸி என்னும் இடத்தில் பலமான யுத்தம் நடந்தது. தாம் சொன்னபடி மீர்ஜாபர் ஆங்கிலேயர்களுக்கு உதவியாக வரவில்லை. இருதிறத்தார்களும் சண்டை செய்தபோது யார் வெல்வார்களென்று பார்ப்பதற்காக அவர் சும்மா நின்றுகொண்டு இருந்தார். நாள்முழுவதும் ஆங்கிலேயர்கள் எதிரிகளை நோக்கிக் குண்டு போட்டுக்கொண்டே இருந்தார்கள். அவர்களில் அநேகர் இறந்துபோன பிறகு 3 மணி ஆனதும் எதிரிகளைத் தாக்கும்படி கிளைவ் உத்தரவுசெய்தார். நவாபு சேனைகளுடன் அவர்களுக்குமுன்னால் ஓடிப்போனான். ஆங்கிலேயர்கள் ஜயமடைந்தார்கள். பிறகு மீர்ஜாபருடனே கிளைவ் மூர்ஷிதபாத்துக்குப் போய் அவரை நவாபு ஆக்கினார்.

ஸிராஜ் உட்டௌலா ஓடிப்போனான். முன்பு அவனால் மூக்கறுபட்ட ஒருவன் அவனைத்தொடர்ந்து பிடித்துவந்து மீர்

ஜாபர் மகனிடம் விட்டான். உடனே அவன் ஸுராஜ உட்டௌலாவைக் கொன்றனன். ஆங்கிலேயர் செய்த உதவிக்காகப் புதிய நவாபு ஆங்கிலேயர்களுக்கு அளவற்ற பணம் கொடுத்ததல்லாமல் கிளைவுக்கும் மற்ற உத்தியோகஸ்தர்களுக்கும் விசேஷமான வெகுமதியளித்தார். கல்கத்தாவைச் சுற்றிய ராஜ்யமான 24 மாகாணங்களை ஈஸ்ட் இந்தியா கம்பெனியாருக்கு அவர் கொடுத்தார். இதற்காகத் தமக்கு வரவேண்டிய வரியை இரண்டு வருஷங்களுக்குப் பிறகு கிளைவே எடுத்துக்கொள்ளலாமென்று சொன்னார். அதனால் கிளைவ் பெருத்த செல்வவானானார். அந்த ராஜ்யத்துக்கும் கிளைவின் ஜாகீர் என்ற பெயர் ஏற்பட்டது. கிளைவ் உயிரோடிருந்தவரையில் ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் இந்த வரியை அவருக்குக் கொடுத்துவந்தார்கள். இதுதான் ஆங்கிலேயர்களுக்கு முதலில் இந்தியாவில் கிடைத்த நிலம். வங்காளராஜ்யம் ஏற்படுவதற்கு இதுதான் ஆரம்பம்.



மீர்ஜாபர்.



## 38. பிரேஞ்சுக்காரரின் முடிவான அபஜயம்.

### 1756—1763.

ஐரோப்பாவில் எல்லாச் சாதியார்களுக்குள்ளும் 1756—ஆம் வருஷம்முதல் ஏழுவருஷம் ஒரு பெரிய யுத்தம் பலமாக நடந்தது. அதில் ஆங்கிலேயர்கள் பிரெஞ்சுக்காரரோடு போர்புரிந்தார்கள்.

இந்த மகா யுத்தத்தின் ஆரம்பகாலத்தில் பெருத்த ஆங்கிலேய சேனையோடு வங்காளத்தில் இருந்த கிளைவ் சந்திரநாகூரைக் கைப்பற்றிக்கொண்டார். அதனால் வட இந்தியாவில் பிரெஞ்சுக்காரருக்குச் சொந்தமாக எந்த இடமும் இல்லாமற் போய்விட்டது; ஆனால் தென் இந்தியாவில் புதுச்சேரியை

ஆங்கிலேயர்களால் கைப்பற்றிக்கொள்ள முடியவில்லை. சென்னையைப் பிரெஞ்சுக்காரர்களாலும் பிடிக்க முடியவில்லை. ஆதலால் இரண்டு வருஷகாலம் இருதிறத்தார்களும் ஒருவரோடொருவர் சண்டைபோடாமல் சும்மா இருந்தார்கள்.

ஆனால் 1758-ஆம் வருஷத்தில் ஐரோப்பாவிலிருந்து ஒரு பெரிய பிரெஞ்சு சேனையுடன் கௌண்ட் லாலி என்பவர் தலைவராக இந்தியாவுக்கு வந்தார். ஆங்கிலேயர்களை இந்தியாவிலிருந்து துரத்திவிட வேண்டுமென்று பிரெஞ்சுக்காரர்களிடமிருந்து அவர் உத்தரவுபெற்று வந்தார். கப்பலிலிருந்து இறங்கின தினத்திலேயே அவர் ஸெண்ட் டேவிட் கோட்டையைப் பிடித்து அதை இடித்துத் தகர்த்துவிட்டார். அதற்குப் பிறகு அந்தக் கோட்டை கட்டப்படவே இல்லை.

பிறகு அவர் தக்காணத்திலிருந்த பிஸி என்பவரை எல்லாச் சேனைகளுடனும் தம்மிடம் வந்து சேரும்படி கட்டளையிட்டுத் தாம் நேராகச் சென்னை சென்று அதைத் தாக்கினார். ஸெண்ட் ஜார்ஜ் கோட்டையை எளிதில் கைப்பற்றிக்கொள்ளலாமென்றும் பிறகு கல்கத்தாவுக்குப் போய் ஆங்கிலேயர்களை இந்தியாவிலிருந்து துரத்திவிடலாமென்றும் அவர் எண்ணியிருந்தார். ஆனால், சென்னையிலிருந்த மேஜர் லாரென்ஸ் என்பவர் ஸெண்ட் ஜார்ஜ் கோட்டையை ஆறுமாதகாலம் வரையில் மிகவும் தைரியமாகக் காத்துவந்தார். அதற்குப் பிறகு இங்கிலாந்திலிருந்து ஒரு போர்க்கப்பல் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தது. ஆங்கிலேய சேனைக்குத் தலைவரான கர்னல் ஹூட் என்பவர் பிரெஞ்சுக்காரர்களையும் கௌண்ட் லாலியையும் துரத்திக்கொண்டேபோய் வந்தவாசி என்னும் இடத்தில் 1760-ஆம் வருஷத்தில் முறியடித்தார். பிரெஞ்சுக்காரர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் இந்தியாவில் நடந்த சண்டைகளில் இதுதான் மிகவும் பெரியது. அப்பால் கர்னல் ஹூட் புதுச்சேரிக்குச் சென்று 1761-ஆம் வருஷத்தில் அதையும் வசப்படுத்திக்கொண்டார்.

## வட சர்க்கார்.

கர்நாடகத்தில் இவ்வாறு நடந்துகொண்டிருக்கக் கடல் வழியாகத் தம்மால் அனுப்பக்கூடிய சேனைகளையெல்லாம் ஒன்றுசேர்த்து ராபர்ட் கிளைவ் கர்னல் போர்ட் என்பவர் வச

மாக வடசர்க்காருக்கு அனுப்பினார். இயற்கையிலேயே ஆங்கிலேயருடைய சேனையைக்காட்டிலும் பிரெஞ்சுக்காரர்களுடைய சேனை பெரியதாக இருந்தது. அதனோடு ஹைதராபாத் நவாபு தம் சேனைகளுடன் அவர்கள் பக்கத்தில் இருந்தார். ஆனால் கர்னல் போர்ட் என்பவர் சிறந்த யுத்தப்பயிற்சியும் சாமர்த்தியமும் தைரியமும் உடையவராதலால் பிரெஞ்சுக்காரர்களை ஒவ்வொரு இடத்திலும் தோற்கச்செய்து அவர்களுடைய முக்கிய இடமாகிய மசூலிபட்டணத்தையும் திடீரென்று பிடித்துக்கொண்டார். பிரெஞ்சுக்காரர்களில் சிறைப்பட்டவர்களின் தொகை அவருடைய சேனையின் அளவைக்காட்டிலும் அதிகமாக இருந்தது. வடசர்க்காரானது 1759—ஆம் வருஷத்தில் ஆங்கிலேயர்களுக்குக் கிடைத்தது; அதுமுதல் அவர்கள் ஆதீனத்திலேயே இருந்துவருகிறது. இதுதான் சென்னைராஜ்யத்துக்கு ஆரம்பம்.

ஐரோப்பாவில் நடந்த மகாயுத்தம் 1763—ஆம் வருஷத்தில் முடிவுக்கு வந்தது. அப்போது ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் நடந்த உடன்படிக்கைப்படி புதுச்சேரியும் சந்திரகாகூரும் பிரெஞ்சுக்காரர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்டன.



## 39. வங்காளம்.

### (i) மீர்ஜாபரின் அரசாட்சி.

1758—1761.

டில்லியிலிருந்த சக்கரவர்த்தி வட இந்தியாவிலுள்ள எல்லா ராஜ்யங்களுக்கும் தாமே தலைவர் என்ற சுதந்தரத்தை இன்னும் பாராட்டிக்கொண்டிருந்தார். அவருடைய உத்தரவு இல்லாமல் கிளைவ் மீர்ஜாபரை வங்காளத்துக்கு அதிபதியாக்கினார். பழைய நவாபுகள் டில்லி சக்கரவர்த்திக்கு வெகுமதி அனுப்பிவந்ததுபோல் மீர்ஜாபர் அவருக்கு ஒன்றும் அனுப்பவில்லை. அதனால் அவருடைய குமாரரான ஷாஜடா என்பவர் ஒரு சேனையுடனே வங்காளத்தின்மீது படையெடுத்து வந்தார். அயோத்திக்கு நவாபான ஷூஜா தௌலாவும் அவருக்கு உதவியாக வந்தார்.

அப்போது மீர்ஜாபர் மிகவும் பயமடைந்து அவர்களுக்குப் பணம்கொடுத்து அவர்களோடு சமாதானம் செய்துகொள்ள விரும்பினார். ஆனால், கிளைவ் தாம் வந்து உதவி செய்வதாகவும் அவ்வாறு சமாதானம் செய்துகொள்ளவேண்டாமென்றும் மீர்ஜாபருக்குச் சொல்லியனுப்பினார். அது தெரிந்தவுடன் ஷுஜாடௌலா அயோத்திக்கு ஓடிப்போய் விட்டார். அப்போது ஷாஜடாமட்டும் தனியே இருந்து கிளைவோடு போர்செய்ய நேர்ந்தது. அவர் கிளைவினிடம் அடைக்கலம் புகுந்ததனால் கிளைவ் ஐந்நூறு மோகாரக்களை வெகுமதியாக அவருக்குக் கொடுத்து டில்லிக்குப் போய்ச் சேரும்படி சொன்னார். அவரும் அவ்வாறே போய்விட்டார்.

மீர்ஜாபர் விவேகத்தோடு இருந்திருந்தால் ஒருவித அபாயமும் இல்லாமல் அவர் செவ்வையாக அரசாட்சி செய்திருக்கலாம். அதற்குத் தகுந்த யோக்கியதை அவரிடமில்லை. வீணான காரியங்களிலும் கேளிக்கைகளிலும் பணத்தை வீண்பண்ணினபடியால் பொக்கிஷத்திலிருந்த பணம் முழுவதும் செலவாய்விட்டது. சேனைகளை வைத்துப் போஷிக்கப் பணம் இல்லாமையால் அவர் வங்காளத்தில் இருந்த பெரிய வியாபாரிகளைக் கொள்ளையிட யத்தனித்தார். ஆனால், கிளைவ் அதற்கு இடம் கொடுக்கவில்லை. அதனால் மீர்ஜாபர் கோபமடைந்து தமக்கு உதவிசெய்யும்படிக்கும் ஆங்கிலேயர்களை வங்காளத்திலிருந்து துரத்திவிடும்படிக்கும் சின்சுரா என்னுமிடத்திலுள்ள டச்சுக்காரர்களுக்குக் கடிதம் எழுதியனுப்பினார். அதன்படியே அவர்கள் மீர்ஜாபருக்கு உதவி செய்ய வந்தார்கள். ஆனால் கிளைவ் அவர்களையெல்லாம் ஜயித்து சின்சுராவைக் கைப்பற்றிக்கொண்டு துரோகசிந்தனையுள்ள மீர்ஜாபரை மன்னித்துவிட்டார்.

1760-ஆம் வருஷத்தில் கிளைவ் இங்கிலாந்துக்குத் திரும்பிப் போனார். அப்போது அவருக்குப் பிராயம் 34. இந்தியாவிலிருந்த நான்கு வருஷகாலமும் அவர் மிகவும் பாடுபட்டு அநேக காரியங்களைச் செய்து முடித்தார். பிரெஞ்சுக்காரர்களை ஓங்கவிடாமற் செய்ததோடு டச்சுக்காரர்களையும் ஒடுக்கினார். அவரால் வடசர்க்காரும் வங்காளத்தில் வருஷந்தோறும் 10,000,000 ரூபாய் வரும்படி உள்ள கல்கத்தாவைச் சுற்றிய ஒரு ராஜ்யமும் ஈஸ்ட் இந்தியா கம்பெனியாருக்குக் கிடைத்

தன. அதுமுதல் சுதேச மன்னர்களுடைய சேனைகளைக் கண்டு ஆங்கிலேயர்கள் பயப்படவில்லை. இந்தியாவுக்கு வந்த போது ராபர்ட் கிளைவுக்கு வயது பத்தொன்பதுதான். அவ்வளவு பால்யமாக இருந்தும் தம்முடைய திறமையாலும் தைரியத்தாலும் பதினைந்து வருஷ காலத்திற்குள் மிகவும் மேன்மையடைந்து சிறந்த கியாதிபெற்றார்.

### (ii) மீர்காஸிம்.

### 1761-1765.

கிளைவ் வங்காளத்தைவிட்டுப் போனவுடனே மீர்ஜாபர் மிகுந்த சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டார்; ஷாஜடா இரண்டாம் ஷா ஆலம் என்ற பட்டத்துடனே டில்லிக்குச் சக்கரவர்த்தியானார். மீர்ஜாபரிடம் சேனைகளின் பலம் இல்லாமையால் அவரிடமிருந்து அரசாட்சியை எளிதில் கைப்பற்றிக்கொள்ளலாம் என்று எண்ணி ஷா ஆலம் அயோத்தி நவாபுடனே சேர்ந்துகொண்டு மறுபடியும் வங்காளத்தின்மீது படையெடுத்து வந்தார்.

அப்போது இருந்த ஆங்கிலேய கவர்னர் பகைவர்களைத் துரத்தியடிக்கும்பொருட்டு ஒரு சிறிய சேனையைக் காப்டன் நாக்ஸ் என்பவர் வசமாக அனுப்பினார். அவர் ஷாஜடாவையும் அவர் ஜனங்களையும் பாட்னாவில் சந்தித்து அவர்களோடு யுத்தம் செய்து அவர்களையும் அவர்களுக்கு உதவியாக வந்த ஷுஜாதௌலாவையும் ஜயித்து எல்லாரையும் துரத்தியடித்தார்.

மீர்ஜாபருக்கு விருத்தாப்பியம் மேலிட்டபடியால் வங்காளத்தை ஆளத்தகுந்த சக்தி அவருக்குக் குறைந்துபோய் விட்டது. அதனால் ஆங்கிலேய கவர்னர் அவரை நீக்கிவிட்டு அவருக்குப் பதிலாக வேறொருவரைப் பட்டத்தில் வைக்க நிச்சயித்தார். மீர்ஜாபருடைய மருகரான மீர்காஸிம் என்பவர் நன்றாக ஆளக்கூடியவர் என்று கவர்னருக்குத் தோற்றியபடியால் அவரையே வங்காளத்துக்கு அதிபதியாக்கினார்.

அப்போது மீர்காஸிம் ஆங்கிலேயர்களுக்கு வருஷத்தில் 50 லக்ஷ ரூபாய் வரும்படி கிடைக்கக்கூடிய சித்தகாங்கு, பர்துவான், மிதுனபுரம் என்னும் மூன்று ஜில்லாக்களைக்

கொடுத்தார். வங்காளத்தில் ஆங்கிலேயர்களுக்கு முதலில் கிடைத்திருந்த 24 மாகாணங்களோடு இந்த நான்கும் அப்போது சேர்ந்தன.

மீர்காஸிம் தைரியமும் திறமையுமுள்ள நீதிமான். அவருடைய அரசாட்சி மிகவும் நன்றாக இருந்தது. வங்காளத்துக்கு அதிபதியென்று பெயர்மட்டும் வைத்துக்கொண்டிருப்பதில் அவருக்கு இஷ்டமில்லை. அதனால் தம்முடைய அதிகாரத்தைப் பாவச்செய்ய வேண்டுமென்று விரும்பினார். கல்கத்தாவிலிருந்த ஆங்கிலேயர்கள் அவரிடம் அடிக்கடி திரவியத்தை விரும்பி மிகுந்த வருத்தத்தைக் கொடுத்துவந்தார்கள்; ஆனால் அவரிடமோ பணமில்லை. கிளைவ் ஊருக்குப் போனபிறகு ஆங்கிலேயர்கள் ஒழுங்கீனமாய் இருந்தார்கள் என்பதை அவர் கண்டுகொண்டார். தம்முடைய ராஜதானியைக் கல்கத்தாவுக்கு 300 மைல் தூரத்திலுள்ள மாங்கீர் என்ற இடத்துக்கு மாற்றிக்கொண்டார். உடனே அவருக்கும் ஆங்கிலேயர்களுக்கும் மனவருத்தம் உண்டாயிற்று. நவாபினுடைய ராஜ்யத்தில் வரியொன்றும் கொடாமல் வியாபாரத்தை நடத்திவரலாம் என்ற உரிமை ஆங்கிலேயர்களுக்கு முன்பு இருந்தது; ஆனால் ஆங்கிலேய வர்த்தகர்களுடைய உத்தியோகஸ்தர்கள் இந்த உரிமையை ஒழுங்கீனமாக உபயோகித்துவந்தார்கள். அவர்கள் சுதேச வர்த்தகர்களிடம் பணம் பெற்றுக்கொண்டு கம்பெனி பேரைச் சொல்லித் தங்கள் சாமான்களை எவ்விடத்துக்கும் வரியில்லாமல் கொண்டுபோகும்படி அனுமதி கொடுத்துவந்தார்கள். மீர்காஸிம் இந்த வழக்கத்தை நிறுத்த முயன்றார். ஆனால் அவருடைய முயற்சி பயன்படவில்லை. பிறகு அவர் யாதொரு வரியும் கொடாமல் எவர் வேண்டுமானாலும் தமது சாமான்களை எவ்விடத்துக்கும் கொண்டுபோய் வியாபாரம் செய்யலாம் என்று உத்தரவு கொடுத்தார். ஆனால் தங்களைத்தவிர மற்றவர்களெல்லாரும் வரிகொடுத்தே வியாபாரம் செய்யவேண்டுமென்று விரும்பின கம்பெனி உத்தியோகஸ்தர்களுக்கு அது சரிப்படவில்லை. ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் வர்த்தகத்தால் லாபமடையவேண்டுமென்ற முக்கியமான எண்ணங்கொண்டவர்கள். இந்துஸ்தானத்தில் ஜீந்து வரு

ஷங்களுக்கு முன்பு எந்த ஊரும் அவர்களுக்குச் சொந்தமாக இல்லை. ராஜ்யத்தைச் சம்பாதிக்கவேண்டுமென்ற விருப்பம் அவர்களுக்கு இல்லை. தங்கள் பண்டசாலைகளைக் காக்கும் பொருட்டு அவர்கள் ஒரு சேனையை அனுப்பினார்கள். அவர்கள் கொடுத்துவந்த சம்பளமோ மிகவும் உபாயம். கவர்னருடைய மாதச்சம்பளம் ரூபாய் நானூறே. இவ்வளவு சொற்பச் சம்பளத்தை வைத்துக்கொண்டு ஆங்கிலேயர்கள் இந்தியாவில் எவ்விதம் காலம்தள்ள முடியும்? அதனால் தங்கள் உத்தியோகஸ்தர்கள் இந்தியாவில் சொந்தத்தில் வியாபாரம் செய்து கொள்ளலாம் என்று கம்பெனியார்கள் அனுமதி கொடுத்தார்கள்.

கம்பெனி உத்தியோகஸ்தர்கள் கம்பெனியாருடைய லாபத்தைவிடத் தங்கள் லாபத்தையே பெரிதாகக் கருதினார்கள். சுதேச மன்னர்களிடமிருந்து வெகுமதிகளைப் பெற்று வந்தனர். கம்பெனியாருக்குப் புதிதாகக் கிடைத்த ராஜ்யத்தின் அரசாட்சியைச் சிறிதும் கவனிக்கவில்லை. இதனால் வங்காளத்து நவாபுக்கு உபத்திரவம் அதிகமாயிற்று.

ஆங்கிலேயர்களை இந்தியாவிலிருந்து துரத்திவிடும் பொருட்டு மீர்காஸிம் ஷா ஆலத்தையும் ஷுஜாதௌலாவையும் பெருத்த சேனைகளுடன் தமக்கு உதவி செய்யும்படி கேட்டுக்கொண்டார். பாட்னாவில் உள்ள ஆங்கிலேய வர்த்தகர்களை அவர் சிறைப்படுத்தி ஆங்கிலேயர்களை எங்கே கண்டாலும் கொன்றுவிடும்படி உத்தரவு செய்தார்.

கல்கத்தாவிலிருந்த ஆங்கிலேய வர்த்தக சங்கத்தார் மீர்ஜாபரை மறுபடி நவாபு ஆக்கினார்கள். தம்மால் கூடிய சேனைகளையெல்லாம் சேர்த்துக்கொண்டு கல்கத்தாவிலிருந்து மேஜர் ஆடம்ஸ் என்பவர் புறப்பட்டு வந்தார். அவரிடம் 600 ஆங்கிலேய வீரர்களும் 1,000 சுதேச வீரர்களும் இருந்தார்கள். மீர்காஸிமுக்கும் ஆங்கிலேயருக்கும் மூன்று முறை யுத்தம் பலமாக நடந்தது. மூன்று தடவைகளிலும் மீர்காஸிம் தோல்வியடைந்தார். அப்பால் ஆடம்ஸ் மாங்கீரை எதிர்க்கச் சென்றார்.

மீர்காஸிம் மாங்கீரிலிருந்து பாட்னாவுக்கு ஓடிப்போனார். மறுபடி ஆங்கிலேயர் நெருங்கிவந்தால், தம்மிடம் இருக்கும்




ஆங்கிலேய கைதிகளையெல்லாம் கொன்றுவிடுவதாக அவர் ஆங்கிலேய தளகர்த்தருக்குச் சொல்லியனுப்பினார். ஆனால் அந்தக் கைதிகளில் முக்கியமானவரான எல்லிஸ் என்பவர் தைரியத்தைக் கைவிடாமல், பாட்னாவுக்கு வந்து சேரும்படி ஆடம்ஸுக்கு எழுதியனுப்பினார்.

நிராயுதபாணிகளான ஆங்கிலேய கைதிகளை மீர்காஸிம் கொல்லக்கூடிய கொடியவரென்று மேஜர் ஆடம்ஸ் எண்ணவில்லை. அவர் மாங்கீருக்குப் போய் அதைப் பிடித்துக்கொண்டார். அது தெரிந்தவுடனே மீர்காஸிம் மிகுந்த கோபங்கொண்டார். அவர் உத்தரவுப்படி அவரிடம் வேலையிலிருந்த ஸூம்ரு என்ற ஜர்மானியர் ஒருவர் கைதிகளையெல்லாம் சிறிதும் இரக்கமில்லாமல் கொன்றுவிட்டார். இந்தப் பயங்கரமான செய்கைக்கு 'பாட்னா படுகொலை' என்று பெயர்.

பாட்னாவும் உடனே பிடிபட்டது. மீர்காஸிம் அயோத்திக்கு ஓடிப்போய் ஷா ஆலம், ஷூஜாதௌலா இவர்களோடு சேர்ந்துகொண்டார். மேஜர் மன்ரோ என்பவர் ஆங்கிலேய சேனைகளுக்குத் தலைவராகி 1764-ஆம் வருஷம் மே மாதத்தில் பக்ஸார் என்னுமிடத்தில் மூன்று சுதேச மன்னர்களையும் தோற்கச்செய்தார். வட இந்தியாவில் பிளாசிச் சண்டைக்கு அடுத்தபடி பக்ஸார் சண்டை பிரசித்தமானது. டில்லியில்

இருந்த மொகலாய சக்கரவர்த்தியை ஆங்கிலேயர்கள் ஒரே முறையாக எதிர்த்துத் துரத்தி விட்டார்கள். இந்த யுத்தத்தி ஞல் ஆங்கிலேயர்களுக்கு வட இந்தியாவில் அதிகாரம் பலப் பட்டது. கிளைவ் தம்மிடம் கா ட்டிய பட்சத்தை நினைந்து ஷா ஆலம் ஆங்கிலேயரிடம் சா ணமடைந்தார். ஷுஜாதௌலா ஓடிப்போய்ப் புதிய சேனைக ளுடன் திரும்பிவந்து கோரா என்ற இடத்தில் போர்செய்து மறுபடி தோற்றுப்போனுர். அத ஞல் அவரும் ஆங்கிலேயரிடம் அடைக்கலம் புகுந்தார். தாம் செய்த குற்றத்துக்காகத் தம் மைத்தண்டிப்பார்களென்றுபய ந்து மீர்காஸிம்போன இடம் தெரியாமல் ஓடிப்போய்விட்டார்.



மேஜர் மன்ரோ.

## 40. வங்காளத்தில் லார்ட் கிளைவ்.

1765–1767.

பாட்னுவில் நடந்த படுகொலையும் மற்ற விஷயங்களும் இங்கிலாந்துக்கு எட்டியவுடனே, ஈஸ்ட் இந்தியா கம்பெனி யார் கிளைவுக்கு லார்ட் என்ற பட்டங்கொடுத்து அவரை மறு படியும் இந்தியாவுக்கு அனுப்பினுர்கள். அவர் வங்காளத்துக் கவர்னாாகவும், சேனுதிபதியாகவும் நியமிக்கப்பட்டுத் தம் முடைய இஷ்டப்படி எந்தக்காரியத்தையும் செய்யலாம் என்று அனுமதியும் பெற்றுவந்தார். அக்காலத்தில் இங்கிலாந்திலி ருந்து இந்தியாவுக்கு வந்து சேர ஒரு வருஷம் பிடிக்கும். லார்ட் கிளைவ் வந்து சேர்ந்தபோது இந்தியாவில் யுத்தம் முழுவதும் அடங்கிவிட்டது.

அலகாபாத்தில் ஷா ஆலமும், ஷுஜாதௌலாவும் எவ் வித நிபந்தனைகளுக்கும் அடங்கி நடப்பதாக உடன்பட்டு



மொகலாய ராஜனிடம் கிளைவ் வங்காளதேசத்தை வாங்கிக்கொள்வல்.

ஆங்கிலேயர்களுடைய படைவீட்டில் காத்திருந்தார்கள். கிளைவ் அங்கே போய்ச் சேர்ந்தார். அவ்விடத்தில் ஓர் உடன்படிக்கை செய்யப்பட்டது. அந்த அலகாபாத் உடன்படிக்கைப்படி கிளைவ் அயோத்தியை ஷுஜாவுதெளலாவுக்குத் திருப்பிக் கொடுத்துவிட்டார்; ஆனால் அப்போது முடிந்த யுத்தத்தின் செலவாகிய ஐம்பது லக்ஷம் ரூபாயையும் அவரைக் கொடுக்கும்படி செய்தார்; யமுனைக்கும் கங்கைக்கும் மத்தியிலுள்ள வளப்பமான நிலத்தைக் கிளைவ் ஷா ஆலத்துக்குக் கொடுத்தார். வங்காளம், பேகார், ஒரிஸ்ஸா இந்த நாடுகளில் வரியை வருஷந்தோறும் வாங்கும் உரிமை ஆங்கிலேயர்களுக்கு வந்தது. அதற்குப் பதிலாக வருஷந்தோறும் 26 லக்ஷம் ரூபாயை ஆங்கிலேயர்கள் ஷா ஆலத்துக்குக் கொடுப்பதாக ஒப்புக்கொண்டார்கள். வங்காளத்து நவாபு, தேசப் பாதுகாப்புக்காகவும், நியாய விசாரணைக்காகவும் ஒரு பெரிய சேனையையும், போலீஸ் உத்தியோகஸ்தர்களையும் போஷிக்க வேண்டியிருந்தது. ஒரிஸ்ஸாமட்டும் மகாராஷ்டிரர்கள் வசத்தில் இருந்தபடியால் சில காலம்வரையில் ஆங்கிலேயர்கள் வசத்துக்கு அது வரவில்லை.

மீர்ஜாபருடைய குமாரர் ஒருவரை வங்காளத்துக்கு நவாபாக இருக்கும்படி கிளைவ் நியமித்தார்; ஆனால் அவர் கம்பெனியாருக்கு அடங்கியிருக்க வேண்டுமென்றும் எந்தவிஷயத்திலும் அவர்களுக்கு உத்தரவாதம் சொல்ல வேண்டுமென்றும் ஏற்பாடு செய்திருந்தார். தேசப் பாதுகாப்புக்காக ஒரு சேனையைமட்டும் ஆங்கிலேயர்கள் பரிபாலித்து வந்தார்கள். வியாபாரவிஷயத்தைத் தவிர ராஜ்ய காரியங்களில் அவர்கள் பிரவேசிக்கவில்லை. சுதேச மன்னர்களைத் தங்கள் இஷ்டப்படி ராஜ்யம் ஆளும்படி விட்டுவிட்டார்கள்.



ஷுஜாதௌலா.

லார்ட் கிளைவ் பிறகு கம்பெனியாரின் துரைத்தனத்திலும், ராணுவத்திலும் சில சீர்திருத்தங்கள் செய்தார். கம்பெனி உத்தியோகஸ்தர்கள் சொந்தமாக வியாபாரம் செய்யக்கூடாதென்றும் சுதேசிகளிடமிருந்து வெகுமதிகள் பெறக்கூடாதென்றும் உத்தரவு செய்தார்; ஆனால் அதற்குப் பதிலாக அவர்களுடைய சம்பளத்தை அதிகப்படுத்தினார். சேனையின் செலவைக் குறைத்தார்.

தாம் வந்தகாரியம் முடிந்தபிறகு லார்ட் கிளைவ் இங்கிலாந்துக்குத் திரும்பிப்போனார். 1744–ஆம் வருஷத்தில் அவர் ஒரு சிறிய வேலையில் இந்தியாவுக்கு வந்து பிரெஞ்சுக்காரர்களுடைய அதிகாரத்தைத் தொலைத்துவிட்டு 'காப்டன்' என்ற பெயருடன் திரும்பிப்போனார். 1756–ஆம் வருஷத்தில் கர்னல் கிளைவ் என்ற பெயருடன் இந்தியாவுக்கு வந்து பிளாசிச்சண்டையில் வெற்றியடைந்து சென்னை ராஜ்யத்தையும், வங்காள ராஜ்யத்தையும் ஸ்தாபித்தார். 1765-ஆம் வருஷம் 'லார்ட்' என்ற பட்டம் அவருக்குக் கிடைத்தது.




அப்போது மூன்றாம் முறை அவர் இந்தியாவுக்கு வந்து பல சீர்திருத்தங்களைச் செய்தார்.

கிளைவ் பராக்கிரமம் மிகுந்தவரானாலும் தேகபலமில்லாத நோயாளி; இந்தியாவின் உஷ்ணம் அவர் தேகத்துக்கு

ஒத்துக்கொள்ளவில்லே. அதனுலும், தாம் செய்த அதிக வேலே களாலும் அவர் தேகசுகம் கெட்டுப்போயிற்று. ஐம்பதாம் பிராயத்துக்குள்ளாகவே அவர் இங்கிலாந்தில் தேக அசௌ க்கியம் தாங்காமல் தற்கொலே செய்துகொண்டார்.

## 41. மோகலாய ராஜ்யம்: ஆங்கிலேயர்களும், மகராஷ்டிரர்களும்.

1748–ஆம் வருஷத்தில் மகம்மதுஷா இறந்துபோனுர். கொஞ்சமாவது ராஜ்யாதிகாரம் வகித்திருந்த மொகலாயரில் அவரே கடைசியானவர். அவரது அற்ப அதிகாரமும் 1739-ஆம் வருஷத்தில் நாதர்ஷாவால் குலேந்துபோயிற்று. அவரு க்குப் பிறகு பட்டத்துக்கு வந்த அரசகுமாரர்கள் இருவரும் பெயருக்குமட்டும் சக்கரவர்த்திகளாய் இருந்தனர். அவர் களில் ஒருவனேக் கண்ணேக் குத்திக் குருடனுக்கினர்; மற்ற வனேக் கொன்றுவிட்டனர். வடஇந்தியா முழுவதையும் ஆப்



சப்டெனியாருடைய சேனேகளே ஷா ஆலம் பார்க்கின்றுன்.

கானியரும் மகாராஷ்டிரரும் சிற்சிலகாலம் ஆண்டார்கள். கொலையுண்டவனுடைய குமாரரான ஷா ஐடா என்பவர் அயோத்தி நவாபான ஷுஜாதௌலாவினிடம் ஓடிப்போய், அவருடன் சேர்ந்துகொண்டு வங்காளத்தின்மீது படையெடுத்தார். ஆனால் அவ்விருவரும் கிளைவினால் துரத்தப்பட்டனர்.

இந்த ஷா ஐடா பானிப்பட்டு யுத்தம் நடந்தபிறகு ஷா ஆலம் என்னும் பட்டத்துடனே மொகலாய சக்கரவர்த்தியானார்; பிறகு ஷுஜாதௌலாவோடு சேர்ந்துகொண்டு மறுபடியும் வங்காளத்தின்மீது படையெடுத்துவந்தார்; ஆனால் மேஜர் கர்னக் என்பவரால் தோல்வியடைந்தார். இதனால் இவர் டில்லிக்குப் போகாமல் பயந்துகொண்டு அயோத்தியிலேயே இருந்தார்.

மூன்றும்முறை ஷா ஆலமும் ஷுஜாதௌலாவும் மீர் காஸிமோடு கூடி வங்காளத்தின்மீது படையெடுத்து வந்து 1764–ஆம் வருஷத்தில் பக்ஸாரில் முற்றிலும் தோற்றுப்போனார்கள். மறுவருஷம் கிளைவ் அலகபாத்து உடன்படிக்கையைச் செய்து முடித்தார். இதனால் ஆங்கிலேயர்கள் ஷா ஆலத்துக்கு அவருடைய ஜீவனத்தின் பொருட்டு வருஷந்தோறும் இருபத்தைந்து லக்ஷம் ரூபா கொடுப்பதாக ஒப்புக்கொண்டனர். ஆங்கிலேயருடைய பாதுகாப்பில் அலஹபாத்தில் வசிப்பதற்கு அவரும ஒப்புக்கொண்டார். டில்லியிலே பிரபலமாக இருந்த மொகலாய ராஜ்யம் இவ்வாறு முடிவுபெற்றது.



கிழக்குருட்டு ஷா ஆலம்.

பானிப்பட்டு யுத்தம் நடந்த பத்துவருஷங்களுக்குப் பிறகு மகாராஷ்டிரர்கள் பழையபடி பலசாலிகளானார்கள்;

ஆனுல் பேஷ்வாக்கள் அவர்களுக்குத் தலைவர்களாய் இருக்க வில்லை. மகாராஷ்டிரத்தலைவர்கள் யாவரினும் மிகவும் வல்லமை பெற்றவர் மகதாஜி ஸிந்தியா என்பவர். அவர் மகாராஜா என்று பட்டம் வைத்துக்கொண்டார். ராஜபுதனத்தில் உள்ள ராஜபுத்திரச் சிற்றாசர்களை யெல்லாம் தமக்கு, சௌத் வரியைக் கொடுத்துவரும்படி செய்தார். பிறகு அவர் ஷா ஆலத்தை அலகபாத்தை விட்டுவிட்டு டில்லிக்குப்போய் அங்கே சிம்மாசனம் ஏறி மொகலாய ராஜ்யத்தைக் கைக்கொள்ளும்படி சொன்னுர். ஆங்கிலேய கவர்னருடைய உத்தரவில்லாமலும், அவருடைய எண்ணத்துக்கு விரோதமாகவும் ஷா ஆலம் அப்படியே செய்துவிட்டார். அதனுல் ஆங்கிலேயர் அவருக்குக் கொடுத்துவந்த இருபத்தைந்து லக்ஷம் ரூபாயையும் நிறுத்திவிட்டார்.

பிறகு அநேக வருஷ காலம் ஸிந்தியா ஷா ஆலத்தை ராஜாங்க கைதியாக வைத்திருந்தார். டில்லிக்கும் ஆக்ராவுக்கும் சுற்றிலும் உள்ள நாட்டை ஷா ஆலத்தினுடைய பெயரால் ஆண்டுவந்தார்; ஆனுல் இப்படி அநேக வருஷகாலஞ் சென்றபின்பு தமது முக்கிய நகரமாகிய குவாலியருக்கு ஏதோ காரியமாய்ப் போனுர். அவர் போனவுடனே ரோஹில்லா தேசத்து ஆப்கானியத் தலைவன் ஒருவன் டில்லியில் புகுந்து அரண்மனையைக் கொள்ளையிட்டு அங்கேயிருந்த வயது சென்ற மொகலாய சக்கரவர்த்தியின் கண்ணையும் பிடுங்கிவிட்டான்; அதைக் கேள்வியுற்றவுடனே ஸிந்தியா ஒரு சேனையுடன் திரும்பிவந்து, அந்த ஆப்கானியனைக் கொன்றுவிட்டார். ஆனுல் ஷா ஆலத்துக்குக் கண்கொடுக்க முடியுமா? இருபது வருஷங்களுக்குப் பிறகு 1803–ஆம் வருஷத்தில், ஆங்கிலேய வீரர்கள் டில்லியைக் கைக்கொண்டபொழுது, அங்கே மகராஷ்டிரர் வசத்தில் ஷா ஆலம் இருந்ததைக் கண்டார்கள். உடனே அவரை விடுவித்து அவருக்கு உபகாரச்சம்பளமாக ஒரு பெருந்தொகை கொடுத்து, அவருடைய பழைய அரண்மனையிலேயே வசிக்கும்படியும் செய்தார்கள்.



# 42. தக்ஷிண இந்தியா: ஹைதர் ஆலி.

## முதல் மைசூர் யுத்தம். 1767-1769.

மைசூர் கன்னடபாஷை பேசுவோருடைய தேசம். அதை அநேக நூற்றாண்டுகளாக இந்திய அரசர்கள் ஆண்டுவந்தார்கள். தக்ஷிணத்திலிருந்த மகம்மதிய சுல்தான்கள் அதை ஜயிக்கவேயில்லை. அநேக வருஷ காலம் அது விஜயநகர ராஜ்யத்தில் ஒரு பாகமாக இருந்தது. 1565-ஆம் வருஷத்தில் தலைக்கோட்டைச் சண்டைக்குப்பிறகு அந்த ராஜ்யம் அழிந்துபோகவே, ஒரு சிறு கோட்டையின் அதிபதி ஒருவன் அந்நாட்டைக் கைக்கொண்டு ஆண்டுவந்தான்.

மகம்மது ஆலி கர்நாடக நவாபாக இருந்த காலம்தொடங்கி, எழுதப் படிக்கத் தெரியாதவரும், ஆனால் தைரியமும் திறமையும் உடையவருமான ஹைதர் ஆலி என்னும் ஒரு மகம்மதிய போர்வீரர் கொஞ்சம் கொஞ்சமாய்த் தலையெடுக்கலானார்.

அப்பொழுது மைசூரில் நிலையான நல்ல அரசாட்சி இல்லாமையால் சிவாஜி அதை ஜயித்தார். அவருக்குப்பிறகு மகாராஷ்டிரத் தலைவர்களும் அவர்கள் படைவீரர்களும் ஒவ்வொரு வருஷமும் இந்தத் தேசமெங்கும் சுற்றித்திரிந்து சௌத் வரியைக் கேட்டுக்கொண்டும் ஜனங்களைக் கொள்ளையிட்டுக் கொன்றுகொண்டும் வருத்திவந்தார்கள். 'துர்க்கங்கள்' என்று சொல்லப்பட்ட பலமான மலைக்கோட்டைகள் பல மைசூரில் உண்டு. அவைகளில் பல, பாளையக்காரர்களிடம் இருந்தன. அரசன் நிர்ப்பந்தம்செய்தாலொழிய அவர்கள் யாதொரு பகுதிப்பணமும் செலுத்துவதில்லை. பலமுள்ளவனும் திடமுள்ளவனுமான ஒருவன் அதிகாரம் அடைவதற்கு அது தக்க சமயமாய் இருந்தது.

ஹைதர் ஆலி கொஞ்சகாலத்தில் சில வீரர்களைத் தம்மிடம் சேர்த்துக்கொண்டார். அவர்களுக்கு அவர் சம்பளத்தைப் பணமாக கொடுப்பதில்லை; கொள்ளையடிப்பதில் கிடைக்கும் பொருள்களில் ஒவ்வொரு பாகத்தைக் கொடுப்பது வழக்கம். அவர்கள் கிராமத்தாருடைய பொருள்களையும் தானியங்களையும் ஆடுமாடுகளையும் பலாத்காரமாய்க் கொண்டு

போவார்கள். ஒவ்வொரு வீரனுக்கும் தான் திருடினதில் பாதி கிடைக்கும்; மிச்சம் ஹைதரைச் சேரும்.

ஹைதர் அநேக வீரர்களுக்குத் தலைவராய் மிக்க பலத்தோடு திரிந்துவருகையில் மைசூரில் இருந்த அரசர் அவரை ஒரு வேலையில் அமர்த்திக்கொண்டு, அவருடைய படைகளுக்காகப் பணமும் கொடுத்துவந்தார். வரவர அவர் பலமுற்றுக் கடைசியாய் மைசூர் சேனைக்குத் தளகர்த்தரானார். பிறகு மைசூர் இளவரசன் தனக்குப் பிரதிநிதியாக இருந்த தனது சிற்றப்பனோடு விரோதங்கொண்டான். ஹைதர் தாம் இளவரசனுடன் சேருவதாக நடித்து அவன் சிற்றப்பனைத் தள்ளிவிட்டு, அதிகாரம் அனைத்தையும் தாமே கைக்கொண்டு சிம்மாசனம் ஏறி இளவரசனையும் சிறையில் வைத்தார்.

தம்மிடம் உத்தியோகத்திலிருந்த சில பிரெஞ்சுக்காரர்களைக்கொண்டு தமது படைவீரர்களைப் பழக்கி, அவர்களுக்கு நல்ல ஆயுதங்களைக் கொடுத்து விரைவில் மிகவும் பலமான ஒரு சேனையைச் சித்தப்படுத்திக்கொண்டார்; பிறகு ஹைதராபாத்தின் சில பாகங்களையும் கர்நாடகத்தையும் ஜயிக்கத் தொடங்கினார். மைசூர் அரசாட்சியோடு நில்லாமல் தென்னிந்தியா முழுவதையும் வென்றுவிடலாம் என்றும் எண்ணினார். அந்த எண்ணம் நிறைவேறியிருந்தால், மத்திய இந்தியாவையும் வெல்ல முயற்சி செய்திருப்பார்.

ஹைதர் மிக்க பலசாலி ஆய்விட்டார் என்பதையும், மிகவும் தைரியம் கொண்டுவிட்டார் என்பதையும் தென்னிந்தியாவில் உள்ள மற்றப் பெரிய அதிகாரிகள் அறிந்தவுடனே, அவருக்கு மேன்மேலும் மிகுந்துவந்த வலிமையை வளரவொட்டாமல் தடுக்கவேண்டும் என்று நினைத்தனர். அப்பொழுது இருந்த அதிகாரிகள் நைஸாமும் மகாராஷ்டிரரும் ஆங்கிலேயருமே. ஹைதர் அதுவரையில் ஆங்கிலேயருடன் சண்டை செய்ததில்லை. ஆயினும் அவர்களுடைய பாதுகாப்புக்கு உட்பட்ட கர்நாடக நவாபின் பட்டணங்களிலும் கோட்டைகளிலும் பலவற்றைக் கைக்கொண்டிருந்தார். ஆங்கிலேயருக்குத் துணைவரான நைஸாமை எதிர்த்தபொழுது, சென்னைக் கவர்னர் ஹைதருக்கு விரோதமாய் நைஸாமோடும் மகாராஷ்டிரர்களோடும் சேருவதாகச் சொல்லி, நைஸா

முக்கு உதவியாக ஒரு சேனையையும் அனுப்பினார். அதன் பின் ஆங்கிலேயருடைய சேனையானது நைஸாம் சேனைகளுடனே மைசூரில் புகுந்து, பங்களூரைக் கைப்பற்றிக் கொண்டது.

ஹைதர் மூன்று விரோதிகளோடும் ஒரேகாலத்தில் போர் செய்ய முடியாதென்று, ஒரு தந்திரம் செய்தார். யுத்தத்தில் அனுசரிக்கவேண்டிய முக்கிய உபாயமாவது சத்துருக்களுக்குள் பேதம் உண்டாக்குவதேயாகும். மகராஷ்டிரர்கள் கொள்ளை ஒன்றையே கவனிப்பவர்கள் என்பதை ஹைதர் அறிந்தவர்; ஆகையால், அவர்களுக்கு வேண்டிய பணத்தை அவர் கொடுத்து அனுப்பிவிட்டார்.


ஹைதர் ஆலி.

அதன்பிறகு அவர் நைஸாம் தம்முடைய பக்கம் சேர்ந்துகொண்டால், கர்நாடகம் முழுவதையும் கைக்கொள்வதற்குத் தாம் உதவிசெய்வதாகச் சொல்லி ஒரு கடிதம் எழுதியனுப்பினார். நைஸாமும் அற்பத்தனமாய் அப்படியே செய்ய ஒத்துக்கொண்டார். ஆங்கிலேய தளகர்த்தரான கர்னல் ஸ்மித் என்பவர் சென்னையிலிருந்து அவ்வளவுதூரம் நைஸாமினுடைய படைகளுக்கு உதவி செய்யுமாறு வந்திருக்கவும், மறுநாள் காலையில் அந்தப் படைவீரர்கள் தமக்கு விரோதமாய் ஹைதருடன் சேர்ந்துகொண்டு தம்மையே எதிர்ப்பதாக இருத்தலைக் கண்டு திகைத்துப்போனார்.

கர்னல் ஸ்மித் பிறகு பங்களூரை விட்டுவிட்டுச் சென்னைக்குத் திரும்பிவந்தார். 70,000 வீரர்களோடு ஹைதர் அவரைத் துரத்திக்கொண்டு வந்தார். மைசூரிலிருந்து கர்நாடகத்துக்குப் போகும் வழியில் சந்தகமக் கணவாய் வழியே ஆங்கிலேயர்கள் வந்துகொண்டிருக்கையில் ஹைதர்

அவர்கள்மேல் வீழ்ந்து தாக்கினர்; ஆனால் மிகுந்த நஷ்டத்தோடு திரும்பி ஓடும்படி நேரிட்டது. மறுபடியும் ஹைதர் விடாமல் கர்னல் ஸ்மித்தைத் தொடர்ந்து வந்தார். திருவண்ணமலையில் ஒரு பெரிய சண்டை நடந்தது. அதில் ஹைதர் ஆலி முற்றிலும் தோற்று ஓடிப்போனர்.




பிறகு நைஸாம் ஹைதரைக் கைவிட்டுத் தம்மால் கூடிய அளவு விரைவாய் ஹைதராபாத்துக்குப் போய்த் தம்முடன் உடன்படிக்கை செய்துகொள்ளும்படி ஆங்கிலேயரைக் கேட்டுக்கொண்டார். அவர்களும் அவ்வாறே செய்தார்கள்.

ஹைதரோடு செய்துவந்த யுத்தம் ஒருவருஷ காலம்வரையில் தொடர்ந்துகொண்டே இருந்தது. ஹைதர், அங்குமிங்குமாகச் சேனையை நடத்திச் சென்றாலும், ஆங்கிலேயரோடு பின்னுமொருமுறை சண்டைசெய்யாமலே தப்பியிருந்தார். கடைசியாய் அவர் ஒரு பெருஞ்சேனையுடனே நோய்ச் சென்னைக்கே விரைவில் வந்து, தம்முடன் சமாதானம் செய்துகொள்ளும்படி சென்னைக் கவர்னரைக் கேட்டார்.

சண்டை நடத்துவதற்கு, கவர்னரிடம் பணம் இல்லை. தங்களுக்கு வந்த லாபம் முழுவதும் சண்டையிடுவதில் செலவழிந்துவிட்டதென்றால் அது கம்பெனியாருக்குத் திருப்தியாய் இராது என்பது அவருக்குத் தெரியும். ஹைதர் தமக்கு

மறுமொழி உடனே சொல்லவேண்டும் என்றதனுல், வங்காளத்துக் கவர்னரையும் பம்பாய்க் கவர்னரையும் ஆலோசனை கேட்டு எழுதுவதற்கும் அவருக்கு நேரம் இல்லை; ஆகையால் ஹைதரோடு உடன்படிக்கை செய்துகொண்டார். அதன்படி தாங்கள் ஜயித்த நாடுகளையெல்லாம் அவரவர்களிடம் கொடுத்துவிடவேண்டும் என்றும், தங்களைப் பகைவர்கள் எதிர்த்தால் ஒருவருக்கொருவர் உதவிசெய்யவேண்டும் என்றும் இருதிறத்தாரும் ஒத்துக்கொண்டார்கள்.

ஆங்கிலேய கவர்னர் இந்த உடன்படிக்கையின் இரண்டாவது பாகத்துக்கு உடன்பட்டது சரியன்று. எனெனில் ஹைதர் தம்முடைய அயலார் ஒருவரோடு உடனே சண்டை செய்வாரென்று இவர் அறிந்திருக்கலாம். சண்டைக்கே போகக்கூடாது என்பது ஈஸ்ட் இந்தியா கம்பெனியாருடைய நோக்கம். மேலும் பம்பாயைச் சுற்றிலும் வசித்த மகராஷ்டிரர்களோடு அங்குள்ள ஆங்கிலேயர்கள் சிநேகமாய் இருந்தார்கள். சென்னையில் இருந்த ஆங்கிலேயர்கள் மகராஷ்டிரர்களுக்கு விரோதமாக ஹைதருக்கு உதவிசெய்தால், பம்பாயிலுள்ள ஆங்கிலேயர்கள் அங்கிருந்த மகராஷ்டிரர்களால் உடனே எதிர்க்கப்பட்டுப் பெரிய அபாயத்துக்கு உள்ளாவார்கள் அல்லவா?



## 43. வங்காளம்.

### (i) கிளைவுக்குப்பிறகு இருந்த அரசாட்சி.
### 1765–1772.

ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் வங்காளத்து ஜனங்களைத் தாங்களே துரைத்தனம் செய்துவரும்படி விட்டுவிடுமாறு கிளைவுக்கு உத்தரவு பண்ணினுர்கள் என்று நாம் முன்னே படித்தோம். ஆகையால் அந்த நாட்டை ஆளும்படி மீர்ஜாபர் மகன் ஒருவனைக் கிளைவ் ஏற்படுத்தினுர். அவனுக்குக் கீழே ஒருவன் வங்காளத்துக்கும் மற்றொருவன் பேகாருக்குமாக இரண்டு பிரதிநிதிகள் இருந்தார்கள். அவர்கள் வரிகளை வாங்கிவந்து அவற்றை வங்காள அரசாங்கத்தாருக்குக் கொடுத்துவந்தார்கள். இந்த அரசாங்கத்தார் அவர்களுக்

கும் அவர்களுடைய வேலைக்காரர்களுக்கும் நியமனப்படி சம்பளம் கொடுத்துவந்தார்கள். வங்காளத்தை ஆப்கானிய ரும் மகாராஷ்டிரர்களும் எதிர்க்காதபடி காப்பதற்காக அவ்வி டத்தில் ஓர் ஆங்கிலேய சேனை பரிபாலிக்கப்பட்டு வந்தது.

தேச அரசாட்சி ஆங்கிலேயர்களாலும், இந்தியர்களாலும் ஏழு வருஷகாலம் சேர்ந்து நடந்துவந்தது. ஆனால் இரண்டு பேர்களும் சேர்ந்து நடத்திவந்த இவ்வரசாட்சி முடிவில் அடியோடே தவறிப்போயிற்று. இதில் இந்திய உத்தியோ கஸ்தர்கள் தங்கள் வேலையை நன்றாய்ச் செய்யாமையால் தேசம் நன்றாய்ப் பரிபாலிக்கப்படவில்லை; ஜனங்களுக்குள்ள சௌகரியங்கள் குறைந்தன. விவசாயம், வர்த்தகம் முதலி யன சரியாக நடைபெறவில்லை; ஜனங்களிடமிருந்து கிடை க்கவேண்டிய வரியும் ஒழுங்காக வரவில்லை.

1770-ஆம் வருஷத்திலும் 1771-ஆம் வருஷத்திலும் வங் காளத்தில் கொடுமையான பஞ்சம் ஒன்று நேரிட்டது. இத னால் மூன்றிலொருபங்கு ஜனங்கள் மடிந்துபோனார்கள். சாகுபடி ஒன்றும் இல்லாமையால் ஜனங்கள் ஒருவித வரியும் கொடுக்க முடியவில்லை.

### (ii) வங்காளத்தின் கவர்னரான வாரன் ஹேஸ்டிங்க்ஸ். 1772-1774.

வங்காளத்தில் காரியங்களை ஒழுங்கு செய்யத்தக்க திற மைசாலி ஒருவர் அவசியம் வேண்டியிருந்தது. அப்போது ஈஸ்ட் இந்தியா கம்பெனியாரிடம் வாரன் ஹேஸ்டிங்க்ஸ் என் பவர் வேலைபார்த்து வந்தார். அவர் மிக்க திறமையுள்ளவர். அவர் 1750-ஆம் வருஷத்தில் கல்கத்தாவுக்கு ஒரு சிறிய குமாஸ்தாவாக வந்தவர்; தமது வேலையில் படிப்படியாய் உயர்ந்து கடைசியாய்க் கம்பெனி உத்தியோகஸ்தர்கள் எல் லாரிலும் தலைமையை அடைந்தார். 1772-ஆம் வருஷம் அவர் வங்காளத்துக்குக் கவர்னரானார்.

ஹேஸ்டிங்க்ஸ் செய்யவேண்டிய அவசியமான காரியங்கள் நான்கு இருந்தன. சேனைச் செலவுக்கும் துரைத்தனச் செல வுக்கும் போதுமானபடி கம்பெனியாருடைய வரும்படியை அதிகரிக்கச் செய்வது முதலாவது; ஏழை ஜனங்களுடைய வரிகளின் தொகையையும் அளவையும் குறைத்து அவர்களை

ஆதரிப்பது இரண்டாவது; சாதாரண ஜனங்கள் குறை கூறாத படி நியாயமான விதிகளையும் சட்டங்களையும் ஏற்படுத்துவது மூன்றாவது; போர்செய்ய முயற்சி செய்துகொண்டிருந்த ஹைதர் எந்தச் சமயத்திலேனும் ஆங்கிலேயரை எதிர்க்கக் கூடுமாதலால் அவரோடு சண்டை செய்வதற்குப் பணம் சேகரித்து வைப்பது நான்காவது.

வங்காளத்தில் கிளைவ் பிரபு ஏற்படுத்தின இரட்டைத் துரைத்தனத்தை வாரன் ஹேஸ்டிங்க்ஸ் முதலில் நிறுத்தினார். சுதேச நவாபுகளையும் நாயப்மாரையும் நீக்கிவிட்டு வங்காளத்திலும் பீகாரிலும் உள்ள ஒவ்வொரு ஜில்லாவிற்கும் ஆங்கிலேய கலெக்டர்களை நியமித்தார். அவர்களே நியாயாதிபதிகளின் வேலையையும் பார்த்துவந்தார்கள். அவர்களுக்கு உதவிசெய்வதற்காக நியாயசாஸ்திரம் அறிந்த இந்திய பண்டிதர்களும் மகம்மதிய காஜிகளும் நியமிக்கப்பட்டனர். சிவில், கிரிமினல் சம்பந்தமான வழக்குகளைப்பற்றி வேண்டிய போது மறு விசாரணை செய்யவும் சில மேலான நியாயஸ்தலங்களை அமைத்தார். நிலவரி விஷயங்களைப்பற்றிக் கவனிக்கும்பொருட்டு ரெவினியூ இன்ஸ்பெக்டர்கள் நியமிக்கப்பட்டார்கள். வரி கொடாதவர்களுடைய சொத்தை ஏலம் போட உத்தரவு கொடுத்தமையினால் அநேகருடைய சொத்துக்கள் ஏலம் போடப்பட்டன.

பானிப்பட்டு யுத்தம் நடந்த பத்துவருஷங்களுக்குப் பின் மகாராஷ்டிரர்கள் பலமடைந்தார்கள்; ஆனால் பேஷ்வாக்கள் அவர்களுக்குத் தலைவர்களாக இருக்கவில்லை.

டில்லிக்குப் போய் மகாராஷ்டிரரைச் சேர்ந்துகொண்டதனால், வருஷந்தோறும் பெற்றுவந்த பணத்தை இழந்ததன்றி, யமுனைக்கும் கங்கைக்கும் இடையிலுள்ள தோ-ஆப் என்னும் அலகபாத்து ஜில்லாவையும் ஷா ஆலம் இழந்தார். பிறகு அந்த ஜில்லாவானது அயோத்தி நவாபு ஆகிய ஷு-ஜா தௌலாவுக்குக் கொடுக்கப்பட்டது. அவர் இதற்காகக் கம்பெனியாருக்கு ஐம்பது லக்ஷம் ரூபாய் கொடுத்தார்.

சில காலத்துக்குப் பிறகு ஷு-ஜா தௌலா ரோஹில்லர்களோடு சண்டையிட்டார். இந்த ஜாதியார் அதற்குச் சில

வருஷங்களுக்குமுன் அயோத்திக்கு வடமேற்கேயுள்ள ஒரு சிறு தேசமான **ரோஹில்கண்டில்** குடியேறினவர்கள்; மூர்க்க குணமுள்ளவர்கள். இவர்கள் இந்துக்களை வருத்தி, அயோத்தி நவாபுக்கும் மிகுந்த துன்பத்தை உண்டாக்கினார்கள். இவர்களோடு சண்டை செய்வதற்காக ஆங்கிலேய சேனையொன்றைத் தமக்கு உதவும்படி ஹேஸ்டிங்க்ஸை நவாபு கேட்டுக்கொண்டார். இந்த உதவிக்காக அவருக்கு நவாபு நாற்பது லக்ஷம் ரூபாய் கொடுத்தார். ரோஹில்லர்கள் தோற்று ஓடிப்போனார்கள். பிறகு அவர்களுடைய தேசத்தில் கலகம் நீங்கிற்று. அதற்குப் பழைய அதிகாரியின் மகன் ஒருவனை நவாபு ஆக்கினார்கள். அவனுடைய சந்ததியாருக்கு ராமபுர நவாப்மார் என்னும் பெயர் இன்னும் வழங்கிவருகின்றது.

## 44. வாரன் ஹேஸ்டிங்க்ஸ், முதல் கவர்னர்ஜனரல்.

1774–1785.

ஹேஸ்டிங்க்ஸை வங்காள கவர்னராக்கின இரண்டு வருஷங்களுக்குப் பின்பு ஈஸ்ட் இந்தியா கம்பெனியாருடைய துரைத்தனத்தில் ஒரு பெரிய மாறுதல் உண்டாயிற்று. வங்காளத்தில் கிளைவ் பிரபு ஏற்படுத்திய ஏழு வருஷத்து இரட்டை அரசாட்சியால் கம்பெனியார் இருபது லக்ஷம் பவுன் கடன்படும்படி நேரிட்டது. இவர்கள் இந்தத் தொகையை இங்கிலாந்திலுள்ள தனவான்களிடம் கடனாக வாங்கிக்கொள்ள உத்தரவு தரும்படி ஆங்கிலேய துரைத்தனத்தாரைக்கேட்டுக்கொண்டார்கள். அந்தத் துரைத்தனத்தார் அவ்வாறே செய்யக் கம்பெனியாருக்கு அனுமதி தந்தார்கள். ஆனால் அவர்கள்



வாரன் ஹேஸ்டிங்க்ஸ்.

அதே காலத்தில் "ரெகுலேடிங் ஆக்ட்" என்ற ஒழுங்கு முறைச் சட்டத்தை ஏற்படுத்தினார்கள்.

இந்தியாவில் ஈஸ்ட் இந்தியா கம்பெனியாருக்குச் சொந்தமான பாகங்களின் அரசாட்சியை ஒழுங்குபடுத்த, அதாவது அதற்காகப் புது விதிகளை விதிக்க, இந்தச் சட்டம் ஏற்பட்டது. அதன்படி வங்காளத்துக் கவர்னரை, பிரிட்டிஷ் இந்தியா முழுமைக்கும் கவர்னர்ஜனரல் (பொதுவான அதிபதி) என்று ஏற்படுத்தினார்கள். அந்தக் கவர்னரை நியமிக்கும் அதிகாரம் கம்பெனியாருக்கு இல்லை; அது இங்கிலாந்தின் முதல் மந்திரிக்கே உரியதாயிற்று. கல்கத்தாவில் பெரிய நியாயஸ்தலம் (ஸுப்ரீம் கோர்ட்) ஒன்று ஏற்படுத்தப்பட்டது. இந்த நியாயஸ்தலத்துக்குரிய நியாயாதிபதிகளும் ஆங்கிலேய துரைத்தனத்தாரால் இங்கிலாந்திலிருந்து அனுப்பப்பட்டு வந்தனர்.

கவர்னர்ஜனராலுக்கு உதவியாக நான்கு அங்கத்தினர் கூடிய ஓர் ஆலோசனைச் சபை ஏற்பட்டது. அவர்களும் ஆங்கிலேய துரைத்தனத்தாரால் நியமிக்கப்பட்டு வந்தனர்.

இங்கிலாந்திலே அந்தத் தேசத்து அரசரும் இரண்டு பெரிய ஆலோசனைச் சபையாரும் கூடித் துரைத்தனத்தை நடத்திவருகிறார்கள். இந்த இரண்டு சபைகளில் ஒன்று பிரபுக்கள் கூடியது. அதற்கு 'ஹௌஸ் ஆவ் லார்ட்ஸ்' அல்லது பிரபுக்கள் சபை என்று பெயர். மற்றது ஆங்கிலேய பிரஜைகள் நியமிக்கும் பொது ஜனங்கள் அடங்கிய சபை. அதற்கு 'ஹௌஸ் ஆவ் காமன்ஸ்' அல்லது பொதுஜன சபை என்று பெயர். இவை இரண்டும் சேர்ந்தது பார்லிமெண்ட் என்னும் மகா மந்திர சபை. அதில் தலைமை பெற்றிருப்பவர் இங்கிலாந்தின் முதல் மந்திரி.

இதுவரையில் ஈஸ்ட் இந்தியா கம்பெனி வர்த்தகர்கள் இந்தியாவில் தங்கள் இஷ்டப்படி காரியங்களை நடத்திவந்தார்கள். அதில் ஆங்கிலேய துரைத்தனத்தார் தலையிட்டுக் கொள்ளவில்லை. ஏனென்றால் அவர்கள் அதுவரையில் வர்த்தகர்களேயன்றி வேறல்லர்; ஆனால் இப்பொழுது இந்தியாவில் பல பெரும்பாகங்கள் அவர்களுக்குச் சொந்தமாய், அவர்கள் சுதேசச் சிற்றரசர்களோடு சண்டையும் சமாதானமும் செய்து

கொண்டு அரசாட்சியும் உடையவர்களாகிவிட்டமையால் ஆங்கிலேய துரைத்தனத்தார் அவர்கள்மேல் கொஞ்சம் அதிகாரம் செலுத்துவது தகுதியாயிற்று.

அதுவரையில் சென்னைக் கவர்னரும் பம்பாய்க் கவர்னரும் தங்கள் இஷ்டப்படி சண்டையாவது சமாதானமாவது செய்துவந்ததோடு தங்கள் நாட்டிற்கு நன்மையானவைகளை மாத்திரம் கவனித்துவந்தார்கள். இதனால் சில சமயங்களில் பெரிய தவறுகள் நேரிடுவதற்கு இடம் இருந்தது. ஹைதர் ஆலியை மகாராஷ்டிரர்கள் எதிர்த்தால் ஹைதருக்கு உதவி செய்வதாகச் சென்னைக் கவர்னர் ஒப்புக்கொண்டார். ஆனால் அந்தக்காலத்தில் பம்பாய்த் துரைத்தனத்தார் மகாராஷ்டிரர்களோடு சிநேகமாயிருந்தார்கள். இவ்வாறு இந்த இரண்டு துரைத்தனத்தாரும், ஒன்றற்கொன்று விரோதமான பக்கங்களைச் சேர்ந்திருந்தார்கள். இந்தியாவிலிருந்த ஆங்கிலேயர்கள் தங்களுக்குள் கக்ஷிபேதம் இல்லாமல் எல்லாரும் ஒரு பக்கமாக இருந்து மற்றவர்களோடு சிநேகம் செய்வதும் சண்டை செய்வதும் அவசியமாக இருந்தது. ஆகவே சென்னைக் கவர்னரும் பம்பாய்க் கவர்னரும் கவர்னர்ஜனரலுடைய அதிகாரத்துக்கும் அவருடைய ஆலோசனைச்சபையின் அதிகாரத்துக்கும் அடங்கி நடக்கவேண்டுமென்று உத்தரவு செய்தார்கள். இதனால் ஒரு பகுதியாருடைய சிநேகிதர்களும் பகைவர்களும் மற்றப் பகுதியாருடைய சிநேகிதர்களாகவும் பகைவர்களாகவும் ஆனார்கள்.

வாரன் ஹேஸ்டிங்க்ஸ் இருந்தவரையில் எல்லாம் சரியாய் நடந்துவந்தன. புது விதியின்படி ஏற்படுத்தப்பட்ட நான்கு அங்கத்தினரில் மூவர் அவர் செய்த ஒவ்வொரு காரியத்திலும் அவருக்கு விரோதமாக நடந்துவந்தார்கள். அந்த அங்கத்தினர்களில் முக்கியமானவர் பிரான்ஸிஸ் என்பவர். கவர்னர்ஜனரலுக்கும் இந்தச் சபையாருக்கும் விரோதம் வர வர அதிகமாயிற்று. ஹேஸ்டிங்க்ஸ் லஞ்சம் வாங்கினார் என்று அவருடைய விரோதிகள் அவர்மேல் குற்றஞ் சாட்டினார்கள். இதற்கு முக்கிய காரணமாக இருந்தவன் நந்தகுமாரன் என்னும் பிராமணன் ஒருவன். அவனுக்கும் ஹேஸ்டிங்க்ஸுக்கும் முன்னமேயே விரோதம் உண்டு. அவன் ஏதோ

ஒரு பத்திரத்தில் தப்புக் கையெழுத்துப் போட்டான் என்ற குற்றம் ஏற்பட ஹேஸ்டிங்க்ஸ் அவனுக்கு மாணதண்டனை விதித்தார். அதன்பிறகு ஹேஸ்டிங்க்ஸுக்கு விரோதமாக ஒருவரும் தீங்குசெய்ய முயலவில்லை.

## மகாராஷ்டிரர்களோடு நடந்த முதல் யுத்தம்.

## 1778–1782.

கல்கத்தாவிலும் சென்னையிலும் இருந்த ஆங்கிலேய வர்த்தகர்கள் இந்திய மகம்மதிய அதிபர்களோடு சண்டைசெய்ய நேரிட்ட பொழுது, பம்பாயிலிருந்த வர்த்தகர்கள் வர்த்தகம் தவிர வேறொன்றும் செய்யவில்லை. அதற்கு முக்கிய காரணம் பம்பாயிலிருந்த ஆங்கிலேயரை ஒருவரும் எதிர்க்காமல் இருந்ததுதான். சென்னையிலுள்ள ஆங்கிலேயர்களைப் பிரெஞ்சுக்காரர்கள் எதிர்த்து அவர்களைத் துரத்திவிடப் பார்த்ததும், அதனால் ஆங்கிலேயர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக இங்கிலாந்திலிருந்து சேனைகளை வருவித்துக் கொள்ளும்படி நேர்ந்ததும் நமக்குத் தெரியும். கல்கத்தாவிலும் சுராஜ்—உட்—டௌலா ஆங்கிலேயர்களை எதிர்த்தபடியால் அவ்விடத்திலும் அவர்கள் தங்களைக் காத்துக்கொள்ள நேரிட்டது.



இரகுபா.

ஆனால் புதுச்சேரியைப்போலவும் சந்திரநாகூரைப்போலவும் பிரெஞ்சுக்காரருக்குப் பம்பாயின் அருகில் இருப்பிடம் ஒன்றுமில்லை. ஆங்கிலேயரைத் துரத்திவிட விரும்பின டியூப்ளேயைப்போன்ற பிரெஞ்சு தளகர்த்தரும் அங்கே இல்லை. பம்பாயைச் சுற்றிலுமுள்ள இடங்களெல்லாம் மகாராஷ்டிரர்களுக்குச் சொந்தமானவை. அவர்கள் ஆங்கிலேயர் வழிக்குப் போகவில்லை. ஆங்கிலேயர்களும் அவர்கள் வழிக்குப் போகவில்லை.

ஹேஸ்டிங்க்ஸ் வங்காள கவர்னரான 1772-ஆம் வருஷத்தில், நாலாம் பேஷ்வாவாகிய மாதுராவ் என்பவர் இறந்துபோனார். அவருக்குப் புருஷசந்ததி இல்லாமையால் அவருக்குப் பின் இன்னார் வருவதென்பதைப் பற்றி மிகுதியான விவாதம் உண்டாயிற்று. முதலில் அவர் தம்பியை நியமித்தார்கள்; ஆனால் அவர் சீக்கிரத்தில் கொல்லப்பட்டார். பிறகு அவர் சிறிய தகப்பனாரான இரகுபா என்ற ரகுநாதராவ் பேஷ்வா ஆனார். அவரை மற்ற மகாராஷ்டிரத் தலைவர்கள் எதிர்த்தார்கள். உடனே அவர் தம்மைக் காத்துக் கொள்ளும்பொருட்டுப் பம்பாய் ராஜாங்கத்தாரைத் தமக்கு உதவும்படி கேட்டுக்கொண்டார்.



நானாபிரணவேசன்.

அதன்மேல் பம்பாய்க் கவர்னர் 1775-ஆம் வருஷத்தில் சூரத்தில் அவரோடு ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு அவருக்கு உதவுவதாக ஒப்புக்கொண்டார். இரகுபாவும் தமக்கு உதவியாக வரும் ஆங்கிலேய சேனைக்குச் சம்பளம் கொடுப்பதன்றி, பம்பாய்க்கு அருகிலுள்ளனவும் இப்பொழுது பம்பாயைச் சேர்ந்துள்ளனவுமான ஸால்ஸேட், பஸ்ஸீன் என்னும் சிறு தீவுகளை ஆங்கிலேயருக்குக் கொடுத்துவிடுவதாக ஒப்புக்கொண்டார். அந்தத் தீவுகளை விலைக்குக் கொடுக்கும்படி ஆங்கிலேயர் முன்னிருந்த பேஷ்வாக்களைப் பலமுறை கேட்கவும் அதற்கு அவர்கள் சம்மதிக்கவில்லை.

புதிய சட்டத்தின்படி பம்பாய்த் துரைத்தனத்தார் இந்த உடன்படிக்கையைச் செய்வதற்கு இந்தியா கவர்ன்மெண்டாருடைய அனுமதியைப் பெற்றிருக்கவேண்டும்; ஆனால் அவர்கள் அப்படிச் செய்யாமல் இங்கிலாந்திலுள்ள கம்பெனியாருக்கு எழுதினார்கள். சிலகாலத்திற்குப் பிறகு கல்கத்தாவிலுள்ள இந்தியா கவர்ன்மெண்டார் இந்த உடன்படிக்கையைப் பற்றிக் கேள்வியுற்று, அதற்கு உத்தாவு கொடுக்க மறுத்து

விட்டார்கள். இவர்கள் இதற்குப்பதிலாக இரகுபாவினுடைய பகைவர்களோடு புரந்தரபுரம் என்னுமிடத்தில் 1776–ஆம் வருஷத்தில் ஓர் உடன்படிக்கை செய்தார்கள். அவர்களில் நாஞபிரணவேசர் என்னும் பிராமணர் முக்கியமானவர். இவரும் ஆங்கிலேயருக்கு ஸால்ஸெட்டைக் கொடுக்க உடன்பட்டார். இதற்குள் சூரத்து உடன்படிக்கையைப்பற்றிக் கேள்வியுற்ற ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் ஸால்ஸெட்டும் பஸ்ஸீனும் கிடைப்பதில் வெகு சந்தோஷமடைந்து அந்த உடன்படிக்கை சரிதானென்று அங்கிகரித்துவிட்டார்கள்.

இதனால் பம்பாய்க் கவர்ன்மெண்டாரும் இந்தியா கவர்ன்மெண்டாரும் இரகுபாவினுடன் முதலில் செய்த உடன்படிக்கையை நிறைவேற்றும்படி நேரிட்டது. இரகுபாவைப் புனுவுக்குக் கொண்டுபோவதற்காகப் பம்பாய்ச் சேனைகள் புறப்பட்டுப் போயின. ஆனால் சிந்தியாவின் கீழிருந்த பெருங்கூட்டமான மகாராஷ்டிரக் குதிரைவீரர்கள் இவற்றைத் திரும்பித் துரத்திவிட்டார்கள். கல்கத்தாவிலிருந்து ஹேஸ்டிங்க்ஸ் அனுப்பின காப்டன் பாபாம் என்னும் தைரியமுள்ள உத்தியோகஸ்தர் ஒருவர் சிந்தியாவின் முக்கிய நகரமாகிய குவாலியர் என்னும் பலமான கோட்டையைப் பிடித்துக்கொண்டார். இதற்குள் மகாராஷ்டிரர்களும் ஹைதரும் ஆங்கிலேயருக்கு விரோதமாக ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார்கள். ஹைதர் கர்நாடகத்துக்குள் பிரவேசித்தார்; ஆனால் 1782–ஆம் வருஷத்தில் அவர் இறந்துபோனர். நாஞபிரணவேசர் கீழ் இருந்த மகாராஷ்டிரத் தலைவர்கள் இதைக் கேட்டவுடனே 1782–ஆம் வருஷத்தில் சால்பையில் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார்கள். ஆதலால் ஆங்கிலேயரும் மகாராஷ்டிரர்களும் ஒருவருடைய பகைவருக்கு மற்றவர் உதவிசெய்யக்கூடாதென்று ஒப்புக்கொண்டார்கள். ஆங்கிலேயர்கள் ஸால்ஸெட்டையும் பஸ்ஸீனையும் வைத்துக்கொண்டு இரகுபாவுக்கு உபகாரச்சம்பளம் கொடுத்துவந்தார்கள்.

மைசூரில் நடந்த இரண்டாவது யுத்தம்

1780–1784.

ஹைதர் அலி மகாராஷ்டிரரோடு செய்த போரில் சென்னைக் கவர்ன்மெண்டார் தமக்கு உதவி செய்யாமையால் அவர்களி

டம் மிகவும் கோபங்கொண்டிருந்தார். அவர் தாமே போய் மகாராஷ்டிரரை எதிர்த்ததனால் சண்டை உண்டாயிற்றென்றும் அவரை யாராவது எதிர்த்தால்தான் தாங்கள் உதவிசெய்ய வேண்டுமென்றும் சென்னைக் கவர்ன்மெண்டார் சொல்லினர். இதுவும் அன்றி, பம்பாய் கவர்ன்மெண்டார் மகாராஷ்டிரர்களோடு ஒற்றுமையாய் இருந்தமையால் ஆங்கிலேயர்கள் அவர்களோடு சண்டை செய்ய முடியவில்லை.

பத்து வருஷகாலம் ஹைதர் ஆலி ஆங்கிலேயரோடு சமாதானமாய் இருந்தார். அதற்குள் அவருடைய பலம் வரவர அதிகரித்தது; மைசூரிலும் மலையாளத்திலும் கன்னடத்திலும் இருந்த ஜமீன்தார்களையும் அரசர்களையும் அவர் வென்றுவிட்டார். ஐரோப்பியரால் பழக்கப்பட்ட ஒரு பெருஞ் சேனையும் நூறு பீரங்கிகளும், நானூறு பிரெஞ்சுக்காரர்கள் கூடிய ஒரு சிறுபடையும் அவரிடம் இருந்தன.

1778–ஆம் வருஷத்தில் ஐரோப்பாவிலே பிரெஞ்சுக்காரருக்கும் ஆங்கிலேயருக்கும் மறுபடியும் சண்டை உண்டாயிற்று. புதுச்சேரியை ஆங்கிலேயர்கள் மறுபடியும் கைப்பற்றிக்கொண்டார்கள். மேற்குச் சமுத்திரக் கரையிலுள்ள பிரெஞ்சு துறைமுகமாகிய மாகியைப் பிடித்துக்கொள்வதற்காக, கரைவழியாகவும் கடல்வழியாகவும் ஆங்கிலேயர்கள் தங்கள் சேனைகளை அனுப்பினார்கள். மாகி மலையாளத்தில் உள்ளது. மலையாளம் ஹைதருக்குச் சொந்தமானதால் அவருக்கு அந்தத் துறைமுகத்தின் வழியாய் ஐரோப்பாவிலிருந்து சாமான்கள் வருவது வழக்கம். ஆங்கிலேயர்கள் மாகியைக் கைக்கொண்டால், கர்நாடகத்தைத் தாம் நாசமாக்கிவிடுவதாய் ஹைதர் சொன்னார். ஆங்கிலேயர்களும் மாகியைக் கைக்கொண்டார்கள். தாம் பயமுறுத்தினபடியே ஹைதரும் செய்து முடித்தார்.

அப்பொழுது மகாராஷ்டிரரோடு ஆங்கிலேயர்கள் சண்டை செய்துகொண்டிருந்த விஷயம் ஹைதருக்குத் தெரியும். அவர் சென்னையை எளிதில் வென்றுவிடலாம் என்று நினைத்தார். ஆங்கிலேயரைத் தென்னிந்தியாவிலிருந்து துரத்திவிடுவதற்கு உதவிசெய்யும்படி அவர் நைஸாமுக்கும் மகாராஷ்டிரர்களுக்கும் அந்தரங்கமாய்க் கடிதம் எழுதினார். அதன்பின்ப

1780-ஆம் வருஷத்தில் அவர் லக்ஷம் வீரர்களுடன் கர்நாடகத்தில் வேகமாய்ப் பிரவேசித்து, கிருஷ்ணா நதிமுதல் காவேரியாறு வரையில் உள்ள நாட்டையெல்லாம் வென்றுவிட்டார். கிராமங்களை எரித்துப் பயிர்களை நாசமாக்கினார்; ஆடுமாடுகளைத் துரத்திவிட்டார்; மனிதர்களைக் கொன்றார்; பெண்பாலாரையும் குழந்தைகளையும் சிறைப்படுத்திக் கொண்டுபோனார். அவர் அவ்வளவு கொடுமையாய்ப் படையெடுத்து அழித்ததனால் அப்பொழுது ஒரு பெரும் பஞ்சம் உண்டாயிற்று. அதுமுதல் ஐம்பது வருஷகாலம்வரையில் ஜனங்கள் ஹைதரைப்பற்றிய கதைகளைச் சொல்லிவருவது உண்டு.

சென்னை மிகவும் அபாயமான நிலையில் இருந்ததை வாரன் ஹேஸ்டிங்க்ஸ் தெரிந்துகொண்டார். ஹைதர் தாம் நைஸாமுக்கு நண்பர் என்று சொல்லிக்கொண்டபோதிலும் அவருடைய தேசத்தைத் தாம் அடையும்படி மொகலாய சக்கரவர்த்தியினிடமிருந்து ரகசியமாக உத்தரவு பெற்றிருந்தாரென்று ஹேஸ்டிங்க்ஸ் கண்டுகொண்டார். அவர் அதை நைஸாமுக்கு அறிவிக்க அவர் உடனே ஹைதரிடத்திலிருந்து பிரிந்துவிட்டார்.

சென்னைக்கவர்னர் போர்செய்வதற்கு ஆயத்தமாய் இல்லை; ஆங்கிலேய போர்வீரர்கள் சிறுசிறு கூட்டங்களாய் நாடெங்கும் பாவியிருந்தார்கள். சென்னைக்கு வந்து உதவுவதற்காக வட ஸர்க்காரிலிருந்து வந்துகொண்டிருந்த கர்னல் பேயிலியினிடமிருந்த சேனையைப் போலிலூர் என்ற இடத்தில் ஹைதர் ஒரு பெருஞ் சேனையோடு திடீரென வந்து எதிர்த்தார். கர்னல் பெயிலி கிளைவைப்போல் தைரியமும் சுறுசுறுப்பும் உடையவரல்லர்; வயதுசென்றவர். அவர் தம்முடைய வீரர்கள் அவ்வளவு பெரிய சேனையோடு சண்டைசெய்ய முடியாதென்று நினைத்தார். அந்த வீரர்கள் சண்டைசெய்வதில் ஆவல் உள்ளவர்களாகவே இருந்தனர். ஆயினும் ஹைதர் அவர்களைக் கொல்வதில்லை என்று சொன்ன வார்த்தையை நம்பி, அவர்களை ஆயுதம் எடுக்கவேண்டாமென்று பெயிலி உத்தரவுசெய்தார். விசுவாசம் அற்றவரான ஹைதர் சொன்னபடி செய்யவில்லை. சிறைப்பட்டவர்களில் அநேகரை இரக்கமில்லாமல் கொன்றுவிட்டார். சிலரை மைசூரில் சிறையில் வைக்கும்படி அனுப்பினார். கர்னல் பிரேய்த்வேயிட் என்

பவரிடம் இருந்த ஒரு சிறு சேனைக்கும் அதேவிதமான ஆபத்து நேரிட்டது.

ஆனால் வந்தவாசியில் வெற்றிபெற்றவரான சர் அயர்கூட் வேறு சில சேனைகளோடு வங்காளத்திலிருந்து வந்துகொண்டிருந்தார். 1781–ஆம் வருஷத்தில் அவர் பறங்கிப்பேட்டையில் ஹைதருடைய சேனை முழுவதையும் எதிர்த்து வெற்றிபெற்றதன்றி போலிஹூரிலும், சோளிங்கபுரத்திலும், ஆரணியிலும், ஹைதருடைய சேனை முழுவதையும் அடித்துத் தொலைத்தார்.

அப்பால் கொஞ்சகாலத்தில் ஹைதர் அலி இறந்துபோகவே 1784–ஆம் வருஷத்தில் ஆங்கிலேயர் மங்களூரில் அவர் குமாரர் திப்புவோடு சமாதானம் செய்துகொண்டார்கள். இருதிறத்தாரும் தாங்கள் வென்ற நாட்டையும் ஊரையும் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள். மைசூரில் சிறையிலிருந்தவர்கள் விடுதலையடைந்தார்கள்.

## மேல்விசாரணை சபை.

### 1784.

மைசூரில் நடந்த சண்டையிலும் மகாராஷ்டிரரோடு செய்த சண்டையிலும் ஏராளமான பணம் செலவாயிற்று. ஹேஸ்டிங்க்ஸ் அந்தப் பணத்தை எங்கிருந்தாவது ஈடுசெய்வது அவசியமாய் இருந்தது. ஹைதரோடு செய்த சண்டை கர்நாடகத்தைக் காப்பதற்காகச் செய்ததாயினும், கர்நாடக நவாபான மகம்மது ஆலியினிடம் அப்போது பணம் ஒன்றும் இல்லை. ஏனென்றால் அவரது நாடு முழுவதும் பாழாகிப் பஞ்சம் அதிகமாக இருந்தமையால் ஏழை ஜனங்கள் ஒரு வரியும் கொடுக்க முடியவில்லை.

சென்னையில் பணம் ஒன்றும் கிடையாமையால் ஷுஜா தௌலாவின் குமாரரான அயோத்தி நவாபைக் கம்பெனியாருக்குச் சேரவேண்டிய தொகையைக் கொடுத்துவிடும்படி ஹேஸ்டிங்க்ஸ் கேட்டார். நவாபு தம் தகப்பனார் வைத்துவிட்டுப்போன பணத்தையெல்லாம் அயோத்திபீகம்மார்களான தம் தாயாரும் பாட்டியாரும் எடுத்துக்கொண்டார்களென்றும் அந்தப்பணத்தை அவர்களிடமிருந்து பெற்றுக்கொள்ள அநுமதி தரவேண்டுமென்றும் கேட்டார். அவ்வாறே அநு

மதி கொடுக்கப்பட்டது. பேகம்மாரை அந்தப் பணத்தைக் கொடுக்கச்செய்யும்பொருட்டு அவர்களையும் அவர்களுடைய வேலைக்காரர்களையும் நவாபு மிகவும் கொடுமையாய் நடத்தி அவர்களிடமிருந்து கோடிரூபாய் வாங்கி ஆங்கிலேயருக்குக் கொடுத்தார்.

ஹேஸ்டிங்க்ஸ் இதன்பின்பு காசிமன்னரான **சேயித் ஸிங்கைக்** கம்பெனியாருக்குக் கொஞ்சம் பணம் உதவும்படி கேட்டார். இவர் ஆங்கிலேயருடைய உதவியால் சிம்மாசனத்தில் ஏறியவர். அவர்களுக்கு இவர் கப்பம் செலுத்திக்கொண்டுவந்தார். யுத்தகாலத்தில் அவர்களுக்கு உதவி செய்வதும் இவர் கடமையாகும். அவர்களுக்குப் பகைவாகிய மகாராஷ்டிரர்கள் இவருக்கும் பகைவர்களே. ஆங்கிலேய சேனையின் உதவி இவருக்கு இல்லையாயின் அவர்கள் இவர் தேசத்தைக் கைக்கொண்டிருப்பார்கள்; அல்லாமலும், தங்களுக்குச் சௌத்வரி கொடுக்கும்படிக்கும் இவரை நிர்ப்பந்தித்திருப்பார்கள். இந்த அரசரிடம் மிகுந்த செல்வமிருந்தும் ஹேஸ்டிங்க்ஸ் கேட்டபடி பணங்கொடுக்க இவருக்கு விருப்பம் இல்லை. இவரைப் பணங்கொடுக்கும்படி செய்வதற்காக ஹேஸ்டிங்க்ஸ் காசிக்குப் போனார். அங்கே இவரும் இவர் குடிகளும் கலகம் செய்தார்கள். ஹேஸ்டிங்க்ஸைக் கொலைசெய்வதென்றே துணிந்துவிட்டார்கள். அதனால் செயித்ஸிங்கை ராஜ்யாதிகாரத்தினின்றும் நீக்கி அவர் சகோதரரின் குமாரரை அரசராக்கினார்கள். அதுமுதல் காசி அரசர்கள் செலுத்தவேண்டிய கப்பம் இரண்டுபங்கு அதிகமாயிற்று.

பிரான்ஸிஸ் இங்கிலாந்துக்குப் போய் வாரன் ஹேஸ்டிங்க்ஸினுடைய செய்கைகளைப்பற்றி ஈஸ்ட் இந்தியா கம்பெனியாரிடம் முறையிட்டார். கம்பெனியாருடைய விசாரணைத் தலைவர்கள் பிரான்ஸிஸ் சொன்னது உண்மைதான் என்று நினைத்தார்கள். ஆதலால் அவர்கள் கவர்னர்ஜனரலை மிகவும் குறைகூறினார்கள். உடனே ஹேஸ்டிங்க்ஸ் தமது வேலையை விட்டுவிட்டு இங்கிலாந்துக்குப் போனார். அங்கேயுள்ள மகாமந்திரசபையார் அவரை விசாரணை செய்தார்கள். அந்த விசாரணை ஏழுவருஷம் நடந்தது. கடைசியில் வாரன் ஹேஸ்டிங்க்ஸ் ஒரு குற்றமும் செய்யவில்லையென்று முடிவு செய்தார்கள்.

இதனிடையில் இங்கிலாந்தின் முதல் மந்திரியான பிட் என்பவர் 'இந்தியா பில்' என்னும் ஒரு புதிய சட்டத்தை ஏற்படுத்தினர்.

இதனால் மேல்விசாரணை சபை ஒன்று ஏற்பட்டது. இதில் ஆறு அங்கத்தினர் சேர்ந்திருந்தார்கள். இந்தியா கவர்ன் மெண்டாரை மேல்விசாரணை செய்வது இவர்கள் வேலை. இவர்கள் மகா மந்திரசபையாருடைய உத்தரவின்றி இந்திய அரசர் எவரோடும் சமாதானமாவது சண்டையாவது செய்யக்கூடாது. 1784—ஆம் வருஷம் முதல் பிரிட்டிஷ் இந்தியாவை உண்மையில் ஆண்டுவந்தவர்கள் இந்த மேல்விசாரணை சங்கத்தாரேயன்றி, ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் அல்லர்.



## 45. லார்ட் கார்ன்வாலிஸ், இரண்டாம் கவர்னர்ஜனரல்.

1786-1793.

**வா**ரன் ஹேஸ்டிங்ஸுக்குப்பிறகு வந்த கவர்னர்ஜனரல் லார்ட் கார்ன்வாலிஸ் என்பவர். அவர் இங்கிலாந்தில் மிக்க புகழ்பெற்றவர். இந்தியாவுக்கு அவர் வந்தவுடன், உத்தியோக விஷயங்களில் சில மாறுதல்கள் செய்தார். கம்பெனியாரிடம் வேலை பார்த்தவர்களுடைய சம்பளத்தை அதிகமாக்கி அவர்கள் லஞ்சம் வாங்க இடமில்லாமற் செய்தார். வாரன் ஹேஸ்டிங்ஸ் காலத்தில் ஜில்லா கலெக்டர்கள் நியாய விசாரணைவேலையையும் கவனித்து வந்தார்கள். லார்ட் கார்ன்வாலிஸ் அதை எடுத்துவிட்டு



கார்ன்வாலிஸ் பிரபு.

வரிவாங்கும் வேலைமட்டும் அவர்களுக்குக் கொடுத்து

ஒவ்வொருஜில்லாவுக்கும் ஒவ்வொரு நீதிபதியை ஏற்படுத் தினர்.

இந்தியாவில் யுத்தமே செய்யக்கூடாதென்று அவர் தீர் மானஞ் செய்துகொண்டார்; ஆனாலும் அவர் வந்த சிலகாலத் துக்குப்பிறகு மைசூர் திப்புசுல்தானோடு போர்புரியவேண்டி யது அவசியமாயிற்று.

எட்டுவருஷ காலமாய் அரசாண்டு வந்தவரான திப்பு, மலையாளத்தையும், குடகையும், மைசூரைச் சுற்றியுள்ள




வேறு சில நாடுகளையும் வென்றிருந்தார். அவர் மிக்க கர் வங்கொண்டு இந்தியாவில் தாமொருவரே மகா பராக்கிரமசா லியென்று நினைத்துக்கொண்டார். ஔரங்கசீபைப்போல், தாம் ஜயித்த ஜனங்களையெல்லாம் மகம்மதியாகும்படி நிர்ப்

பந்தப்படுத்தினர்; அதற்கு உடன்படாத அநேகர்களை கொன்றுவிட்டார். திப்புவுக்கு ஆங்கிலேயரிடத்தில் அதிக வெறுப்பு உண்டு; அவர்களை என்றைக்காவது தேசத்தை விட்டுத் துரத்திவிடவேண்டுமென்று வெளிப்படையில் சபதஞ்செய்திருந்தார்.

கடைசியில் திப்பு திருவாங்கூரை எதிர்த்தார். அந்த நாட்டின் அரசர் ஆங்கிலேயருக்கு நண்பரும் துணைவரும் ஆனவர். ஆதலால் அவர் தம்மைக் காக்கும்படி அவர்களை வேண்டினர். கவர்னர்ஜனரல் அவருக்கு உதவிசெய்வதாக உறுதிமொழி கூறி, நைஸாமுக்கும் மகாராஷ்டிரர்களுக்கும் கடிதம் எழுதி, தங்கள் எல்லாருக்கும் பொது விரோதியான திப்புவோடு போர்செய்யத் தம்முடன் சேர விருப்பந்தானோ என்று கேட்டார். திப்புவுக்கு நாளுக்குநாள் பலம் அதிகரித்துவந்த சங்கதியை நெடுநாளாக அறிந்தவர்களாகையால், திப்பு திருவாங்கூரைக் கைக்கொண்டபின்பு தங்களையும் ஒவ்வொருவராய் எதிர்ப்பாரென்று அவர்கள் பயந்தார்கள். ஆதலால் அவர்கள் மகிழ்ச்சியுடன் ஆங்கிலேயர்பக்கம் சேர்ந்துகொண்டார்கள். அதற்கு அப்பால் திருவாங்கூர் அரசரைச் சும்மா விட்டுவிடும்படி திப்புவுக்குச் சொன்னார்கள். திப்பு அவ்விதம் செய்யாமையால் சண்டை உண்டாயிற்று. இது ஆங்கிலேயர் மைசூரில் செய்த மூன்றாவது யுத்தமாகும்.

ஹைதர் பத்து வருஷங்களுக்குமுன் செய்ததுபோல், திப்புவும் அப்பொழுது கர்நாடகத்தையெல்லாம் அழித்தார். ஆங்கிலேய சேனைக்குத் தளகர்த்தராக லார்ட் கார்ன்வாலிஸ் தாமே நேரில் கல்கத்தாவிலிருந்து சென்னைக்கு வந்து மைசூருக்குப் போய் பங்களூரைப் பிடித்துக்கொண்டார். நைஸாமும் மகாராஷ்டிரரும் அனுப்பின சேனைகள் சிறிதும் பயன்படவில்லை. அந்தச் சேனைவீரர்கள் சண்டை செய்யவே இல்லை; ஆனால் கொள்ளை யடிப்பதற்குமட்டும் முற்பட்டு ஓடினர்கள். ஆகையால், உண்மையில் கஷ்டமான வேலைகளை ஆங்கிலேயரே செய்யவேண்டியதாயிற்று.

பங்களூருக்கு அருகில் உள்ள பலமான கோட்டைகள் பலவற்றை லார்ட் கார்ன்வாலிஸ் பிடித்துக்கொண்டார். அப்பால் மெல்ல மெல்ல ஸ்ரீரங்கபட்டணம் போய்ச் சேர்ந்தார்.

திப்புவின் சேனைகளெல்லாம் தோற்றுப்போய் ஊருக்குள்ளே ஓடி ஒளித்துக்கொண்டன. ஆங்கிலேயருடைய பீரங்கிக் குண்டுகள் சுவர்களின்மேல் பாய்ந்தன. கோட்டை சீக்கிரத்தில் பிடிபட்டுப்போம் என்று திப்புவுக்குத் தெரிந்தது. ஆதலால் அவர் எப்படிப்பட்ட நிபந்தனைகளுக்கும் உட்பட்டுச் சமாதானத்துக்கு வருவதாகத் தெரிவித்துக்கொண்டார்.

அதன்பின்பு திப்புவும், ஆங்கிலேயர்களும், மகாராஷ்டிரர்களும் நைஸாமும் சேர்ந்து ஸ்ரீரங்கபட்டணத்தில் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டார்கள். அதன்படி திப்பு தம் தேசத்தில் பாதியைக் கொடுக்கவும் போர்ச்செலவை ஒத்துக்கொள்ளவும் வேண்டியதாயிற்று. போர்ச்செலவில் பாதியை மட்டும் சில காலத்துக்குப்பிறகு கொடுக்கலாம் என்றும் ஆனால் அதுவரையில் அவருடைய மக்கள் இருவர் ஆங்கிலேயருடைய வசத்தில் இருக்கவேண்டும் என்றும் முடிவு செய்தார்கள்.



திப்பு.

திப்பு கொடுத்த நாட்டில் நைஸாமுக்கும் மகாராஷ்டிரர்களுக்கும் உண்மையில் பாகம் பெறுதற்குத் தகுதி இல்லாவிட்டாலும், அவர்களும் ஆங்கிலேயரும் அதைச் சரியாய்ப் பங்கிட்டுக்கொண்டார்கள். ஆங்கிலேயர் பெற்ற பாகங்கள் மேற்குக் கடற்கரையில் உள்ள மலையாள நாடும், கர்நாடகத்திலே இப்பொழுது சேலம் என்றும் மதுரை என்றும் சொல்லப்படும் ஜில்லாக்களுமாம்.

வங்காளத்தில் நிலவரி இன்னபடி தரல்வேண்டு மென்று லார்ட் கார்ன்வாலிஸ் ஏற்பாடு செய்தார். பழையகாலத்தில் வரி கொடுத்துவந்த விதத்தில் அதுவரையில் வேறுபாடு ஒன்றும் செய்யவில்லை. மொகலாயர்காலத்தில் ஜமீன்தாரர்கள் என்பவர்களிடம் நிலங்கள் வாடகைக்கு விடப்பட்டிருந்தன.

இவ்வளவென்று ஏற்பட்ட தொகை ஒன்றை அவர்கள் நவா புக்குக் கொடுத்துவந்தார்கள். அவர்கள் இந்தவிதம் வரி வாங்குவதற்குச் சம்பளமாக ஜனங்களைத் தங்களுக்கு வேண்டியவளவு கொடுக்கும்படி நிர்ப்பந்தம் செய்வதற்கு இடம் இருந்தது. நிலம் சக்கரவர்த்திக்குச் சொந்தம்; ஜமீன்தார்கள் சக்கரவர்த்தியின் சம்பளச் சேவகர்களே; ஆனால் அவர்களுக்கு மரணதண்டனை விதிக்கவும் அதிகாரம் இருந்தது. தாங்கள் கேட்டபடி கொடாதவன் யாராயிருந்தாலும் அவன் கொல்லப்படுவான். அவர்கள் ஜனங்களை அடிமைகள் போல மிகவும் கொடுமையாக நடத்தினர். அதிகத் தொகை கொடுக்கும்படி நிர்ப்பந்தப்படுத்தி வந்தமையால் கிராமவாசிகள் மிகவும் துன்புறலாயினர். பல பக்கங்களிலுமிருந்து ஆங்கிலேய துரைத்தனத்தாரிடம் ஜனங்கள் முறையிட்டுக் கொண்டார்கள்.

இவ்வாறு ஜனங்கள் குறைசொல்லா திருக்கும்பொருட்டும், எல்லாத் துன்பங்களும் நீங்கும்பொருட்டும், ஜமீன்தாரர் ஒவ்வொருவரும் வரி வாங்கிவந்த நாட்டை லார்ட் கார்ன்வாலிஸ் அவருக்கென்றே கொடுத்துவிட்டார். ஆதலால் அது அவர் நிலமாயிற்று. அவ்விதம் செய்கையில் அவர் துரைத்தனத்தாருக்கு எக்காலத்தும் கொடுக்கவேண்டியது இவ்வளவென்று ஒரு வரையறையும் செய்தார். லார்ட்கார்ன்வாலிஸ் இப்பொழுது இங்கிலாந்திலுள்ள கனவான்களைப் போல ஜமீன்தாரர்கள் என்னும் ஒருவகைப் பிரபுக்களை இந்தியாவில் இவ்விதமாக உண்டாக்கினர். இவர்கள் தங்கள் நிலங்களை விலைகொடுத்து வாங்கவும் இல்லை; வென்று கொள்ளவும் இல்லை. அவை ஆங்கிலேய துரைத்தனத்தாரிடமிருந்து அவர்களுக்கு நன்கொடையாகக் கிடைத்தன. இந்தியாவில் அதற்கு முன்னிருந்த இந்து அதிகாரிகளும் மகம்மதிய அதிகாரிகளும் இவ்வளவு அன்பாய் இருந்ததில்லை.

அன்றி லார்ட் கார்ன்வாலிஸ் ஒவ்வொரு ஜில்லாவிலும் வழக்குத் தீர்க்கும்படி ஒரு நியாயாதிபதியையும், தீர்வைகளை வாங்க ஒரு கலெக்டரையும் நியமித்தாரென்று முன்னமே சொன்னோம்.

# 46. ஸர் ஜான் ஷோர்
## மூன்றும் கவர்னர்ஜனரல்.
### 1793—1798.

மூன்றும் கவர்னர்ஜனரலான ஸர் ஜான் ஷோர் என்பவர் கல்கத்தாவிலே கம்பெனியாரிடம் வேலையில் இருந்த ஓர் உத்தியோகஸ்தர். அவர் ஐந்து வருஷம் கவர்னர்ஜனரலாய் இருந்தார். அவர் காலத்தில் ஆங்கிலேயர் சண்டை ஒன்றும் செய்யவில்லை. பிரிட்டிஷ் இந்தியாவின் அரசாட்சியிலும் பெரிய மாறுபாடு ஒன்றும் உண்டாகவில்லை. 1773–ஆம் வருஷத்தில் மகா மந்திராலோசனை சபையார் ஏற்படுத்திய ரெகுலேடிங்க் சட்டப்படி 1793–ஆம் வருஷத்தில் கம்பெனியாரின் விஷயங்கள் நன்ருக விசாரிக்கப்பெற்றதோடு அவர்களுடைய அதிகார பத்திரத்தில் சில புதிய மாறுதல்கள் செய்யப்பட்டன.

சுதேச அரசர்கள் காரியங்களில் கவர்னர்ஜனரல் பிரவேசிக்கவே கூடாதென்று ஆங்கிலேய துரைத்தனத்தார் கண்டிப்பான உத்தரவுகள் அனுப்பியிருந்தனர். இந்தியாவில் எல்லா இடங்களிலும் சமாதானம் உண்டாகும் பொருட்டு, அப்பொழுது இருந்த அதிகாரிகளில் ஒருவரும் புதிதாய் அதிக பலம் அடையாமலும், உள்ள பலத்தில் குறையாமலும் ஒரேமாதிரியாகவே இருக்கவேண்டும் என்பது தங்கள் விருப்பம் என்று அவர்கள் சொன்ஞர்கள்.

ஆனல், நைஸாமுக்கும் மகாராஷ்டிரர்களுக்கும் திப்புவுக்கும் சமாதானமாயிருக்க விருப்பம் இல்லை. திப்பு தாம் இழந்த அதிகாரத்தை மீளவும் பெற விரும்பினர். மகாராஷ்டிரர்கள் திப்புவினிடமிருந்தும் நைஸாமினிடமிருந்தும் பின்னும் இந்தியாவிலுள்ள ஒவ்வொருவரிடமிருந்தும் சௌத்வரியை வாங்க விரும்பினர்கள். நைஸாம் மகாராஷ்டிரர்களை எதிர்க்கத் தமக்கு உதவிசெய்யும்படி ஆங்கிலேயரைக் கேட்டுக்கொண்டார்.

ஆங்கிலேயர்கள் நைஸாமுக்கு உதவிசெய்யமாட்டார்களென்று மகாராஷ்டிரர்களுக்குத் தெரிந்தவுடனே, தங்களுக்கு

நெடுநாளாய்க் கொடாமலிருந்த சௌத்வரியைக் கொடுக்கும்படி நைஸாமைக் கேட்டார்கள். நைஸாமிடத்தில் பணம் இல்லாமையால் அவர் அவர்களுக்கு அந்த வரியைக் கொடுக்க முடியவில்லை. அவர்களுடன் போர் செய்யவும் அவருக்குச் சக்தியில்லை. ஆதலால் அவர் அதைப்பற்றிக் கவர்னர்ஜனரலுக்கு எழுதினார். ஸர் ஜான் ஷோர் தம்மால் உதவிசெய்ய முடியாதென்று பதில் அனுப்பிவிட்டார்.

பிறகு பேஷ்வாவானவர் நைஸாமை எதிர்ப்பதாகவும் தாம் எண்ணிய பெரு முயற்சியில் தம்முடன் சேரும்படிக்கும் மற்ற மகாராஷ்டிரத் தலைவர்களுக்குத் தெரிவித்தார். அவர்களெல்லாரும் குவாலியர், இந்தூர், கூர்ஜாம், பீரார் ஆகிய இடங்களிலிருந்து தங்கள் தங்கள் சேனைகளுடன் வந்து சேர்ந்தார்கள். இவ்வாறாக ஒரு பெருஞ்சேனை ஒருங்கு சேர்ந்து முழு வலியோடும் நைஸாமை எதிர்த்தது. 1795-ஆம் வருஷத்தில் குருத்தலம் என்ற இடத்தில் ஒரு பெரும் போர் நடந்தது. அதில் நைஸாம் தோற்றுப்போனார். அவர் தமது தேசத்தில் பாதியை மகாராஷ்டிருக்குக் கொடுக்கவும் மற்றப்பாதிக்காக அவர்களுக்கு எப்போதும் சௌத் வரியைக் கொடுப்பதாக வாக்குறுதி செய்யவும் அவசியம் ஆயிற்று.

ஆனால், இந்தக் கொள்ளையில் தத்தமக்குச் சேரவேண்டிய பங்கைக் குறித்து மகாராஷ்டிரத் தலைவர்கள் ஒருவரோடொருவர் சண்டையிட்டுக்கொண்டார்கள். அதுமுதல் இரண்டு மூன்று வருஷ காலம் வரையில் பேஷ்வாவும் ஸிந்தியாவும் ஹோல்காரும் கெய்க்வாரும் பான்ஸ்லேயும் முக்கியமாய் யுத்தம் செய்துகொண்டிருந்தார்கள்.

## 47. மார்க்விஸ் ஆவ்வெல்லெஸ்லி

### நாலாம் கவர்னர்ஜனரல்.

1798—1805.

1798-ஆம் வருஷம் வந்த கவர்னர் ஜனரலான மார்க்விஸ் ஆவ்வெல்லெஸ்லி என்பவர் ஆங்கிலேயரை இந்தியாவிலுள்ள அதிகாரிகள் எல்லாரிலும் மிக்க வலிமையுள்ளவர் ஆக்கினார். அவரோடு அவர் தம்பியான கர்னல் வெல்லெஸ்லியும்

வந்தார்; இவர் யுத்தவீரர். அப்பால் ஸர் ஆர்தர் வெல்லெஸ்லி என்ற பெயரோடு ட்யூக் ஆவ் வெல்லிங்க்டனாகவும் இங்கிலாந்தின் பிரதான மந்திரியாகவும் விளங்கினவர் இவரே.

வெல்லெஸ்லி பிரபு வர்த்தகர் அல்லர். அவர் வர்த்தகத்தையாவது அதில் வரும் லாபத்தையாவது கொஞ்சமும் கவனிக்கவில்லை. அவர் உயர்ந்த பதவியிலிருந்த கனவான். கம்பெனியாருடைய நன்மையையே முக்கியமாகக்கொள்ளாமல், தேசத்தாருடைய நன்மையையும் பெரிதாகக்கருதினார்.



மார்க்விஸ் வெல்லெஸ்லி.

ஒரு குடும்பத்திலுள்ள சிறுவர்கள் எல்லாரும் அக்குடும்பத் தலைவனான தந்தைக்குக் கீழ்ப்படிந்து நடக்கிறார்கள். தந்தையும் அவர்களை நியாயமான காரியத்தையே செய்யும்படி சொல்லுகிறான். எந்தக் குழந்தையாவது தவறான காரியம் செய்தால் அவன் அந்தக் குழந்தையைத் தண்டிக்கிறான். அவன் தன் மக்களைப்பற்றிக் கவலை எடுத்துக்கொண்டு, அவர்களுக்குத் தீங்குவாராமல் பாதுகாத்து, செய்யத் தகுவது இன்னது செய்யத்தகாதது இன்னது என்பதையும் அவர்களுக்குச் சொல்லுகிறான்.

இதே விதமாக, நல்ல ராஜ்யத்திலும், ஜனங்கள் அரசருக்குக் கீழ்ப்படிவார்கள். அவ்வரசர் ஜனங்களுக்குத் தீங்குவாராமல் பாதுகாப்பார்; தவறு செய்பவரைத் தண்டிப்பார்; பலமில்லாதவரைப் பாதுகாப்பார். அதனால் அவருடைய குடிகள் அபாயம் இல்லாமல் அமைதியாய் வசிப்பார்கள்.

இந்தியாவைப் போன்ற பெரிய தேசங்களிலெல்லாம் குடிகள் சமாதானமாயும் க்ஷேமமாயும் இருக்கவேண்டுமானால், எல்லாரையும் அடக்கியாளத்தக்க திறமையும், யோக்கியதையும், நடுவு நிலைமையும்வாய்ந்த அதிகாரி அல்லது ராஜாதி ராஜன் ஒருவன் இருத்தல் வேண்டும். அவன் மற்ற

அரசர்களைத் தன் சொற்படிகேட்கும்படி செய்யவும், கொள் ளையடிப்பவர்களையும் திருடர்களையும் அடக்கி, எங்கும் கல கம் இல்லாமல் இருக்கும்படி செய்யவும் வல்லவனாக இருத் தல் வேண்டும். பஞ்சம் வந்துவிட்டால் ஏழைகளுக்கு உதவி செய்ய அதிக ஐசுவரியமும், தயாளமும், நற்குணமும் அவ னிடம் பொருந்தியிருக்கவேண்டும்.

இந்தியா முழுவதையும் ஆளவேண்டு மென்ற எண்ணம், ஆங்கிலேயருக்குவெல்லெஸ்லி காலம்வரையில் உதிக்கவில்லை. அவர்கள் இந்தியாவில் சில நாடுகளைக் கைக்கொண்டிருந்தார் கள். ஆனால் இவ்விதமாக அவர்களுக்கு நாடுகள் கிடைத்த பொழுதெல்லாம், அவை கிடைத்தற்குக் காரணமான சண் டைகள் அவர்கள் மனத்துக்கு விரோதமாய் நடந்தவைகளே. அவர்களைச் சிலர் எதிர்த்ததனால் அவர்கள் தங்களைப் பாது காத்துக்கொள்வது அவசியமாக இருந்தது. ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் தாங்கள் இந்தியாவில் செய்துவந்த வர்த்தகத் தால் லாபமடையவேண்டு மென்று நினைத்தார்களேயொழிய நிலம் சம்பாதிக்கவேண்டு மென்று அவர்கள் விரும்ப வில்லை. கிளைவுக்கும், ஹேஸ்டிங்க்ஸுக்கும், கார்ன்வாலி ஸுக்கும், மற்றுமுள்ள தங்கள் தேசாதிபதிகளுக்கும் சுதேச அரசர் ஒருவரோடும் எந்தக்காரணம்பற்றியும் சண்டையிடக் கூடாதென்றும், சுதேச நாடுகளுள் ஒன்றையும் கைக்கொள் ளல் ஆகாதென்றும் அடிக்கடி அவர்கள் கண்டிப்பான உத்த ரவு அனுப்பிவந்தார்கள்.

ஆனால், இந்தியாவில் அக்காலத்தில் அரசாட்சி புரிந்து வந்தவர்கள் எல்லாரிலும் பலமும், விவேகமும், நாகரிகமும், உடையவர்கள் ஆங்கிலேயர்கள்; ஆகையால், இந்தியாவில் அங் கங்கே நடந்துகொண்டிருந்த சண்டையையும் கொள்ளையை யும் கொலையையும் நிறுத்தி, தேசத்தின் ஒவ்வொரு பாகமும் விரைவில் அடைந்துவந்த கேடுகளை நீக்கி, நாட்டைக் காப் பாற்றும்படியான அவசியம் அவர்களுக்குவந்துவிட்டதென்று வெல்லெஸ்லி பிரபு கண்டார். அதனால் அவர் முதலில் மற்றப் பெரிய அதிகாரிகளையெல்லாம் தம் உத்தரவுகளுக்குக் கீழ்ப் படிந்து நடக்கவும் அதுமுதல் சண்டை போடாமல் தங்கள் தேசங்களை அமைதியாய் ஆள்வதாக வாக்குறுதிசெய்யவும் சொல்லி, அவற்றிற்கு இணங்காதவர்களையெல்லாம் இணங்

கும்படிக்கும் திர்ப்பந்தப்படுத்தினர். இந்தியாமுழுவதையும் சண்டையின்றி அமைதியாய் வைத்திருப்பதற்கு நிலையான ஒரு பெருஞ்சேனையை ஏற்படுத்தி, அதன் போஷணைக்காக ஒவ்வொரு தேசத்தாரையும் தம் செலவில் ஒவ்வொரு பாகத்தை ஒப்புக்கொள்ளும்படிசெய்தார். அப்படி ஒவ்வொருபாகம் தருவதனால் அவ்வத்தேசத்தாருக்கு உண்டான நன்மையாவது அவர்களுடைய விரோதிகளை ஆங்கிலேயர் தூரத்திவிடுவதே.

பேஷ்வா, ஸிந்தியா, ஹோல்கார், கெய்க்வார், பான்ஸ்லே என்னும் தலைவர்கள் இவருக்குக் கீழிருந்த மகாராஷ்டிரர்களும், நைஸாமும், திப்பு சுல்தானும் ஆகிய இவர்களே அந்தக் காலத்திலிருந்த பெரிய அதிகாரிகள். ஸீக் ஜாதியார் கொஞ்சம் கொஞ்சமாய்ப் பலமடைந்து வந்தார்கள். ஆனல் அவர்கள் தங்கள் தேசமாகிய பஞ்சாபை விட்டு வெளிப்படவில்லை. மொகலாய சக்கிரவர்த்தியாகிய ஷா ஆலம் அப்பொழுது ஸிந்தியாவினிடம் சிறைப்பட்டிருந்த விருத்தாப்பியர். அயோத்தி நவாபும் பலம் ஒடுங்கியிருந்தார்

அதே காலத்தில் ஐரோப்பாவிலுள்ள பிரெஞ்சு ஜாதியார் தங்களுடைய அரசருக்கும் அரசிக்கும் விரோதமாய்க் கலகம் செய்து அவர்களைக் கொன்றுவிட்டார்கள். நெப்போலியன் என்னும் பிரெஞ்சு போர்த்தலைவர் ஒருவர் பிரான்ஸுக்கு அதிபதியானர். அவரிடம் ஒரு பலமான சேனை இருந்தது. அவர் ஐரோப்பாவிலே பல தேசங்களை வென்று இங்கிலாந்துடனும் போர் புரிந்தார். இங்கிலாந்தில் பிரவேசித்து அதை வென்றுவிடுவதாகவும் சொன்னர்.

பிரெஞ்சுக்காரர்களால் யுத்தமுறையில் பழக்கப்பட்ட திடமான சேனைகள் நைஸாமிடத்திலும் திப்புவிடத்திலும் ஸிந்தியாவிடத்திலும்இருப்பதாக வெல்லெஸ்லி பிரபு தெரிந்துகொண்டார். பிரெஞ்சு சேனதிபதியான நெப்போலியன் எகிப்து தேசம்வரையில் வந்திருந்தார். திப்பு அவரைத் தம்மிடம்வந்து ஆங்கிலேயரைத் தேசத்தினின்றும் துரத்திவிடும்படிக்கும் தமக்கு உதவிபுரியுமாறும் கடிதம் எழுதியிருந்தார். நெப்போலியனும் அவருக்கு உதவிசெய்வதாய்ச் சொன்னர். ஒரு சிறு பிரெஞ்சுபடை மங்களூரில் வந்து இறங்கிற்று. புதுச்சேரியை ஆங்கிலேயர்கள் முன்னமேகைக்கொண்டுவிட்டபடியால் அப்படை அங்கேவருவதற்கு முடியாமற்போயிற்று.

அதன் பின்பு கவர்னர் ஜனரல் நைஸாமுக்கும் திப்புவுக்கும் பேஷ்வாவுக்கும் கடிதங்கள் எழுதினார். பிரெஞ்சுக்காரர்கள் அப்பொழுது ஆங்கிலேயருக்குத் தீராப் பகைவர்களாய் இருந்தபடியால், அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் சேவையிலிருந்த பிரெஞ்சுக்காரர்களை அனுப்பிவிடவேண்டுமென்றும், தங்கள் தங்கள் நாட்டின் அமைதி கெடாமலிருக்கும் பொருட்டும் அவரவர்கள் நாடுகளை விரோதிகள் எவரும் எதிர்க்காமல் பாதுகாக்கும்பொருட்டும் அங்கங்கே ஒரு பலமான ஆங்கிலேயபடையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும், அந்த அந்தச் சேனையின் செலவை அவரவர்களே கொடுத்துவரவேண்டுமென்றும், அக்கடிதங்களில் தெரிவித்திருந்தார். அவ்வகையான சேனையானது தேசத்தின் சமாதானத்தை நிலைநிறுத்துவதில் அரசனுக்கு உதவிசெய்வதாக ஏற்பட்டதாகையால் அதற்கு, **துணைப்படை** என்றும் வெல்லெஸ்லி செய்த இவ்வேற்பாட்டுக்கு 'உபகார நியமம்' அல்லது '**துணை புரி முறை**' என்றும் பெயர்.



நெப்போலியன்.

அம்மூன்று அதிகாரிகளில் சிறிதும் வன்மையற்றவரான நைஸாம், மகாராஷ்டிரர்களிடத்தில் மிகவும் பயங்கொண்டு இருந்தார்; ஆதலின், அவர்களிடத்திலிருந்து தம்மைக் காப்பாற்றி அவர்களுக்குச் சௌத்வரி கொடாமல் இருக்கும்படி ஆங்கிலேயர்கள் செய்வதானால், வெல்லெஸ்லி சொன்னபடி தாம் செய்ய உடனே ஒத்துக்கொள்வதாய்ச் சொன்னார். பின்பு அவர் தம்மிடம் இருந்த பிரெஞ்சு சேனைகளை அனுப்பிவிட்டார்; அதற்குப்பதிலாக ஹைதராபாத்துக்கு ஓர் ஆங்கிலேய சேனை வந்து சேர்ந்தது. அதுமுதல் ஹைதராபாத்து நைஸாமுக்கு விரோதிகளின் பயமே இல்லை. நைஸாம் அரசர்கள் பின்பு தங்கள் தேசத்தைக் கலகம் இல்லாமல் அமைதியாய்

ஆண்டுவருவதுடன் ஆங்கிலேயருக்கு நிலைத்த நேசரும் துணைவருமாய் இருந்துவருகிறார்கள்.

## நான்காவது மைசூர் யுத்தம்.

கவர்னர்ஜனரல் எழுதின கடிதத்தைத் தமக்குக் கொண்டு வந்த உத்தியோகஸ்தரைத் திப்பு பார்க்கவேயில்லை. ஆதலால் நான்காம்முறை மைசூர் யுத்தம் உண்டாயிற்று. தாம் மிகவும் பயங்கொண்டிருந்த விந்தியாவிடமிருந்து ஆங்கிலேயர் தம்மைக் காப்பாற்றினால் தாம் அவர்களுக்கு உதவி செய்வதாகப் பேஷ்வா சொன்னார். மற்ற மகாராஷ்டிரத் தலைவர்கள் சும்மா இருந்துவிட்டார்கள்.

அதன்பின்பு பம்பாயிலிருந்தும் சென்னையிலிருந்தும் இரண்டு ஆங்கிலேய சேனைகள் மைசூருக்குள் நுழைந்தன. சென்னைச் சேனைக்குத் தலைவர் ஜனரல் ஹாரிஸ் என்பவர்; அவருடன் கர்னல் வெல்லெஸ்லியும் சென்றார். திப்பு பம்பாய்ச் சேனையை முதலில் எதிர்சென்று தாக்கினார்; ஆனால் அவர் தோற்றுப்போனார். பின்பு மற்றொரு சேனையையும் எதிர்ப்பதற்காக விரைந்து சென்று அதனைத் தாக்கினார். அதிலும் அவர் தோல்வி அடைந்தார். அதன்பின் இரண்டு சேனைகளும் அவரை வளைந்து சூழ்ந்துகொண்டதனால், அவர் தமது தலைநகராகிய ஸ்ரீரங்கபட்டணத்திலேயே அடைபட்டிருக்கும்படி நேர்ந்தது. சில நாளைக்குள் பீரங்கிக் குண்டுகள் சுவர்களின் சில பாகங்களைத் தகர்த்துவிட்டன. பின்பு ஸ்ரீரங்க பட்டணத்தில் நெடுங்காலம் சிறையிலிருந்தவரும், திப்புவால் வெகு குரூரமாய் நடத்தப்பட்டவரும், முன் யுத்தம் முடிந்தபொழுது விடுவிக்கப்பட்டவருமான ஜனரல் பேயர்ட் என்பவர் ஆங்கிலேய வீரர்களைக் கோட்டைக்கு எதிரே நடத்திக்கொண்டுபோனார். ஏழு நிமிஷத்திற்கெல்லாம் அவர்கள் சுவர்களின் மேலே ஏறிவிட்டார்கள்; பின்னும் ஒரு மணி நேரத்தில்பட்டணத்தையும் கைக்கொண்டுவிட்டார்கள். திப்பு கோட்டை வாசலிலே போர்புரிந்துகொண்டிருக்கையில் கொலையுண்டார்.

மைசூர் பின்பு வெல்லப்பட்ட தேசம் ஆயிற்று. கவர்னர்ஜனரல் பிரிட்டிஷ் இந்தியாவின் ஒரு பாகமாக அதைச் சேர்த்துக்கொண்டிருக்கலாம்; ஆனால் அவர் அவ்வாறு செய்வதை

விட்டு, ஹைதரால் தள்ளிவிடப்பட்ட பழைய இந்து அரச பரம்பரையைச்சேர்ந்த ஐந்துவயதுள்ள கிருஷ்ண ராஜா என்னும் ஒரு சிறு பிள்ளையை மைசூர் சிம்மாசனத்தில் ஏற்றினார். பின்பு அவர் பழைய மைசூர் ராஜ்யத்தைச் சேராதனவும் ஹைதராலும் திப்புவாலும் இடையே வென்றுகொள்ளப்பட்டனவுமான பாகங்களை ஆங்கிலேயருக்கும், மகாராஷ்டிரருக்கும், நைஸாமுக்குமாகப் பங்கிட்டுவிட்டார். அவற்றில் ஆங்



திப்புவின் இறுதி முயற்சி.

கிலேயருக்குக் கிடைத்த பாகங்களுக்கு இப்பொழுது கன்னடம் என்றும் கோயம்புத்தூர் என்றும் பெயர்கள் வழங்கிவருகின்றன.

திப்புவின் பிள்ளைகளை அன்பாக நடத்தி, அவர்களுக்கு ஏராளமான உபகாரச் சம்பளம் கொடுத்து, அவர்களை வேலூரில் வசிக்கும்படி அனுப்பிவிட்டார்.

### சென்னை ராஜ்யம்

சிலகாலத்துக்குப் பின்பு நைஸாம், ஹைதராபாத்துக்கு அனுப்பிய துணைப்படைக்காகப் பணம் கொடுப்பதற்குப் பதிலாகத் தமக்கு அப்பொழுது கிடைத்த ஜில்லாக்களை ஆங்

கிலேயருக்குக் கொடுத்துவிடுவதாய்ச் சொன்னார். ஆகவே துங்கபத்திரையாற்றுக்கும் மைசூருக்கும் இடையில் உள்ள பல்லாரி கடப்பை ஜில்லாக்கள் 1799-ஆம் வருஷத்தில் ஆங்கிலேயருடைய ஆட்சிக்கு வந்தன. இவற்றிற்கு 'ஒப்பிக்கொடுத்த ஜில்லாக்கள்' என்று பெயர்.

காவேரியாறு பாயப்பெற்ற **தஞ்சைநாடு** மிக்க வளப்பம் உடையது. ஆதலால் அதற்கு 'தென்னிந்தியாவின் தோட்டம்' என்று பெயர். அதை அநேக நூற்றாண்டுகளாக விஜயநகரத் தரசர்களுக்கு உட்பட்டவர்களான நாயகர்கள் ஆண்டுவந்தார்கள். பிறகு சிவாஜியின் உடன்பிறந்தோர் ஒருவர் அதை வென்றார். அதுமுதல் நூற்றைம்பது வருஷகாலம் வரையில் அது மகாராஷ்டிர சிற்றரசர்களிடம் இருந்தது. அவர்களில் கடைசியானவர் அதைச் செவ்வையாய் ஆளவில்லை; அவர் ஜனங்களுக்கு ஜீவனத்துக்கே மார்க்கம் இல்லாதபடி அதிகமான வரிகளை வாங்கிவந்தார். அதனால் ஆயிரக்கணக்கான ஜனங்கள் தஞ்சாவூரை விட்டு ஓடிப்போனார்கள். கடைசியில் அவர் சந்ததியில்லாமல் இறந்துபோனார். அவர்குடும்பத்திலுள்ள இரண்டு சிற்றரசர்கள் ராஜ்யம் தமதெனச் சொல்லிக்கொண்டார்கள். அவர்கள் ஒருவரோடொருவர் சண்டைபோடாமல் இருக்கவேண்டுமென்றும் தஞ்சாவூரைச் செவ்வையாய் ஆளவேண்டுமென்றும் நினைத்து வெல்லெஸ்லி பிரபு அந்த இரண்டு சிற்றரசர்களுக்கும் உபகாரச் சம்பளமாக ஒரு பெருந்தொகை கொடுத்துத் தஞ்சாவூரைப் பிரிட்டிஷ்ராஜ்யத்தோடு சேர்த்துக்கொண்டுவிட்டார்.

கர்நாடக நவாபான மகம்மது ஆலி நாற்பத்தாறு வருஷம் ஆண்டபின் இறந்துபோனார். அவருக்குப்பின் அவர் குமாரர் **உம்தத்-உல்-உம்ரா** என்பவர் பட்டத்துக்குவந்தார். ஸ்ரீரங்கபட்டணம் ஆங்கிலேயர் கைக்கு வந்தபொழுது மகம்மது ஆலியும் அவர் குமாரரும் ஆங்கிலேயருக்கு விரோதமாய் ஹைதர் ஆலிக்கும் திப்புவுக்கும் உதவிசெய்வதாகச் சொல்லி எழுதின சில கடிதங்கள் அகப்பட்டன. உம்தத்-உல்-உம்ரா மூன்று வருஷகாலம் ஆண்டபின்பு இறந்துபோனார். அவர் அரசாட்சி அவர் தந்தை அரசாட்சியினும் கேடுகெட்டது. அவருக்குப் பிள்ளையில்லை. ஆதலால் வெல்லெஸ்லி பிரபு [illegible] தாயாதிகளுக்கும் மற்றும் உள்ள

பந்துக்களுக்கும் உபகாரச் சம்பளம் கொடுத்து, கர்நாடகத்தை ஆங்கிலேய அரசாட்சியில் சேர்த்துக்கொண்டார்.

கிளைவ் பிரெஞ்சுக்காரரிடமிருந்து 1759—ஆம் வருஷத்தில் வடஸர்க்காரைக் கொண்டதுதான் சென்னை ராஜ்யத்துக்கு ஆரம்பம். 1792—ஆம் வருஷத்தில் திப்புவோடு செய்த முதற் போருக்குப் பின்பு கார்ன்வாலிஸ் பிரபு அதனோடு மலையாளத்தையும் சேலத்தையும் மதுரையையும் சேர்த்தார். அவற்றோடு கன்னடத்தையும் கோயம்புத்தூரையும் தஞ்சாவூரையும் கர்நாடகத்தையும் சேர்த்து வெல்லெஸ்லி பிரபு ராஜ்யத்தைப் பெரிதாக்கினார். அதற்குப்பிறகு ராஜ்யத்தில் போர் ஒன்றும் நடவாமையால் ஜனங்களுடைய சுகத்துக்கும், க்ஷேமத்துக்கும் குறைவில்லை.

அப்பால், வெல்லெஸ்லி பிரபு தம்முடைய 'துணை புரி முறைக்கு' நைஸாம் இணங்கினது போல அயோத்தி நவாபையும் இணங்கும்படி சொன்னார். முதலில் நவாபு உடன்படவில்லை; கடைசியில் எதிர்ப்பதில் பயனில்லை யென்று தெரிந்து உடன்பட்டார். அயோத்திக்கு ஓர் ஆங்கிலேய சேனை வந்து சேர்ந்தது. அதன் சம்பளத்திற்காக இப்பொழுது வடமேற்கு மாகாணங்கள் என்று சொல்லப்படும் நாட்டின் பகுதியும் யமுனைக்கும் கங்கைக்கும் இடையில் உள்ளதும் ஆன 'தோ—ஆப்' என்னும் அயோத்தியின் பாகத்தை நவாபு கொடுத்துவிட்டார்.

### மகாராஷ்டிரர்களின் நிலைமை.

1761—ஆம் வருஷம் பானிப்பட்டு யுத்தம் நடந்தபோது பாலாஜிபாஜிராவ் பேஷ்வாவாக இருந்தாரல்லவா? யுத்தம் முடிந்த கொஞ்சகாலத்தில் அவர் இறந்துபோக, மாதவராவ் என்பவர் பேஷ்வாவாக வந்தார். அவர் 1761 முதல் 1772 வரை அரசாட்சி செய்தார். ஹைதராலியை ஒடுக்கினவர் அவரே.

பானிப்பட்டு யுத்தத்திற்குப் பிறகு மகதாஜி சிந்தியா என்பவர் மிகுந்த புகழ்பெற்று, ஷா ஆலத்துக்கு டில்லியில் முடி சூட்டி வட இந்து ஸ்தானத்தில் சர்வாதிகாரமும் வகித்துக்கொண்டிருந்தாரென்று முன்பு சொன்னோம்.

மத்திய இந்துஸ்தானத்தில் ஹோல்கார் வம்சத்தைச் சேர்ந்த மல்ஹாரிராவ் என்பவர் 1767-ஆம் ஆண்டில் இறந்து போக அவர் மருமகளான அகல்யாபாய் என்பவள் ராஜ்யத்தை மிகவும் நன்றாய்ப் பரிபாலித்து வந்து இந்திய ஸ்திரீகளுள் மிகவும் சாமர்த்தியசாலி யென்று புகழ்பெற்றாள்.

1772-ஆம் வருஷத்தில் பேஷ்வா மாதவராவ் இறந்து போனார். பிறகு நாராயணராவ் என்பவர் பட்டத்துக்கு வந்தார். ஆனால் கொஞ்சகாலத்துக்குப் பிறகு அவர் கொல்லப்பட்டார். அவருக்குப் பிறகு பட்டத்துக்கு வந்த ரகுநாதராவுக்கும் நானாபிரணவேசருடைய அதிகாரத்தில் இருந்த மகாராஷ்டிரர்களுக்கும் கலகம் நேரிட்டதால் வாரன்ஹேஸ்டிங்க்ஸ் காலத்தில் முதல் மகாராஷ்டிர யுத்தம் நடந்தது.

முதல்மகாராஷ்டிர யுத்தத்துக்குப்பிறகு இரண்டாவதுமாதவ்ராவ் என்பவர் நானாபிரணவேசருக்கு உட்பட்டு, பேஷ்வாவாக இருந்தார். ஆனால் அவருடைய அதிகாரத்தில் நானாபிரணவேசர் அதிகமாகப் பிரவேசித்தமையால் தாமே தற்கொலை செய்துகொண்டார். பிறகு இரண்டாவது பாஜிராவ் என்பவர் 1795 முதல் 1818 வரையில் பேஷ்வாவாக இருந்தார். வெல்லெஸ்லி பிரபு காலத்தில் இருந்தவர் அவரே.

## மகாராஷ்டிர யுத்தம்.

திப்புவுடன் கடைசியாகச் செய்த சண்டைக்குப் பின்பு வெல்லெஸ்லி பிரபு பேஷ்வாவாகிய பாஜிராவுக்குக் கடிதம் எழுதி, அவரும் நைஸாமைப்போலவே தம்முடைய பிரெஞ்சு சேனையை அனுப்பிவிட்டு, அதற்குப் பதிலாக ஓர் ஆங்கிலேய சேனையை வைத்துக்கொண்டால், மைசூரிலிருந்து தாம் கொண்ட நாட்டில் மூன்றிலொரு பாகத்தைக் கொடுப்பதாகத் தெரிவித்தார். ஆனால், பேஷ்வா, தம்முடைய பழைய மந்திரியான நானாபிரணவேசர் சொல்லைக் கேட்டுக்கொண்டு, அந்த ஏற்பாட்டுக்கு உடன்படவில்லை. அவருக்கு நாடு பெற்றுக்கொள்வதில் விருப்பந்தான். ஆனால் தம்முடைய பிரெஞ்சு சேனையை அனுப்பிவிட்டு ஆங்கிலேய சேனையை ஏற்றுக்கொள்ள இஷ்டம் இல்லை.

மறு வருஷமாகிய 1800-இல் நானாபிரணவேசர் என்பவர் இறந்துபோனார். உடனே இளையவராகிய பேஷ்வா,

ஹோல்காரின் சகோதரரைக் கொன்றுவிட்டு, ஹோல்காருடன் சண்டையிடத் தொடங்கினர். அவரை எதிர்ப்பதாக ஹோல்கார் இந்தூரிலிருந்து ஒரு பெரிய சேனையுடன் வந்து அவரையும் அவருக்கு உதவியாகவந்த சிந்தியாவையும் புனவில் ஒரு பெரிய சண்டையில் வென்ருர். உடனே புனவைக் கைக்கொண்டு அங்கே வேருெரு பேஷ்வாவையும் ஏற்படுத்தினர்.

பாஜிராவ் தம் உயிரைக் காத்துக்கொள்ளும்பொருட்டு, பம்பாய்க்கு ஓடிப்போய்விட்டார். அவர் தமக்கு இனி நாசகாலமே யன்றி வேருென்றும் இல்லையென்று கண்டு, ஆங்கிலேயர் தம்மை மறுபடியும் புனவில் சிம்மாசனத்தில் ஏற்றினல், வெல்லெஸ்லி பிரபுவினுடைய ஏற்பாட்டுக்குத் தாம் சம்மதிப்பதாக அவருக்குக் கடிதம் எழுதினர். 1802-ஆம் வருஷத்தில் பம்பாய்க்குவடக்கே இருபதுமைல் தூரத்தில் உள்ள பஸ்ஸீன் என்னும் கோட்டையில் அவர் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார். அதன்படி அவர் மகாராஷ்டிர ராஜ்யத்துக்குப் பேஷ்வா என்னும் தலைமையைக் கை விட்டார். ஆங்கிலேயர் உத்தரவின்றி மற்ற மகாராஷ்டிரத்தலைவர் வழிக்குப் போவதில்லை என்றும் தம் தேசத்தைப் பாதுகாப்பதற்காக ஓர் ஆங்கிலேயசேனையை ஏற்றுக்கொள்வதாகவும்உடன்பட்டதன்றி அந்தச்சேனையின் செலவுக்காகப் பம்பாய் ராஜதானியின் ஒரு பாகமாய் உள்ள சில ஜில்லாக்களைக் கொடுத்தார்.



பாஜி ராவ்.

அதேகாலத்தில் கூர்ஜ்ஜர அரசரான கெய்க்வார்என்பவர், பேஷ்வாவைப்போல் தாமும் ஆங்கிலேயர்களை இந்தியாவுக்குத் தலைவர்களாகக் கொள்வதாகவும் தமக்கு உதவியாகத் தம் தேசத்தில் ஓர் ஆங்கிலேய சேனையை ஏற்றுக்கொள்வதாகவும், அதன் செலவைத் தாம் கொடுத்துவிடுவதாகவும் ஒப்புக்கொண்டார்.

தௌலத் ராவ் சிந்தியாவும், ரகோஜி என்னும் பெயருடைய பான்ஸ்லேயும் சமாதானம் செய்துகொள்ள உடன்படவில்லை. பஸ்லீன் உடன்படிக்கையைப் பற்றிக் கேட்டபொழுது அவர்களுக்கு மிக்க கோபம் உண்டாயிற்று. ஆங்கிலேயரோடு போர்புரிவதற்கு ஹோல்கார் தங்களுடன் சேரவேண்டு மென்று அவர்கள் பெரிதும் முயன்றார்கள். அவர்கள் தங்கள் சேனைகளையெல்லாம் சேர்த்துக்கொண்டு யுத்தத்துக்குச் சித்தமாய் நின்றார்கள்.

அதனை வெல்லெஸ்லி பிரபுவும் உடனே கேள்வியுற்றுத் தாமும் போருக்கு ஆயத்தமானார். வட இந்தியாவில் உள்ள சிந்தியாவின் சேனைகளுக்கு எதிராய் ஜனரல் லேக் என்பவர் ஒரு படையை நடத்திக்கொண்டு போனார். கர்னல் வெல்லெஸ்லியும் கர்னல் ஸ்டீவன்ஸனும் தெற்கிலிருந்து வந்தார்கள். 1803—ஆம் வருஷத்தில் நைஸாம் ராஜ்யத்துக்கு வடக்கில் உள்ள அஸ்ஸாயீ என்னுமிடத்தில் கர்னல் வெல்லெஸ்லியானவர் சிந்தியா, ரகோஜி பான்ஸ்லே ஆகிய இவ்விருவர்களுடையசேனைகளையும் எதிர்த்தார். அவரிடம் 5,000 மனிதர்கள் கூட இல்லை; மகராஷ்டிரர்களின் தொகையோ 50,000. அப்படியிருந்தும், அவருக்கு நல்ல வெற்றிகிடைத்தது. அதே வருஷத்தில் ஆர்காம் என்னுமிடத்தில் அவர் இவர்களை மறுபடியும் யுத்தத்தில் வென்றார்.

இதற்குள் வடக்கே ஜெனரல் லேக் என்பவர் லாஸ்வாரி என்னும் இடத்தில் சிந்தியாவின் பிரெஞ்சு சேனையை எதிர்த்துத் துரத்திவிட்டார். அப்பால் அவர் மகராஷ்டிரர்கள் வசத்தில் அநேக வருஷங்களாக இருந்த ஆக்ராவையும் டில்லியையும் பிடித்துக்கொண்டார். டில்லியிலே பழைய மொகலாய சக்கரவர்த்தியான ஷா ஆலம் குருடராய்ச் சிறையிலிருந்ததை அவர் கண்டார். ஆங்கிலேயர்கள் உடனே அவரை விடுவித்து அவருக்கு நல்ல உபகாரச்சம்பளம் கொடுத்து அவருடைய பழைய அரண்மனையில் வசிக்கும்படி அநுமதியும் தந்தார்கள்.

சிந்தியாவும், ரகோஜிபான்ஸ்லேயும் பின்பு ஆங்கிலேயருடன் பஸ்லீன் உடன்படிக்கையைப்போல் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார்கள். அதனால் சிந்தியா யமுனாநதி

க்கு வடக்கில் உள்ள நாடு முழுவதையும் கொடுத்ததன்றி ரஜபுத்திரரிடத்தும் நைஸாமிடத்தும் சௌத் வரி வாங்கும் உரிமையையும் இழந்தார். சிந்தியா செய்துகொண்ட

வெல்லெஸ்லியிடம் பிரிட்டிஷ் இந்தியா

உடன்படிக்கைக்கு அர்ஜ்ஜுனகாம் உடன்படிக்கை என்று பெயர். பான்ஸ்லே பிரபு, தியோகாம் உடன்படிக்கையின் படி கிழக்கே கட்டாக்கையும் மேற்கே பீராரையும் கொடுத்துவிட்டார். வெல்லெஸ்லி பீராரை நைஸாமுக்கு வெகுமதியாகத் தந்தார். புணுவுக்கும் நாகபுரத்துக்கும் ஆங்கிலேய சேனை ஒவ்வொன்று வந்தது. அதன்பின்பு பான்ஸ்லே நாகபுரத்தரசர் என்ற பெயர் பெற்றார்.

அதே காலத்தில் ரஜபுத்திர சிற்றரசர்களும் வெல்லெஸ்லி பிரபுவினுடைய துணைபுரி முறைக்கு உட்படுவதாகச் சொன்

ணர்கள். அவர்கள் தம்முள் ஒருவருக்கொருவர் செய்து வந்த சண்டைகளும் மகராஷ்டிரர்களோடு அடிக்கடி செய்து வந்த சண்டைகளும் பின்பு நின்றுவிட்டன.

இந்தியாவில் வெல்லெஸ்லி பிரபுவினுடைய ஏற்பாட்டுக்கு உடன்படாத பெரிய அரசர் ஹோல்கார் ஒருவரே. ஆங்கிலேயர் மற்ற மகராஷ்டிர அரசர்களோடு போர் புரிந்துகொண்டிருந்தபொழுது, தம்மை எதிர்க்கப் போதுமான பலம் இல்லாத ரஜபுத்திரத் தலைவர்களிடமிருந்து அவர் தம்மாலியன்ற அளவு கொள்ளையடித்துக்கொண்டிருந்தார். அந்தத் தலைவர்கள் அப்பொழுது ஆங்கிலேயரால் பாதுகாக்கப்பட்டமையால், வெல்லெஸ்லி பிரபு அவர்கள் வழிக்கு வாராமல் தம்முடைய தேசத்துக்குப் போய்விடும்படி ஹோல்காருக்குக் கட்டளையிட்டார். ஹோல்கார் அவ்வாறு செய்ய உடன்படாமல் ரஜபுத்திரர்களைத் தமக்கு எப்பொழுதும் சௌத் வரியைக் கொடுக்கும்படி செய்யப்போவதாகச் சொன்னார். அதன் மேல், கவர்னர்ஜனரல் தாம் சொன்னபடி தம்முடன் சம்பந்தப்பட்ட துணைவர்களைப் பகைவரிடமிருந்து பாதுகாக்க வேண்டிய கடமை உடையவராகையால், 1804-ஆம் வருஷத்தில் ஹோல்காரோடு போர் புரிந்தார்.

ஆனால் ஹோல்காருக்கு உள்ள பலம் இவ்வளவென்பதும் அவருடைய சேனையின் தொகை இவ்வளவென்பதும் கவர்னர்ஜனரலுக்குத் தெரியவில்லை; வங்காளத்திலிருந்துவந்த சிந்தியாவின் துருப்புக்களுடனே **கர்னல் மான்ஸன்** என்பவர் வசம் ஒரு சிறிய சேனை அனுப்பப்பட்டது. கர்னல் மான்ஸனுக்கும் ஹோல்காரைப்பற்றியாவது அவர் படைகளைப் பற்றியாவது அதிகமாக ஒன்றும் தெரியாது. அவர் பயமில்லாமல் நேரே ஹோல்காருடைய நாட்டில் புகுந்தார். ஒரு பெருஞ்சேனை அவரைத் திடீரென வளைத்துக்கொண்டது. சிந்தியாவின் துருப்புக்கள் அவரை விட்டு விட்டுப் பகைவர் பக்கம் போய்ச் சேர்ந்துகொண்டன. கர்னல் மான்ஸன் துணைபெறும்பொருட்டு ஆலோசனைக் குறைவாய் ஆக்ராவை நோக்கித் திரும்பிச் சென்றார். அப்பொழுது ஜூலை மாதம்; எங்கும் மழை பெய்துகொண்டிருந்தது. ஆறுகளெல்லாம் பெருக்கெடுத்தோடின. கர்னல் மான்ஸன் மிகவும் கஷ்டப்பட்டு ஆக்ராவந்து சேர்ந்தார்.

பின்பு ஜனரல் லேக் ஒரு பெருத்த சேனையுடன் ஆக்ரா விலிருந்து புறப்பட்டுப் போனார். அவர் தீக் என்னுமிடத்தில் நடந்த சண்டையில் ஹோல்காரின் சேனைக்கூட்டங்களை அடித்துத் துரத்திவிட்டு அங்கேயுள்ள பலமான கோட்டையைப் பிடித்துக்கொண்டதன்றி, பரதபுரக் கோட்டையையும் வளைத்துக்கொண்டார். பரதபுரத்தரசர் ஹோல்காருக்கு நண்பர். அவர் தமது கோட்டையைச் சிலகாலம் தைரியமாய்க் காத்துநின்றார். கடைசியில் தம்மால் காக்க முடியாதென்று தெரிந்தவுடனே, அவர் ஆங்கிலேயரோடு சமாதானம் செய்துகொண்டார்.

யுத்தம் முடிவதற்குமுன் வெல்லெஸ்லிபிரபு தம் வேலையை விட்டுவிட்டு இங்கிலாந்துக்குப் போக வேண்டியிருந்தது. அவருக்குப் பின்வந்த கவர்னர்ஜனரல் கர்னல் லேக்கை இஷ்டப்படிசெய்வதற்கு இடங்கொடுக்கவில்லை.

லார்ட் கிளைவ் ஆங்கிலேயர்களுக்கு இந்தியாவில் வங்காள ராஜ்யத்தை ஸ்தாபித்துக்கொடுத்துச் சென்னை ராஜ்யத்துக்கு வேர் ஊன்றினார். கார்ன்வாலிஸ் பிரபு பல தேசங்களைச் சேர்த்தார். வெல்லெஸ்லி பிரபு சென்னைராஜதானியைப் பூர்த்திசெய்து ஆக்ராவையும், வடமேற்கு மாகாணத்தையும் சம்பாதித்தார். கிளைவ், கார்ன்வாலிஸ், வெல்லெஸ்லி இந்த மூன்று ராஜப்பிரதிநிதிகள் காலத்திலும் இருந்த இந்துதேச படங்களைப் பார்த்தால் அவ்வப்போது இந்தியா இருந்த விஸ்தீரணம் நன்கு தெரியவரும்.

## 48. ஐந்தாவது கவர்னர்ஜனரலாகிய லார்ட் கார்ன்வாலிஸும், ஸர் ஜார்ஜ் பார்லோவும்.

### 1805–1807.

இந்தியாவில் லார்ட் வெல்லெஸ்லி செய்தகாரியங்களை ஆங்கிலேய ஜனங்கள் கேள்வியுற்றபொழுது அவர்கள் சிறிதேனும் திருப்தி அடையவில்லை. இந்தியாவில் ஆங்கிலேயர்கள் இன்னகாரணத்துக்காகப் பெருந்தலைமை வகிக்கவேண்டும் என்பதை அவர்கள் அறியவில்லை; இந்து அரசர்களிட

மிருந்து பல தேசங்களைப் பற்றிக்கொண்டது ஒழுங்கன்று என்றும் அவர்கள் நினைத்தார்கள். இந்தியாவோடு வர்த்தகம் செய்வதற்கு எல்லாவிதமான பாத்தியதைகளையுமுடைய ஈஸ்ட் இந்தியா கம்பெனியார், தாங்கள் விசேஷ லாபத்தை அடைந்தாலும், திப்புவோடும் மகாராஷ்டிரரோடும் செய்த பெரிய யுத்தங்களால் தங்களுடைய லாபமெல்லாம் வீணாய்ப்போனதைக் கண்டார்கள். ஒருகாலத்திலும் முடிவுபெறாதென்று நினைத்த இந்த யுத்தங்களால் அவர்கள் சலிப்படைந்தனர். ஆதலால் லார்ட் வெல்லஸ்லிக்குப் பிறகு வந்த கவர்னர்ஜனரலான லார்ட் கார்ன்வாலிஸ் ஹோல்காரோடு உடனே சமாதானம் செய்துகொள்ள வேண்டுமென்றும், இந்தியாவில் எந்த அரசரின் வழிக்கும் போகக்கூடாதென்றும், கண்டிப்பான உத்தரவுகளைப் பெற்று இந்தியாவுக்கு வந்தனர்.

இரண்டாம்முறை அவர் வந்தபோது அவருக்கு எழுபது பிராயம்; ஆதலால் உஷ்ணபூமியான வங்காளத்தில் வசிக்கமுடியாமல் வந்த மூன்று மாதங்களுக்குள் அவர் இறந்துபோனார்.

ஆலோசனை சபையில் முதல்வராக இருந்த ஸர் ஜார்ஜ் பார்லோ என்பவர், இங்கிலாந்திலிருந்து வேறே ஒருவர் கவர்னர்ஜனரலாக அனுப்பப்படுமளவும், அவ்வேலையைப் பார்த்துவந்தனர். அவர் இங்கிலாந்திலிருந்துவந்த உத்தரவுகளுக்கெல்லாம் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியபதாக இருந்தது. மற்ற மகாராஷ்டிரத் தலைவர்களைப்போல ஆங்கிலேயருடன் சமாதானம் செய்துகொள்ள விரும்பியிருந்த ஹோல்காருடன் தாமே சமாதானம் செய்துகொண்டார். ஆங்கிலேயர்களோடு செய்துகொண்ட உடன்படிக்கைக்கு மாறாக ரஜபுத்திர வீரர்கள் சிலர் யுத்தத்தில் ஹோல்காருடன் கலந்துகொண்டமையால் அதுமுதல் தங்களுடைய உதவி அவர்களுக்குக் கிடைக்காதென்று ஆங்கிலேயர்கள் தெரிவித்துவிட்டார்கள்.

ஹோல்காரோடு சேர்ந்துகொண்ட சிந்தியாவுடன் புதிதாய் ஓர் உடன்படிக்கை செய்யப்பட்டது; அதனால், அவரிடமிருந்து பற்றிக்கொள்ளப்பட்ட குவாலியர் என்னும் பலமான கோட்டை அவருக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்டது; அவருடைய நாட்டிற்கும் ஆங்கிலேயருடைய ராஜ்யத்திற்குக் சம்பலாறு மத்திய எல்லையாகக் குறிக்கப்பட்டது.

பார்லோவின் அரசாட்சியில் வேலூரில் சிபாய்களின் கலகம் முதலில் ஆரம்பமாயிற்று. அதற்கு, 'சென்னை, சிப்பாய்க்கலகம்' என்று பெயர். புதுமாதிரியாகத் தலைக்குட்டைகளைக் கட்டிக்கொள்ளவேண்டுமென்று துரைத்தனத்தார் சிபாய்களுக்கு உத்தரவு செய்தார்கள். இந்திய சிபாய்களும் மகம்மதிய சிபாய்களும் அதற்கு உடன்படாமல் தங்களைக் கிறிஸ்தவமதத்திற் சேர்ப்பதற்காகவே அந்த உத்தரவு பிறந்ததென்று நினைத்து, கலகஞ்செய்து ஆங்கிலேயர்கள் பலரைக் கொன்றார்கள். கொஞ்சகாலத்தில் அந்தக் கலகம் அடங்கிற்று. பின்பு, திப்புவின் குமாரர்களே சிபாய்களை அவ்வாறு தூண்டினார்களென்று நினைத்து வேலூரில் இருந்த அவர்களை ஆங்கிலேயர்கள் கல்கத்தாவுக்கு அனுப்பிவிட்டார்கள். அப்போது லார்ட் வில்லியம் பெண்டிங்க் என்பவர் சென்னையில் கவர்னராக இருந்தார். வேலூரில் உண்டான சிபாய்கலகத்தை அடக்குவதற்கு அவருக்குத் திறமை இல்லையென்று அவரை உடனே இங்கிலாந்துக்கு அனுப்பினார்கள்.



## 49. ஆருவது கவர்னர்ஜனரலாகிய மின்டோ பிரபு.

### 1807–1813.

அடுத்த கவர்னர்ஜனரலாகிய மின்டோ பிரபு ஏழுவருஷம் ஆண்டனர். அவர் இந்தியாவில் சமீபகாலத்தில் கவர்னர்ஜனரலாக இருந்த லார்ட் மின்டோவின் பாட்டனார். அவர் சீக்கியர்களுக்கு அதிபதியான ரஞ்சித்சிங்கோடு சமாதானம் செய்துகொண்டு அவர்களுடைய ராஜ்யத்துக்கு ஸெட்லஜ் நதியை எல்லையாக ஏற்படுத்தினர்.

### கம்பெனியாரைப்பற்றிய புதிய சட்டம்

1813–ஆம் வருஷம், இங்கிலாந்தில் மகா மந்திராலோசனை சபையார் இந்தியா விஷயங்களைப்பற்றி நன்றாக யோசனைசெய்து, முன்பு ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் விஷயமாக ஏற்பட்டிருந்த சட்டத்தில் சில மாறுபாடுகள் செய்தார்கள்.

1600–ஆம் வருஷம் முதல் 1813–ஆம் வருஷம் வரையில் ஈஸ்ட் இந்தியா கம்பெனியார்கள்மட்டுமே வியாபாரம்

செய்ய முழு அதிகாரம் பெற்றிருந்தார்கள். புதிய சட்டத்தின் படி அதை மாற்றியதனுல், ஆங்கிலேய வியாபாரிகள் யாவரும் இந்தியாவோடு வியாபாரம்செய்ய அதிகாரம் பெற்ருர்கள். ஆனுல், சைனுவில் வியாபாரம்செய்ய ஈஸ்ட் இந்தியா கம் பெனியாருக்குமட்டும் அதிகாரம் கொடுத்தார்கள்.

ஆயினும், கம்பெனியாராலே ஆளப்பட்ட தேசத்தின் எந்தப்பாகத்திலும், அவர்கள் அனுமதியின்றி எந்த ஆங்கி லேயரும் வசிக்கக்கூடாதென்ற ஒரு பழைய சட்டம் இருந்த படியால், இந்தப் புதிய சட்டம் அடுத்த இருபது வருஷ காலம் வரையில் பிரயோசனம் இன்றி இருந்தது.

## 50. ஏழாவது கவர்னர்ஜனரலான ஹேஸ்டிங்க்ஸ் பிரபு.

### 1813–1823.

#### மகாராஷ்டிர அதிகாரத்தின் முடிவு.

1813–ஆம் வருஷத்தில் இந்தியாவுக்கு வந்த கவர்னர் ஜனரலாகிய ஹேஸ்டிங்க்ஸ் பிரபு, உயர்ந்த குலத்தில் பிறந்த கனவான்; அநேக யுத்தங்களில் போர்செய்த பெரிய தளகர்த்தர். முதல் கவர்னர்ஜனரலாகிய வாரன் ஹேஸ்டிங்க்ஸ்என்பவருடைய பெயரை வகித்திருந்த போதிலும் இவர் அவரோடு எவ்விதத்திலும் சம்பந்தப்பட்டவரல்லர். இந்தியாவில் ஆங்கிலேய அரசாட்சியை நிலைநிறுத்தியவர்களில் இவர் மூன்ருவது பிரபு; லார்ட் கிளைவும் லார்ட் வெல்லஸ்லியும் இவருக்கு முற்பட்ட இருவர்களாவர். இவர் இந்தியாவில் பத்து வருஷம் அரசாட்சி செய்தார்.



ஹேஸ்டிங்க்ஸ் பிரபு.

வெல்லஸ்லி பிரபுவினுடைய வழியை அனுசரித்திருந்தால் இப்பொழுது இந்தியாவில் இருப்பதுபோல் அப்பொழுது எவ்விடத்திலும் சமாதானமே இருந்திருக்கும். சமாதானத்திற்குப் பதிலாக மகாராஷ்டிர தேசம்முழுவதும் போர் தொடங்கச் சித்தமாய் இருந்தது. பத்து வருஷ காலமாக மத்திய இந்தியாவில் பிந்தாரியர் என்ற ஒரு புதிய வகுப்பினர் கிளம்பினார்கள்.

## பிந்தாரியர்கள்.

முக்கியமாய் மகம்மதியருள் பட்டாணியரும் இந்துக்களுள் மகாராஷ்டிரரும் சேர்ந்த திருடர் கூட்டங்களுக்கு 'பிந்தாரியர்' என்று பெயர். தண்டனைக்குப் பயந்த எந்தக் குற்றவாளியும் பிந்தாரியரிடம் ஓடிச் சேர்ந்துகொள்வான். அவர்களுக்கு நாடும் இல்லை; வீடும் இல்லை. சண்டையில் நின்று யுத்தம் செய்வதான பெருமை அவர்களுக்கு ஒன்றும் இல்லை. ஒருவராலும் பிடிக்க முடியாதபடி அவ்வளவு வேகமாய் ஓடிப் போய்விடும் பெருமைமட்டும் அவர்களுக்கு உண்டு. அவர்களுடைய எண்ணம் ஒரு நாட்டை ஜயித்துக் கைப்பற்றுவதன்று; அதில் உள்ளதையெல்லாம் கொள்ளையடிப்பதே. பணத்தை மறைத்து வைத்திருக்கும் இடத்தைச் சொல்லாத குடிகளை அவர்கள் மிகவும் குரூரமாய் நடத்துவார்கள். இரும்பைப் பழுக்கக் காய்ச்சி உள்ளங்காலில் சுடுவார்கள்; உடுத்திருக்கும் வஸ்திரத்தில் எண்ணெயை ஊற்றி நெருப்பு வைப்பார்கள். இந்தப் பிந்தாரியர்களில் அநேகர் முன்னமேயே சிந்தியா, பேஷ்வா இவர்களுடைய சேனையில் சேர்ந்துகொண்டு ஒவ்வொரு வருஷமும் கொள்ளையடிக்கப் போவது வழக்கம். மகாராஷ்டிர அரசர்கள் கொள்ளையடிக்க முடியாதபோது இந்தப் பிந்தாரியர்கள் தாமே கொள்ளையடிக்கவும் சௌத் வரியை வாங்கவும் தலைப்பட்டார்கள். இவர்களுடைய தலைவர்கள் பலருண்டு. அவர்களில் முக்கியமானவர்கள் அமீர்கான் என்பவனும் சிட்டு என்பவனும். அடக்குவதற்கு ஒருவரும் இல்லாமையால் பிந்தாரியர்கள் நாளுக்குநாள் விருத்தியடைந்து 60,000 பேர் ஆனார்கள்.

ஹேஸ்டிங்க்ஸ் பிரபு வந்தவுடனே, வெல்லஸ்லியைப் போல் எளியவர்களுக்கு உதவி புரிந்து வலியவர்களை எதிர்க்கும் கோட்பாட்டினை மறுபடியும் மேற்கொண்டாலன்றி, இந்துதேசமானது பழையபடி பயங்கரமான நிலைமைக்கு அதிசீக்ரத்தில் வந்துவிடும் என்று கண்டறிந்தனர். பிரிட்டிஷ் இந்தியாவின் வடபாகத்தைக் கூர்க்கர்கள் எதிர்த்தமையாலும், பிந்தாரியர்கள் தென்பாகத்தில் கொள்ளையடித்தமையாலும், மகாராஷ்டிரத் தலைவர்கள் யாவரும் மத்திய இந்தியாவில் கலகம் செய்யச் சித்தமாய் இருந்ததனாலும், வெல்லஸ்லி பிரபுவினுடைய கோட்பாடே இந்தியாவைக் காப்பாற்றும் உபாயம் என்று அவர் இங்கிலாந்தில் உள்ள ஆங்கிலேய துரைத்தனத்தாருக்கு எழுதினார். மகாராஷ்டிரர்களுக்கு மிகவும் பயந்த நைஸாம் ஒருவரே ஆங்கிலேயரிடம் உண்மையான நம்பிக்கை உடையவராய் இருந்தார். ஆங்கிலேய துரைத்தனத்தார் ஹேஸ்டிங்க்ஸ் பிரபுவினிடம் முழு நம்பிக்கை வைத்திருந்தமையால், அவர் எழுதியது உண்மையென்று கண்டறிந்தனர். ஆகையால் அவர்கள் வெல்லஸ்லி பிரபுவினுடைய கொள்கைகளை மேற்கொண்டு நடத்தலாமென்று ஹேஸ்டிங்க்ஸுக்கு உத்தரவு செய்தார்கள்.

### நேபாள யுத்தம்.

கூர்க்கர்கள் நேபாள தேசத்தை ஆளும் ஜாதியார். இந்த நேபாளம் இமயமலைச் சாரலில், இந்துஸ்தானத்திற்கும் திபெத்திற்கும் மத்தியில், காஷ்மீரத்துக்குக் கிழக்கில், 700 மைல் நீளமும், 100 மைல் அகலமும் உள்ள ஒரு தேசம். தேசத்தின் தென்பாகம் முழுவதும் காடுகள் அடர்ந்த சதுப்பு நிலம். வெகுகாலமாக இத்தேசத்தில் சாந்த குணம் உள்ள இந்திய பௌத்தர்கள் வசித்துவந்தனர்; ஆனால் ஏறக்குறைய 150 வருஷங்களுக்கு முன்னமே, இது கூர்க்கர்கள் என்ற பெயர் வாய்ந்த காஷ்மீர தேசத்து ரஜபுத்திரர்களால் ஜயிக்கப்பட்டது. அவர்கள் இந்த நாட்டின் சுதேசிகளை வெகு கடுமையாய் நடத்தி, அவர்களுடைய தலைவர்களையும் கொன்றார்கள்.

ஹேஸ்டிங்க்ஸ் பிரபு இந்தியாவுக்கு வந்தபோது கூர்க்கர்கள் அயோத்தியைச் சேர்ந்த சில கிராமங்களை அகாரண

மாய்க் கைப்பற்றி அவற்றின் அதிகாரிகளையும் கொலைசெய்த னர்; ஆகையால் அவர்களோடு போர்செய்யவேண்டியதா யிற்று; ஆகவே நான்கு படைகள் அவர்களை எதிர்க்குமாறு அனுப்பப்பட்டன. கனமான பீரங்கிகளைச் சதுப்புநிலத்தின் வழியாக இமயமலையின்மேல் இழுத்துக்கொண்டு போவது மிகவும் கடினமாய் இருந்தது. கூர்க்கர்கள் வெகுதைரியமாய் யுத்தம் செய்தார்கள். அனுப்பின நாலு சேனைகளில் மூன்று அநேக வீரர்களை இழந்து திரும்பி வரும்படி நேரிட்டது. ஆனால் ஜனரல் ஆக்டர்லோனி தளகர்த்தராயிருந்து நடத்திய நாலாவது சேனைப் பிரிவோ கூர்க்கர்களை எல்லாப்பக்கங்களி லும் துரத்தியடித்தது. அவர் நேபாள ராஜதானியாகிய காட்மந்துவைக் கிட்டினபொழுது, கூர்க்கர் தலைவன் ஆங்கி லேயரோடு 1816–இல் சமாதானம் செய்துகொண்டான். அதனால் அவர்கள் தங்கள் நாட்டின் மேற்புறத்தில் உள்ள குமாயூன் என்னும் பாகத்தைக் கொடுத்துவிட்டார்கள். அந் தப்பாகத்திலேதான் இப்பொழுது கவர்னர்ஜனரல் கோடை யில் தங்கும் இடமாகிய ஸிம்லாவும், முசூரி, நைனிதால் என்பவைகளும் இருக்கின்றன. இந்த உடன்படிக்கைக்கு, சிகௌலி உடன்படிக்கை என்று பெயர். 'ரெஸிடெண்டு' என்னும் ஓர் ஆங்கிலேய உத்தியோகஸ்தர் அதுமுதல் காட் மந்துவில் வைக்கப்பட்டிருக்கிறார்.

பின்பு நேபாளத்து அரசர் ஆங்கிலேயருக்கு நண்பரா னார். அநேகம் கூர்க்கர்கள் ஆங்கிலேய தளகர்த்தரிடம் போர் வீரர்களாய் அமர்ந்தனர். அவர்கள் ஆங்கிலேய சேனையில் மிக்க திறமையும் தைரியமும் உள்ள வீரர்களுடைய கணக் கில் சேர்ந்தவர்கள்.

## பிந்தாரியர்கள்.

ஆங்கிலேய சேனைகள் கூர்க்கர்களோடு வெகு பலமாய் யுத்தம் செய்துகொண்டிருக்கையில், பிந்தாரியர்கள் முன்பு ஒருபொழுதும் இல்லாத தைரியத்தை அடைந்தனர். பேஷ் வாவாகிய பாஜிராவும் எவ்விடத்திலும் கொள்ளையடிக்கும் படி அவர்களைத் தூண்டிக்கொண்டிருந்தார். பிறகு ஹேஸ் டிங்க்ஸ் பிரபு லக்ஷத்து இருபதினாயிரம் வீரர்களடங்கிய பெரிய சேனையைச் சேர்த்தார். அது சென்னை பம்பாய் வங்

காளம் என்னும் இடங்களிலிருந்து வந்த பல சிறு சேனைகள் அடங்கியது. பிந்தாரியர்களில் ஒருவரும் தப்பியோடாத விதமாக அவர்களை எல்லாப்பக்கங்களிலும் ஆங்கிலேயர்களுடைய வீரர்கள் சூழ்ந்துகொண்டனர். பிந்தாரியர்கள் எதிர்த்துச் சண்டை செய்யாவிட்டாலும் அவர்களில் அநேகர் கொலையுண்டனர். பாக்கிநின்றவர்கள் தங்கள் ஆயுதங்களை எறிந்துவிட்டுப் பொறுமையுடன் கிராமங்களில் தங்கினார்கள். அவர்கள் தலைவனாகிய சிட்டு என்பவன் புலிக்கு இரையா



கூர்க்க ராணுவ வீரர்கள்.

னான். மற்றவர்கள் ஆங்கிலேயர் தயவை எதிர்பார்த்துக் கீழ்ப்படிந்ததனால், அவர்கள் பிழைப்புக்காகச் சிறு நாடுகள் ஆங்கிலேயர்களால் விடப்பட்டன. அமீர்கானுக்கு ராஜபுதனத்தில் 'டாங்கு' என்னும் சிறு நாடும் 'நவாப்' என்னும் பட்டமும் கொடுக்கப்பட்டன. 1818-ஆம் வருஷத்திற்குள் பிந்தாரியர்கள் என்ற பெயரே அற்றுப்போனமையால் இந்தியா அவர்களுடைய கொடுமையினின்றும் நீங்கிற்று.

மகாராஷ்டிரர்களோடு நடந்த கடைசியுத்தம்.

ஆங்கிலேயர் பிந்தாரியர்களை ஜயிக்கமாட்டாரென்று எண்ணியிருந்த பேஷ்வா பாஜிராவ் 1817-ஆம் வருஷத்தில்,

ஒரு பெரிய சேனையைச் சேர்த்துக்கொண்டு புனாவுக்கு அருகில் உள்ள கற்கியென்னும் இடத்தில் இருந்த ஆங்கிலேய சேனைகளைத் திடீரென்று எதிர்த்தார். அங்கே அவர் மிகுந்த நஷ்டத்தை அடைந்ததல்லாமல் அடித்தும் துரத்தப்பட்டார். பிறகு அவர் தென்திசை சென்று காப்டன் ஸ்டாண்டன் என்பவரிடமிருந்த 800 சிபாய்களும் 10 ஆங்கிலேய உத்தியோகஸ்தரும் அடங்கிய ஒரு சிறு சேனையை, கோரிகாம் என்னுமிடத்தில் எதிர்த்தார். காப்டன் ஸ்டாண்டனும் அவருடைய வீரர்களும் ஒரு பகல் முழுவதும் இரவில் பாதியும், அன்ன பானம் இல்லாமல், 25,000 குதிரைவீரரையும் 6,000 பதாதியரையும் உடைய பேஷ்வாவுடன் எதிர்த்துப் போர் செய்தனர். மறுநாட் காலையில் மகாராஷ்டிரர் யுத்தம் செய்யமுடியாதென்று மறுத்துவிட்டதனால், பாஜிராவ் ஓடிப்போனார். அவர் பல இடங்களிலும் திரிந்தபிறகு ஆங்கிலேயர்கள் வசத்தில் தாமே அகப்பட்டுக்கொண்டார். அவர் பலமுறையும் வாக்குத் தவறினபடியால் அவரை நம்பக்கூடாதென்று அறிந்து, ஹேஸ்டிங்க்ஸ் பிரபு அவர் தேசம்முழுவதையும் கைக்கொண்டு, அவருக்கு எட்டுக்கோடி ரூபாய் கொடுத்து, ஆக்ராவுக்கு அருகில் உள்ள பித்தூர் என்னும் இடத்தில் வசிக்கும்படி அவரை அனுப்பிவிட்டார்.

நாகபுரத்தில் பழைய அரசாகிய ரகோஜிபான்ஸ்லே என்பவர் அதற்குச் சிலகாலம் முந்தியே இறந்துபோனார். அவரது சகோதாரின் புத்திரரான அப்பாசாகிப் என்பவர் ஆங்கிலேயரோடு சமாதானம் செய்துகொண்டு நாகபுரத்தை ஆண்டுவந்தார். ஆனால் அப்பாசாகிப் ரகசியமாய்ப் பாஜிராவோடு துராலோசனை செய்துவந்தார். பாஜிராவ் கற்கியிலுள்ள ஆங்கிலப்படையை எதிர்த்த சமாசாரம் கேட்டவுடனே 1817-ஆம் வருஷத்தில் இவரும் நாகபுரத்துக்கு அருகிலுள்ள சீதாபலதி என்ற குன்றிலிருந்த ஆங்கிலேய ரெஸிடெண்டை எதிர்த்தார். கடைசியில் அப்பாசாகிபினுடைய சேனைகள் முற்றிலும் தாக்கப்பட்டன; அவர் ராஜபுதனத்திற்கு ஓடிச் சில வருஷங்களுக்குப் பிறகு அங்கே இறந்தனர். காலஞ்சென்ற ரகோஜி ராஜாவின் பேரனாகிய ஒரு சிறு குழந்தையை ஆங்கிலேயர் நாகபுரத்தில் சிம்மாசனம் ஏற்றினார்கள்.

ஜஸ்வந்தராவ் ஹோல்கார் இறந்தபிறகு அவருடைய நாட்டை அவரது மனைவியாகிய துளசீபாய் ஆண்டுவந்தாள். பாஜிராவ் ஆங்கிலேயரோடு போர்புரிவதைக் கேள்விப்பட்ட வுடனே, அவளும் தனது போர்வீரர்களோடு அவருக்கு உதவிசெய்யத் தக்ஷிணத்தை நோக்கிப் புறப்பட்டாள். அவளுடைய சேனை ஸர் ஜான் மால்கோமினிடமிருந்த ஆங்கிலப் படைகளைச் சந்தித்தபொழுது, அவர், பேஷ்வாவுக்கு உதவிசெய்வது மிகவும் மூடத்தனமான காரியம் என்பதை எடுத்துக்காட்டி, அவர்களோடு சமாதானம் செய்ய முயன்றார். துளசீபாய் அதற்கு உடன்படுவதுபோல் காணப்பட்டாள்; அதனைக் கண்டறிந்த அவளது சேனைவீரர்களான கொடிய மகாராஷ்டிர வீரர்கள் கோபங்கொண்டு அவளைக் கொன்றுவிட்டார்கள். பிறகு அவர்கள் மகிதபுரத்துக்கு அருகில் ஆங்கிலேய சேனையை எதிர்த்தனர். ஸர் ஜான் மால்கோம் அவர்களை முற்றிலும் வென்றனர். ஹேஸ்டிங்க்ஸ் பிரபு ஜஸ்வந்தராவ் ஹோல்காருடைய குமாரனாகிய மல்ஹாரிராவ் என்பவனை இந்தூர் அரசனாக நியமித்து, அவனைப் பாதுகாக்கும்பொருட்டு ஓர் ஆங்கிலேய படையையும் அங்கே வைத்தார்.

1802–ஆம் வருஷத்தில் பஸ்ஸீன் உடன்படிக்கைப்படி பாஜிராவால் ஆங்கிலேயருக்குக் கொடுக்கப்பட்ட தேசத்தோடு, ஐந்து முக்கிய மகாராஷ்டிரத் தலைவர்கள் தங்கள் தேசங்களின் பாதுகாப்புக்காக வைக்கப்பட்ட ஆங்கிலப் படைகளின் சம்பளநிமித்தம் கொடுத்த தேசத்தையும் சேர்த்து ஹேஸ்டிங்க்ஸ் பிரபு 1818–ஆம் வருஷத்தில் பம்பாய் ராஜ்யத்தை ஏற்படுத்தினர்.

### வித்தியாபிவிருத்தி.

ஹேஸ்டிங்க்ஸ் பிரபு அதிகாரம்செலுத்திவந்த காலத்தில் இந்தியச் சிறுவர்கள் ஆங்கிலேய பாஷையைக் கற்கும்பொருட்டுச் சில ஏற்பாடுகள் செய்யப்பட்டன. வங்காளத்தில் டேவிட் ஹேர் என்பவர் ஆங்கிலேய பாடசாலையொன்றை வைத்தார். 1817–ஆம் வருஷத்தில் இந்தியகலாசாலை ஒன்று ஸ்தாபிக்கப்பட்டது. 1813–ஆம் வருஷத்தில் கம்பெனிக்காரர்க




ளுடைய அதிகாரத்தை மறுபடியும் அவர்களுக்குக் கொடுத்தபோது அவர்கள் வித்தியாபிவிருத்தி விஷயமாக வருஷந்தோறும் லக்ஷம் ரூபாய் செலவிட வேண்டுமென்று ஏற்படுத்தியிருந்தார்கள். அதனால் ஹேஸ்டிங்க்ஸ் பிரபு அநேக ஊர்களில் பிரதம வித்தியாப்பியாசத்துக்குரிய பாடசாலைகளை ஸ்தாபித்தார். அந்தப் பாடசாலைகளில் ஆங்கிலேய பாஷைகளைக் கற்றுக்கொடாமல் தேசபாஷைகளைமட்டும் கற்பித்து வந்தார்கள். இந்தியாவில் கிறிஸ்தவமதத்தைப் பரவச்செய்வதற்காக வந்த சிலபாதிரிமார்கள் கல்கத்தாவுக்கு அருகில் அச்சுயந்திரசாலை யொன்றை ஸ்தாபித்து அதில் பலநூல்களை அச்சிட்டு வெளியிட்டார்கள்.

# 51. எட்டாவது கவர்னர்ஜனரலாகிய ஆம்ஹர்ஸ்டு பிரபு.

1823–1828.

ஹேஸ்டிங்க்ஸ் பிரபுவுக்குப்பிறகு ஆம்ஹர்ஸ்டு பிரபு எட்டாவது கவர்னர்ஜனரலாக இந்தியாவுக்கு வந்தார்.

### பர்மா யுத்தம்.

1824–ஆம் வருஷத்தில் வங்காளத்தின் அருகில் உள்ள அஸ்ஸாம் ராஜ்யத்தை அப்பொழுது ஜயித்த பர்மாதேசத் தாசர் கடற்கரையோரத்தில் ஒரு தீவைக் காவல் காத்துவந்த ஆங்கிலேயரை எதிர்த்துச் சிலரைக் கொன்றார். இவ்விதம் அவர் செய்ததற்குக் காரணத்தைத் தெரிவிக்கும்படி கவர்னர் ஜனரல் அவருக்குக் கடிதம் எழுதினார். அவர் அதற்கு விடை எழுதாமல் வங்காளத்தின் வடகிழக்கிலுள்ள கச்சார் மாகாணத்தை எதிர்க்கும்படி ஒரு படையை அனுப்பினார். அது ஆங்கிலேயரால் துரத்திவிடப்பட்டது. ரங்கூனை எதிர்க்குமாறு கடல்வழியாகச் சென்ற ஒரு சேனை அந்நகரத்தைக் கைப்பற்றிக்கொண்டது.

ஆங்கிலேயருடைய பலத்தின் அளவைப் பர்மா தேசத் தாசர் அறியவில்லை. அவர் தம்முடைய தளகர்த்தனாகிய பந்துலா என்பவனை ஒரு பெரிய படையோடு ஆங்கிலேய சேனாதிபதியாகிய ஸர். ஆ. காம்பெல் என்பவரை அடித்துத் துரத்துமாறு அனுப்பினார். கவர்னர்ஜனரலைப் பிடித்துத் தலைநகராகிய ஆவாவிற்குக் கைதியாகக் கொண்டு போக எண்ணி, பந்துலா பொன் விலங்கு கொண்டுவந்திருந்தான்; ஆனால் அவனுடைய சேனை எளிதில் துரத்தியடிக்கப்பட்டது; அவனும் யுத்தகளத்தில் மடிந்தான். ஆங்கிலேய தளகர்த்தர் அஸ்ஸாமையும் அராகானையும் கைப்பற்றி, ஆவாவிற்குப் போவதற்காக ஐராவதிநதியில் இறங்கி எதிர்முகமாகச் சென்றார். அந்நகரத்தை அவர் நெருங்கியவளவில் பர்மா அரசர் கீழ்ப்படிந்து 1826–ஆம் வருஷத்தில் யாந்தபூ உடன்படிக்கையைச் செய்தார். அதன்படி ஆங்கிலேயர்களுக்கு, பர்மாவின் கடற்கரைப் பிரதேசங்களும் அஸ்ஸாம், அராகான், தென்னசரிம் ஆகிய நாடுகளும் கிடைத்தன.

## பாதபுரம்.

பாதபுரம் என்பது இந்தியாவில் உள்ள பலமான கோட்டைகளுள் ஒன்று. இதற்குமுன் ஆங்கிலேயர்கள் இரண்டு முறை அந்தக் கோட்டையை முற்றுகை செய்ததுண்டு; ஆனால் ஜயம் உண்டாகவில்லை. அதனால் பாதபுரத்தரசரும் வேறுபல சுதேச மன்னர்களும் ஒருநாளும் அது பிடிபட மாட்டாது என்று எண்ணினார்கள். 1826-ஆம் வருஷத்தில் பாதபுரத்தாசர் இறந்தார்; உடனே யாதோர் உரிமையும் இல்லாத ஓர் அதிகாரி அந்தத் தேசத்தைக் கைப்பற்றிக் கொண்டான். ஆம்ஹர்ஸ்டு பிரபு, அந்தக் கோட்டையைப் பிடிப்பதற்கும், காலஞ்சென்ற அரசாது புத்திராைச் சிம்மா



பாதபுரக் கோட்டை.

சனத்தில் ஏற்றுவதற்கும் ஒரு பெரிய சேனையை லார்ட் காம்பர்மீர் வசம் அனுப்பினர். பாதபுரக் கோட்டையின் சுவர்களை வெடிமருந்தால் பிளந்து ஆங்கிலேயர்கள் கோட்டையைக் கைப்பற்றிக்கொண்டார்கள். நியாயமான உரிமை உள்ளவர் சிம்மாசனத்தில் ஏற்றப்பட்டார்.

## 52. ஒன்பதாவது கவர்னர்ஜனரலாகிய வில்லியம் பேன்டிங்க் பிரபு.

1828–1835.

லார்ட் ஆம்ஹர்ஸ்டு பிரபு இந்தியாவைவிட்டுப் போன பிறகு வில்லியம் பெண்டிங்க் பிரபு கவர்னர்ஜனரலாக வந்தார்.

வில்லியம் பெண்டிங்க் பிரபு விவேகமும் கருணையும் உள்ளவர். அவர் தாம் ஆண்ட ஏழு வருஷங்களில் தமக்கு முன்பு இருந்த எந்தக் கவர்னர்ஜனரலும் செய்திராத பல நன்மைகளை இந்தியர்களுக்குச் செய்தார். தேசம் அமைதியுற்று இருந்ததனால் அவர் அங்ஙனம் செய்வதற்கு இடம் உண்டாயிற்று.



வில்லியம் பெண்டிங்க் பிரபு.

பிரயாணிகளுக்கு க்ஷேமம்.

பெண்டிங்க் செய்த முக்கியகாரியங்களில் ஒன்று சாலைகளில் பிரயாணம் செய்வதில் வழிப்போக்கர்களுக்கு இருந்தபயத்தைப்போக்கியது. தேசத்தில் மகாராஷ்டிரர்கள் சுற்றிக் கொண்டு இருக்கவில்லை; பிண்டாரியர்களும் அடங்கிவிட்டனர்; ஆனால், கூட்டக் கொள்ளைக்காரர்களும் நெஞ்சை நெரிப்பவர்களுமான தக்கர்கள் என்பவர்களே தேசமெங்கும் நிறைந்திருந்தனர்; அக்காலத்தில் ஒரு பிரயாணி எந்த இடத்துக்காவது புறப்பட்டால் மறுபடி உயிருடன் தன் இடத்துக்குத் திரும்பிவருவான் என்ற நிச்சயம் இல்லை. அவனைப்பற்றி அப்புறம் ஒருவிஷயமும் தெரிவதுமில்லை. சாலைகளில் பிரயாணம் செய்பவர்களைக் கொலைசெய்பவர்கள் தக்கர்களே.

தக்கர் என்ற கொள்ளைக்கூட்டத்தார் சாதாரண வழிப் போக்கர்களைப்போல் மாறுவேஷம் பூண்டு முப்பது நாற்பது பேர்கள் சேர்ந்துகொண்டு கூட்டமாகப் போவார்கள். அவர் கள் ஒரு செல்வவான் வீட்டைக் கண்டவுடன் இரவில் தீவர்த்தியும் கையுமாய்த் திடீரென்று உள்ளே புகுவார்கள். அந்த வீட்டிலுள்ள சொத்தைக் கொள்ளையடிப்பதும் வீட்டி லுள்ளவர்களைக் குரூரமாக நடத்துவதும் அவர்களைக் கொலை செய்வதும் அவர்களுடைய வழக்கம்.



தக்கர்கள்.

பெண்டிங்க் பிரபு இந்தத் தக்கர்களையும் அப்போதிருந்த கொலைபாதகர்களான தீவர்த்திக் கொள்ளைக்காரர்களையும் தேடிக் கண்டுபிடிக்கும்படி ஆங்கிலேய உத்தியோகஸ்தர் களுக்கு உத்தரவனுப்பினர். ஏழெட்டு வருஷங்களுக்குள் 1,500 தக்கர்கள் பிடிபட்டனர். சில வருஷகாலத்தில் கொள் ளைக்காரர் ஒருவருமே பாக்கியில்லாமல் எல்லாரும் அகப்பட் டுக்கொண்டனர். வழிப்போக்கர்களுக்கு அனுகூலம் அப் பொழுதுதான் ஏற்பட்டது.

### சககமனம்.

சககமனம் அல்லது உடன்கட்டையேறல் என்னும் ஒரு வழக்கம் சில இந்துக்களுக்குள் இருந்துவந்தது. அதாவது

புருஷன் இறந்துபோனவுடன் அவன் மனைவியும் உயிருடன் அவன் சரீரத்தோடு எரிக்கப்படுவது. அநேகமாயிரம் விதவைகள் இவ்விதமாக எரிக்கப்பட்டனர். பிள்ளைகள் தங்க



சககமனம் அல்லது உடன்கட்டையேறல்.

ளுடைய தாய்மார்களை உயிரோடு எரிப்பதென்பது மிகவும் பயங்காமானதல்லவா! அக்பர் இந்த வழக்கத்தை நிறுத்த வேண்டுமென்று முயன்றார்; ஆயினும் அது நிற்கவில்லை. பெண்டிங்க் அதனை முற்றிலும் நிறுத்திவிட்டார்; அதற்காக எல்லா இந்துக்களும் அவருக்கு மிகவும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டவர்கள்.

### இந்தியர்களுக்குப் பெரிய உத்தியோகங்கள் கொடுத்தல்.

துரைத்தன உத்தியோகத்தில் இந்தியர்களுக்குப் பெரிய வேலைகளைக் கொடுத்து ராஜ்ய பரிபாலன சக்தியை அவர்களுக்கு உண்டாக்க வேண்டுமென்று பெண்டிங்க் பிரபு ஆசை கொண்டிருந்தார்.

சென்னை ராஜதானியில் ஸர் தாமஸ் மன்றோ என்னும் கனவான் கவர்னராக இருந்தார். அவர் சேனையில் ஒரு சிறியவேலையில் அமர்ந்து பிறகு உயர்ந்தபதவிக்கு வந்தவர். இந்தியர்களிடம் அவருக்கு விசேஷமான அபிமானமுண்டு. அதனால் இந்தியர்கள் அவரை 'பிதா' என்று அழைத்துவந்

தார்கள். அவருடைய உருவச்சிலை சென்னையில் இருக்கிறது. 1816–ஆம் வருஷத்தில் அவர் நியாய பரிபாலனவிஷயத்தில் பல இந்தியர்களை நியமித்தார். பம்பாய் ராஜதானியில் 1819 முதல் 1827 வரையில் கவர்னராக இருந்த எலிபென்ஸ்டன் துரையும் மன்றோவைப்போலவே பம்பாய்மாகாணத்தில் பல இந்தியர்களை நியாயாதிபதிகளாக நியமித்தார்.

இவற்றை யனுசரித்து, லார்ட் பென்டிங்க் இந்தியா முழுவதிலும் இந்தியர்களையே நியாயாதிபதிகளாக நியமிக்கும்படி ஏற்பாடு செய்தார். வரிதண்டும் விஷயத்தில் கலெக்டர்களுக்கு உதவியாக இந்தியர்கள் பலர் டிப்டிகலெக்டர்களாக நியமிக்கப்பெற்றார்கள்.

### சார்டர் சட்டம்.

1833–ஆம் வருஷத்தில் ஈஸ்ட் இந்தியா கம்பெனியார்களின் சட்டம் மறுபடி மாற்றப்பட்டது. கம்பெனிக்காரர்கள் விஷயம் பார்லிமெண்டு சபையாரின் விசாரணைக்கு வந்ததில் பல புதிய விதிகள் சேர்க்கப்பட்டன. இந்தப் புதிய சட்டத்தின்படி கம்பெனியார்கள் வியாபாரத்தை முற்றிலும் விட்டுவிட நேர்ந்தது. ராஜ்ய பரிபாலனத்தைத்தவிர அவர்களுக்கு வேறொரு வேலையும் இல்லாமற் போய்விட்டது. சட்டங்கள் ஏற்படுத்துவதற்காக லா மெம்பர் என்று ஒருவரைக் கவர்னர்ஜனரல் சபையில் சேர்த்து இந்தியா முழுவதற்கும் சட்டங்களை ஏற்படுத்தும் அதிகாரத்தை அந்தச் சபைக்குக் கொடுத்தார்கள். ஜாதிபேதம், மதபேதம், வருணபேதம் முதலியவற்றை உத்தியோகவிஷயங்களில் பார்க்கக்கூடாதென்றும் எந்தவேலைக்கும் யோக்கியதையே பிரதானமென்றும் ஏற்பாடு செய்தார்கள். லார்ட் மெகாலே என்பவர் சட்டமெம்பாராக இந்தியாவுக்கு வந்தார். அவர் மிகவும் கற்றறிந்தவர்; ஆங்கிலேய பாஷையை இந்தியச் சிறுவர்கள் படிப்பதற்கு அனுகூலமான பல விதிகளை அவர் ஏற்படுத்தினார். இந்தியர்கள் மேன்மையடைவதற்கு ஆங்கிலேயபாஷையை நன்றாகக் கற்றுக்கொள்ளவேண்டுமென்பதை அவர் தெரிந்துகொண்டார்.

ஆங்கிலேயர்கள் உலகம் முழுவதும் சஞ்சாரம் செய்து, ஒவ்வொரு தேச பாஷையையும் அறிந்து, அந்த அந்தப்

பாஷையில் உபயோகமாய் இருப்பனவற்றையெல்லாம் தேர்ந்தெடுத்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கொள்கின்றனர். அதனால் ஆங்கிலபாஷையானது, கல்வியும் ஞானமும் நிறைந்த ஒரு பொக்கிஷசாலைபோல் விளங்கிவருகின்றது.

பென்டிங்க் இந்தியர்களுக்கு ஆங்கில பாஷையைக் கற்பிக்க ஆங்கில வித்தியாசாலைகளை ஏற்படுத்தும்படி உத்தரவு செய்தார். அதுமுதல் அவ்விதமான கல்விச்சாலைகள் வர வர அதிகரித்து இப்போது ஆயிரக்கணக்காக இருக்கின்றன.

இந்துதேசத்து ஜனங்கள் ஒன்றோடொன்று சம்பந்தமில்லாத பல பாஷைகளைப் பேசுகிற பலவித வகுப்பினரும் ஜாதியாருமாய் இருக்கின்றனர். வெவ்வேறு பாஷை பேசுகின்ற காரணத்தால் சென்னபட்டணத்தார் பஞ்சாபிகளின் பேச்சை அறிய முடியாது; பஞ்சாபிகளின் பேச்சைச் சென்னையிலுள்ளார் தெரிந்துகொள்ளவும் முடியாது. ஆனால் இப்பொழுது பஞ்சாபிகள் சென்னை வாசிகளுடன் ஆங்கில பாஷையில் சம்பாஷிக்கலாம். ஏனெனில் ஆங்கில பாஷை பஞ்சாபிலும் கற்பிக்கப்படுகின்றது; சென்னையிலும் கற்பிக்கப்படுகின்றது. பஞ்சாபிகளும் சென்னை ஜனங்களும் தாங்கள் ஒரே அரசருடைய குடிகளாய் இருந்தலோடு, ஒரே தேசத்து ஜனங்களாகவும் இருத்தலால், ஒரே பாஷையில் பேசுவது அவர்களுக்கு நன்மையே.

மொகலாயரும் ஆப்கானியரும் இந்துதேசத்தை ஆண்டபொழுது நியாயஸ்தலங்களிலும் துரைத்தனத்திலும் வழங்கிவந்த பாஷை பாரசீகம். ஆங்கிலேய அரசாட்சியில் பென்டிங்க் ஆங்கில பாஷையையே வழங்கும்படி செய்தார்.

இந்தியாவில் கவர்னர்ஜனரலே மேலதிகாரியாதலால், சுதேசமன்னர் ஒருவரோடு ஒருவர் சண்டைபோடாமலும், அவர்கள் தங்கள் ஜனங்களை வருத்தப்படுத்தாமல் நியாயமாய் ஆண்டுவரவும் பார்த்துக்கொள்வது அவரது கடமையாக இருந்தது. பென்டிங்க் காலத்தில் இந்த விஷயம் அநேக இடங்களில் தெளிவாகத் தெரியாமல் இருந்தபடியால், சில சுதேச ராஜ்யங்களில் குடிகள் மிகவும் கொடுமையாக நடத்தப்பட்டனர்; பிரபுக்கள் ஒருவரோடொருவர் சண்டையிட்டுக்கொ

ண்டிருந்தனர்; உள்ளூர்க்கலகம் அதிகமாய் இருந்தது. முதலில் பெண்டிங்க் இந்த ராஜ்யங்களின் வழிக்குப் போகவில்லை; ஆயினும் ஏதேனும் செய்தாலொழிய இவைகள் முற்றிலும் அழிந்துபோம் என்று கண்டார்.

குவாலியரில் தௌலத்ராவ் சிந்தியா இறந்தார்; அவருக்குப் பிள்ளையில்லாமைபால் ராணியும், பிரபுக்களும் ஒருவரோடொருவர் சண்டையிட்டார்கள். பெண்டிங்க் அப்போது அந்த அரசியை ஜங்காஜி என்பவனை சுவீகார புத்திரனாகக் கொள்ளும்படி செய்து, அவனுக்குத் தக்க பிராயம் வந்தவுடன் அந்தத் தேசத்தை ஆளுமாறு செய்தார்.

மல்ஹாரி ராவ் ஹோல்காரும் புத்திரன் இன்றி இறந்தார்; அவருடைய அரசியும் அரசாட்சியைக் கைப்பற்ற முயன்றதனால் உள்ளூர்க்கலகம் உண்டாயிற்று. காலஞ்சென்ற ராஜாவின் பந்துவும் ஜனங்களால் விரும்பப்பட்டவனுமான ஒருவனைப் பெண்டிங்க் சிம்மாசனத்தில் ஏற்றினர். அவ்வளவிலே அமைதி உண்டாயிற்று.

பெண்டிங்க் ராஜபுதனத்தில் உள்ள அநேக ராஜ்யங்களிலும் இவ்விதமாகவே ஏற்பாடு செய்தார். தங்களுடைய நியாயமான அரசர்களோடு மாறுபட்டவர்களை அவர் அமர்த்தி அடக்கினர். யுத்தம் நடந்திருந்தால் மாண்டுபோயிருக்க வேண்டிய அநேகமாயிரம் ஜனங்களுடைய உயிர்கள் இவ்வாறு காப்பாற்றப்பட்டன.

### மைசூர் ராஜ்யம்.

1799-ஆம் வருஷத்தில் திப்பு இறந்தவுடன் வெல்லஸ்லி பிரபு கிருஷ்ணராஜா என்னும் சிறு குழந்தையை மைசூருக்கு அரசராக ஏற்படுத்தினதை நாம் அறிந்திருக்கிறோம். அவர் அரசாளத் தகுதியில்லாத சிறு குழந்தையாய் இருந்தபடியால், அந்தத் தேசமானது திப்புவின் மந்திரியும் திறமைசாலியுமான பூரணையா என்பவரால் ஆளப்பட்டு வந்தது. கிருஷ்ணராஜாவுக்குப் பதினாறும்பிராயம் வந்தபொழுது அவர் சிம்மாசனத்தில் ஏற்றப்பட்டார். ஆயினும் அவருக்கு அரசாட்சி செய்கிற திறமை போதாது என்பது சீக்கிரத்தில் வெளியாயிற்று. பொக்கிஷத்தில் உள்ள பணத்தையெல்லாம்

கேளிக்கைகளில் அவர் செலவழித்துவிட்டார்; உயர்ந்த உத்தியோகங்களை, சரியாக நிர்வகிக்கக் கூடியவர்களுக்குக்



மைசூர் அரசரான கிருஷ்ணராஜா.

கொடாமல், அதிகமாகப் பரிதானம் கொடுப்பவர்களுக்கே கொடுத்தார். சேனையில் உள்ளவர்களுக்கு அவர் சம்பளம் கொடுக்கவில்லை. மைசூர் ஜனங்கள் இவை காரணமாக மிகுந்த கஷ்டத்தை அடைந்தனர். அங்கேயிருந்த ஆங்கிலேய ரெஸிடெண்டு தேசத்தை நன்றாக ஆளுமாறு பலதடவையும் அரசருக்கு அறிவு புகட்டி எச்சரிக்கை செய்துவந்தார். அரசர் அதைக் கொஞ்சமேனும் கவனிக்கவில்லை. முடிவில் 1830–ஆம் வருஷத்தில் மைசூர் ஜனங்கள் இவற்றையெல்லாம் பொறுக்க முடியாதவர்களாய்த் தங்கள் அரசருக்கு

விரோதமாக எழும்பிக் கலகம் செய்யலாயினர். காரியங்களை ஒழுங்கு செய்யும்படி உடனே பென்டிங்க் அந்தத் தேசத்துக்கு ஆங்கிலேய சேனையொன்றை அனுப்பினர். அரசருக்கு உபகாரச்சம்பளம் ஏற்படுத்தப்பட்டது. அடுத்த ஐம்பது வருஷகாலம் மைசூரானது 'மைசூர் கமிஷன்' என்று பெயர்பெற்ற ஆங்கிலேய உத்தியோகஸ்தர்களால் ஆளப்பட்டு வந்தது. சீக்கிரத்தில் தேசம் செழித்தோங்கி வளர்ந்தது. ஜனங்களும் க்ஷேமம் அடைந்தனர். இஷ்டமான ஒருவரைச் சுவீகாரம் செய்துகொள்ள அரசருக்கு உத்தரவு கொடுக்கப்பட்டது. பிறகு அந்தப் புத்திரருக்கு உரியபிராயம் வந்ததும், மைசூர் கமிஷனை நீக்கிவிட்டு, துரைத்தனத்தார் அவரை அரசராக ஏற்படுத்தினர்.

1801-ஆம் வருஷத்தில் அயோத்தி நவாபினல் ஆங்கிலேயர்களுக்குக் கொடுக்கப்பட்ட தேசமும், சிந்தியாவினிடமிருந்து எடுத்துக்கொள்ளப்பட்ட தேசமும் சேர்ந்து ஒரு புதிய ராஜ்யமாக ஆயின. அதற்கு இப்போது அயோத்தியும் ஆக்ராவும் சேர்ந்த ஐக்கியமாகாணங்கள் என்று பெயர். அல்லகபாத்து அதற்கு முக்கிய பட்டணம். அதை ஆள்வதற்கு ஒரு லெப்டினெண்ட் கவர்னரும் நியமிக்கப்பட்டார்.

### குடகு.

குடகு மைசூருக்கு மேற்கில் மேற்குத்தொடர்ச்சி மலையிலுள்ள ஒரு சிறிய மலைப்பிரதேசம். அத்தேசத்து ஜனங்கள் கூட்டம் கூட்டமாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஒவ்வொரு தலைவன் உண்டு. பல நூற்றாண்டுகளாக அது இந்திய அரசர்களால் ஆளப்பட்டு வந்தது. ஹைதரும் திப்புவும அந்தத் தேசத்தைப் பிடித்தார்கள்; பிடித்தும், அங்கிருந்தவர்கள் அடிக்கடி கலகம் செய்தபடியால், அதனை ஆளமுடியாமல் விட்டுவிட்டார்கள். திப்பு மரணம் அடைந்தபின் அங்கு ஆண்டுவந்த அரசர் வழிக்கு ஒருவரும் போகவில்லை. பிறகு வந்த அரசர்கள் இருவரும் நன்றாக ஆளவில்லை. பென்டிங்க் காலத்தில் இருந்த வீரராஜர் என்பவரோ முன்னிருந்தவர்களைக்காட்டிலும் மிகவும் கொடுமை உள்ளவராக இருந்தார். அவர் அநேகம் ஜனங்களைக் கொன்றதன்றி, தம்முடைய சகோதரர்களையும்

தொன்றூர். ஒருவரும் அங்கே நிர்ப்பயமாய் இருக்க முடியவில்லை. தப்பிப்போகக் கூடியவர்கள் எல்லாரும் தேசத்தைவிட்டு ஓடிப்போனார்கள். அவருக்குப் புத்திகற்பிக்க அநேகம் ஆங்கிலேய உத்தியோகஸ்தர்கள் அனுப்பப்பட்டனர்; ஆயினும் அவர் ஒருவர் பேச்சையும் கேட்கவில்லை. 1834–ஆம் வருஷத்தில் பெண்டிங்க் ஒரு சேனையைக் குடகுக்கு அனுப்பினார். அரசருடைய படைவீரர்கள் மிகவும் தைரியமாய்ப் போர் புரிந்தனர்; பின்பு அரசரே காட்டுக்குள் ஓடிப்போய்விட்டார்; ஆயினும் சீக்கிரத்தில் அவர் பிடிக்கப்பட்டார். பிறகு கவர்னர்ஜனரல் வேறொர் அரசனை ஏற்படுத்திக்கொள்ளும்படி குடகு நாட்டில் உள்ள தலைவர்களிடம் சொன்னார். ஆனால் அவர்கள் யாவரும் ஒரேமனமாய் ஆங்கிலேயர்களே குடகை ஆளவேண்டும் என்றும், வேறு அரசர் வேண்டியதில்லை என்றும் சொன்னார்கள். கவர்னர்ஜனரல், அவர்களது வேண்டுகோளுக்கு இணங்கினார். அதுமுதல் குடகு பிரிட்டிஷ் இந்தியாவில் ஒருபாகம் ஆயிற்று. குடகு ஜனங்களெல்லாரும் துரைத்தனத்தாருடைய உத்தரவு பெறாமலே ஆயுதங்கள் தரித்துக்கொள்ளலாம் என்று அதுமுதல் அவர்களுக்கு அனுமதி கொடுக்கப்பட்டது. உடனே குடகுஅரசர் தேசத்தைவிட்டுப் போகவேண்டியதாயிற்று. அவருக்கு உபகாரச் சம்பளம் கொடுத்து அவரை வேலூருக்கு அனுப்பினார்கள். அப்புறம் அவர் காசிக்குப் போனார். 1852–ஆம் வருஷத்தில் இங்கிலாந்தைப் பார்க்கப்போன இடத்தில் அவர் இறந்தார்.


ஒரு குடகுநாட்டுத் தலைவன்.

## 53. ஸர் சார்லஸ் மேட்காப்.

### 1835–1836.

பெண்டிங்க் பிரபுவுக்குப் பிறகு நிரந்தரமான கவர்னர் ஜனரல் ஒருவரும் ஏற்படுத்தப்படாமையால் வடமேற்கு மாகாணத்தின் கவர்னராகிய ஸர் சார்லஸ் மெட்காப் என்பவர் ஒரு வருஷம்மட்டும் கவர்னர்ஜனரல் வேலையைப் பார்த்துவந்தார். இந்தியா ஜனங்கள் வர்த்தமானப் பத்திரிகைகளைப் பிரசுரம் செய்யலாம் என்றும், அவைகளுள் அவரவர்கள் தத்தமக்கு இஷ்டமானதை ஒருவருடைய உத்தரவுமின்றி எழுதலாம் என்றும், ஆனால் பிறருக்கு எவ்விதமான துன்பமும்தரும்படியான விஷயங்களை எழுதலாகாது என்றும், பெண்டிங்க்எழுதிவைத்திருந்த விதிகளை அவர் சட்டமாக ஏற்படுத்தினர். சமாசார பத்திரிகைகள் மற்ற இடங்களில் நடக்கும் விஷயங்களைத் தெரிவிக்கின்றன. நாம் ஒவ்வொரு இடத்திற்கும்போகமுடியாதாகையால் சமாசார பத்திரிகைகளைப் படிப்பதனல் அங்கங்கே நடக்கும் விஷயங்களை அறிந்துகொள்ளுகிறோம். அந்த அந்த



ஸர் சார்லஸ் மெட்காப்.

நாடுகளில் ஏற்படுத்தப்பட்ட விதிகளையும் சட்டங்களையும் பற்றி ஜனங்கள் கொண்டிருக்கிற அபிப்பிராயம் இன்னதென்று துரைத்தனத்தார் அறிந்துகொள்வதற்குப் பத்திரிகைகளே உதவியாக இருக்கின்றன. அந்த விதிகளும் சட்டங்களும் ஒழுங்காக நடக்கவில்லை என்று தெரிந்தாலும், அவைகளால் குடிகளுக்குக் கெடுதி உண்டாகுமென்று தெரிந்தாலும், துரைத்தனத்தார் அவ்விதிகளையும் சட்டங்களையும் சீர்திருத்தக் கூடியவர்கள் ஆகின்றனர். 1835–ஆம் வரு

ஷத்திற்கு முன் ஆறு சமாசார பத்திரிகைகள் மட்டுமே இருந்தன. இப்பொழுதோ அவை எண்ணூற்றிற்கு மேலாக இருக்கின்றன.



## 54. பத்தாவது கவர்னர்ஜனரலாகிய ஆக்லண்ட் பிரபு.

### 1836-1842.

மொகலாய ராஜ்யத்தின் ஒரு பாகமாகிய ஆப்கானிஸ்தானமானது, சிந்து பெலுச்சிஸ்தானங்களைக் கைப்பற்றிய ஆமதுஷாவினுடைய காலம் முதல் அந்தத் தேசத்து அமீர்கள் என்னும் அரசர்களால் ஆளப்பட்டுவந்தது. அவர் இறந்துபோனபிறகு ரஞ்சித் ஸிங்கு என்னும் பெயர்பெற்ற சிக்கியத்தலைவர், பஞ்சாப்தேசத்தை ஆப்கானியரிடத்திலிருந்து வென்று தனி ராஜ்யமாகச் செய்தார். சிந்து தேசமும், 'சிந்து அமீர்கள்' என்ற பெலுச்சித்தலைவர்களால் ஜயிக்கப்பட்டது. ஆப்கானிஸ்தானத்திலும் அநேக வருஷமாய் யுத்தமும் கலகமும் நிறைந்திருந்தன. இதற்குக் காரணம் அநேகம் ஆப்கானியத்தலைவர்கள் சிம்மாசனத்திற்காக ஒருவரோடொருவர் போர் புரிந்துவந்ததே.



ஆக்லண்ட் பிரபு.

பத்தாவது கவர்னர்ஜனரலாகிய ஆக்லண்ட் பிரபுவின் காலத்தில் ஆப்கானிஸ்தானத்தின் சிம்மாசனத்திற்கு உரிமையுள்ளவர்கள் என்று கிளம்பிய தலைவர்கள், ஆமதுஷா வம்சத்தில் தோன்றிய ஷாஷுஜா என்பவரும் ஆமதுஷாவின் முதல்

மந்திரியின் சந்ததியாராகிய தாஸ்த் மகம்மது என்பவருமே. இந்த இருவர்களில், தாஸ்த் மகம்மது, மிக்க பலமுடையவராகையால், ஷாஷுஜாவைக் காபூலைவிட்டுத் துரத்திவிட்டார். ஷாஷுஜா இந்தியாவிற்கு ஓடிவந்தார். ஆங்கிலேயர்கள் அவருக்கு உபகாரச்சம்பளம் கொடுத்தனர்.



ஷாஷுஜா.

தாஸ்த் மகம்மது, ரஞ்சித்ஸிங்கினிடத்திலிருந்து பஞ்சாபின் பாகமாகிய பெஷாவரை ஆப்கானியருக்கு வாங்கிக் கொடுக்கும்படி கவர்னர் ஜனராலுக்குக் கடிதம் எழுதிக்கேட்டார். ரஞ்சித்ஸிங்கு ஆங்கிலேயரோடு நட்புக்கொண்டவராதலால், அவர் அங்ஙனம் செய்யமுடியாமல் போய்விட்டது. இதனால் தாஸ்த் மகம்மது மிகவும் கோபம் அடைந்தார்.

அந்தச் சமயத்தில் ரஷியர்கள் மத்திய ஆசியாவின் மூலமாக ஆப்கானிஸ்தானத்தை நோக்கி வந்து அநேகம் தேசங்களைப் பிடித்துவிட்டனர். இந்தியாவின்மேல் ஒருவேளை அவர்கள் படையெடுப்பார்களோ என்று சிறிது பயம் இருந்தது. அவர்கள் தாஸ்த் மகம்மதுவினிடத்தில் ஓர் உத்தியோகஸ்தரை அனுப்பினர்கள். தாஸ்த் மகம்மதும் அவர்களோடு உடன்படிக்கை செய்துகொண்டார்.



தாஸ்த் மகம்மது.

ரஷியர்கள் ஒருவேளை இந்தியாவின்மீது படையெடுத்து வந்தாலும் அவர்களோடு யுத்தம் செய்து ஆங்கிலேயருக்கு உதவிபுரிய வல்லவரான அமீர் ஒருவர் ஆப்கானிஸ்தானத்தில் இருப்பது நலமென்று கவர்னர்ஜனரல் நினைத்தார். ஆதலால் ஆங்கிலேயருக்கு நண்பரும் ஆப்கானிஸ்தானத்திற்கு நியாயமான உரிமை உள்ளவருமான ஷாஷூஜாவை மறுபடியும் சிம்மாசனத்தில் ஏற்றவேண்டும் என்று அவர் நிச்சயித்தார்.

1839–ஆம் வருஷத்தில் ஆங்கிலப்படை யொன்று சிந்து நதியைக் கடந்து போலன் கணவாயைத் தாண்டி, பெலுச்சிஸ்தானத்தின் மார்க்கமாய், காந்தஹாருக்குச் சென்றது. அந்த இடம் பிடிக்கப்பட்டவுடன், சேனை கஜினியை நோக்கிச் சென்று கடும்போர்புரிந்து அதனையும் கைப்பற்றிக்கொண்டது. அப்பால் தாஸ்த் மகம்மது வடக்கு நோக்கி, போக்காராவுக்கு ஓடிப்போனார். பிறகு ஆப்கானிஸ்தானத்தின் சிம்மாசனத்தில் ஷாஷூஜா ஏற்றப்பட்டார். பயமின்றி அவர் அரசு புரியும் பொருட்டு ஸர் வில்லியம் மாக்நாட்டன் என்னும் ஆங்கிலேய உத்தியோகஸ்தரும் அவ்விடம் வைக்கப்பட்டார்.


அக்பர்கான்.

அடுத்த வருஷம் தாஸ்த் மகம்மது ஆங்கிலேயரிடத்தில் வந்து அடைக்கலம் புகுந்தார். அவரை ஆங்கிலேயர்கள் கல்கத்தாவுக்கு அனுப்பி அன்போடு உபசரித்து வைத்திருந்தார்கள்; ஆனால் அவருடைய புத்திரர் அக்பர்கான் என்பவர், மூர்க்க குணம் உள்ளவராகையால், ஆங்கிலேயருக்கு அடங்கி நடக்க விரும்பவில்லை. அவரோடு அநேக ஆப்கானியரும் சேர்ந்துகொண்டார்கள். ஷாஷூஜா அரசாட்சி செய்ய முடியாத பலக்குறைவுள்ளவராதலால், அவருடைய

சொந்த ஜனங்களே அவரை வெறுத்தார்கள். அவரைச் சிம்மாசனத்தி லேற்றியபிறகு, ஆங்கிலேய சேனையானது, காபூலிலிருந்த ஆங்கிலேய உத்தியோகஸ்தர்களைப் பாதுகாக்கும் பொருட்டு ஒரு பாகத்தை விட்டுவிட்டு, இந்தியாவிற்குத் திரும்பி வந்துவிட்டது.

ஷாஷுஜா அரசாளத் தொடங்கி இரண்டு வருஷம் ஆனபிறகு, 1842-ஆம் வருஷம், அக்பர்கானைச் சேர்ந்த ஆப்கானியர் ஆயுதபாணிகளாய் அவரை எதிர்த்தார்கள். ஸர் வில்லியம் மாக்நாட்டன் சமாதானம் செய்ய முயற்சி செய்தார். அக்பர்கானோடு நிராயுதபாணியாய், சிநேக முறையாகப் பேசிக்கொண்டு இருக்கையில் அக்பர்கான் அவரைத் திடீரென்று சுட்டுவிட்டார்; அவ்வளவில் ஆப்கானியரும் அவரைத் துண்டம் துண்டமாக வெட்டியெறிந்தனர்.



கர்ட் காபூல் கணவாயிலுள்ள ஆப்கானியர்.

பிறகு அவர்கள் காபூலை எதிர்த்தனர். அங்கிருந்த ஆங்கிலேய தளகர்த்தர் அத்தனை பேர்களோடு எதிர்த்து யுத்தம்

செய்வதற்குப் போதுமான பலம் தமக்கு இல்லையென்று பயந்தார். ஆங்கிலேய வீரர்களுக்குப் போதுமான ஆகாரமும் இல்லை. ஆதலால் அவர் இந்தியாவிற்குத் திரும்பிப் போய்விடுவதாக ஒத்துக்கொண்டார். இது ஒரு பெரிய தவறு. ஆற்காட்டில் கிளைவ் செய்ததுபோலத் தமக்கு உதவி வருமளவும் அந்தக் கோட்டையை அவர் காத்துக்கொண்டிருக்கவேண்டும். சேனையை வழியில் எதிர்ப்பதில்லையென்று ஆப்கானியர் ஒத்துக்கொண்டனர். ஆனால் அவர்கள் வாக்குத்தவறி நம்பிக்கைத் துரோகம் செய்தனர். ஆங்கிலேய சேனையானது குறுகிய கர்ட்காபூல் கணவாயின் வழியாய்ப் போகையில் ஆங்கிலேய போர்வீரர்கள்மீதும் சுதேச வீரர்களின்மீதும் மேலே மலையிலிருந்து பல்லாயிரம் ஆப்கானியர் துப்பாக்கியால் சுட்டார்கள். டாக்டர் பிரைடன் என்பவர் ஒருவர் தவிர எல்லோரும் கொலையுண்டனர்.

## 55. பதினோராவது கவர்னர்ஜனரலாகிய எல்லேன்பரோ பிரபு.

### 1842–1844.

ஆங்கிலேய சேனை காபூலிலிருந்து திரும்பியபிறகு ஆக்லண்ட் பிரபு இங்கிலாந்துக்குத் திரும்பிச் சென்றார். உடனே எல்லென்பரோ பிரபு கவர்னர் ஜனரலாக வந்தார்.

காந்தஹாரில் ஜெனரல் நாட் என்பவரிடம் ஒன்றும், ஜலலபாத்தில் ஜனரல் ஸேல் என்பவரிடம் ஒன்றுமாக, ஆப்கானிஸ்தானத்தில் இரண்டு சிறிய ஆங்கிலேயசேனைகள் இருந்தன. அங்கே அந்தச் சேனைவீரர்கள் அந்தக் கோட்டைகளை விடாமல் காவல் காத்து வந்தனர். அப்பொழுது இந்தியாவிலிருந்து ஜனரல் பாலக் என்னும் தளகர்த்தர் வசம் ஒரு பெரிய படை வந்து சேர்ந்தது. அவர் கைபர் கணவாயின் வழியாய் ஜலலபாத்திற்குச் சென்று ஜனரல் ஸேல் என்பவரை மீட்டார். பிறகு அக்பர்கானோடும் ஆப்கானியரோடும் ஒரு பெரிய யுத்தம் நடந்தது. அதில் ஆப்கானியர் துரத்திவிடப்பட்டனர். அப்பால் ஜனரல் பாலக் காபூல் நகருக்குச் சென்று அதைத் தம் வசமாக்கிக்கொண்டார். ஆங்கிலேயர் இல்லாத சமயத்தில் ஷாஷுஜா அக்பர்கானு

டைய போர்வீரர்களால் கொலையுண்டதை அறிந்தவளவில், காபூல் கோட்டையை அழித்துவிட்டு, ஆங்கிலேய சேனை இந்தியாவிற்குத் திரும்பிற்று. தாஸ்த் மகம்மது கல்கத்தாவில் சிறையினின்றும் விடுதலையடைந்து ஆங்கிலேயருக்கு நண்பராய்த் தமது நாட்டை ஆளும்படி காபூலுக்குத் திரும்ப அனுப்பப்பட்டார்.

### சிந்துதேசம் ஆங்கிலேயர்களுக்கு வசமானது.

1839–ஆம் வருஷத்தில் சிந்துதேசத்து அமீர் ஆங்கிலேயர்களோடு உடன்படிக்கை செய்துகொண்டார். 1842–ஆம் வருஷத்தில் ஆங்கிலேய சேனைகள் சிந்து தேசத்தின் வழியாக ஆப்கானிஸ்தானத்துக்குப் போனபோது அமீர் அந்தச் சேனைகளுக்கு மிகவும் உதவிபுரிந்தார். ஆப்கானியரால் ஆங்கிலேய சேனை துண்டந் துண்டமாக வெட்டுண்ட சமாசாரத்தைச் சிந்து தேசத்திலிருந்த அமீர்கள் கேள்வியுற்ற பொழுது, அவர்கள் ஆங்கிலேயரோடு செய்திருந்த உடன்படிக்கையை மீறிப் போர்தொடங்கினார்கள். அவர்கள் அங்கிருந்த ஆங்கிலேய ரெஸிடெண்டாகிய ஜெனரல் ஔட்ராம் என்பவரை



எல்லென்பரோ பிரபு.

எதிர்க்க அவர் உயிர்தப்பியோடினார். ஸர் சார்லஸ் நேப்பியர் மூவாயிரம் வீரர்களடங்கிய ஒரு படையோடு அவர்கள்மேல் எதிர்த்துச் சென்றனர். அமீர்களிடத்தில் முப்பதினாயிரம் பெலுச்சிப் படைவீரர்கள் இருந்தனர். சிந்துநாட்டில் உள்ள மியானி, ஹைதராபாத்து என்னும் இடங்களில் இரண்டு பெரிய யுத்தங்கள் நடந்தன. அவைகளில் ஸர் சார்லஸ் நேப்பியரே ஜயமடைந்தார். பிறகு கவர்னர்ஜனரல் சிந்து நாட்டை ஆங்கிலேய ராஜ்யத்தில் சேர்த்துக்கொண்டார்.

### குவாலியர்.

பென்டிங்க் பிரபுவினால் சிம்மாசனத்தில் ஏற்றப்பட்டுக் குவாலியரில் அரசாண்டுவந்த ஜங்காஜி ஸிந்தியா சந்ததியின்றி இறந்தனர். அவர் வலிமையற்ற அரசராய் இருந்தார். அவர் கீழுள்ள முக்கியமான தலைவர்கள் அவருக்கு அடங்கி நடக்கவில்லை. அவர்களுடைய படை வரவர அதிகரித்து வீணான நஷ்டத்துக்குக் காரணமாய் இருந்தது. தேச வரும்படியில் மூன்றில் இரண்டுபங்கு அதற்கே செலவாயிற்று; சிந்தியாவின் மனைவியாகிய பன்னிரண்டு வயதுள்ள ஒரு பெண்ணுக்கு ஒரு சிறுவனைச் சுவீகாரம் செய்துகொள்ளும்படி அனுமதி கொடுக்கப்பட்டது. அவள் அதன் பிறகு தனது கணவரிடத்தில் இருந்த விவேகமுள்ள பழைய மந்திரியை நீக்கிவிட்டு ஆங்கிலேயரோடு யுத்தத்திற்கு ஆரம்பித்தாள்.



ஸர் சார்லஸ் நேப்பியர்.

ஸர் ஹியூ கவ் என்பவர் ஒரு பெரிய சைனியத்துடன் ஆக்ராவிலிருந்து புறப்பட்டுப்போய் மகராஜபுரம், பன்னியார் என்னும் இடங்களில் நடந்த பெருஞ் சண்டைகளில் குவாலியர் தலைவர்களை வென்றனர். சுவீகாரம் செய்துகொள்ளப்பட்ட சிறு பையனாகிய ஜீயாஜீ என்பவன் தக்க பிராயம் அடையும்அளவும் தேசத்தை ஆள்வதற்கு, கவர்னர் ஜனால் ஆறு மகாராஷ்டிர கனவான்கள் கூடிய ஒரு சபையை நியமித்தார். 40,000 வீரர்களுள்ள பெரிய சேனையானது 9,000 வீரர்கள் உள்ள சேனையாகக் குறைக்கப்பட்டது. குவாலியரில் கலகம் உண்டாகாதபடி ஓர் ஆங்கிலேய சேனையும் வைக்கப்பட்டது.



## 56. பன்னிரண்டாவது கவர்னர்ஜனரலாகிய ஹார்டிஞ்சு பிரபு.

1844–1848.

### பஞ்சாப் யுத்தம்.

எல்லென்பரோ பிரபுவுக்குப் பிறகு கவர்னர்ஜனரலாக வந்தவர் ஹார்டிஞ்சு பிரபு. சமீபகாலத்தில் கவர்னர்ஜனரலாக இருந்த லார்ட் ஹார்டிஞ்சுக்கு இவர் பாட்டனார்.

'பஞ்சாப் சிம்மம்' என்று பெயர்வாய்ந்த ரஞ்சித்ஸிங்கினால் பஞ்சாப் தேசம் மிகவும் பலமுள்ள ராஜ்யமாகச் செய்யப்பட்டது. அவருக்கு எழுதப் படிக்கத் தெரியாது. தம்முடைய கணக்குகளையெல்லாம் அவர் ஒரு கொம்பில் கோடு கிழித்துக் குறித்துக் கொள்வது வழக்கம். அவர் வடிவத்தில் குள்ளமானவர். வசூரியால் அவருக்கு ஒரு கண் போயிற்று; முகமெல்லாம் அம்மை வடுக்கள் நிரம்பியிருந்தன. அவர் ஆங்கிலேயருக்கு உண்மையான நண்பர்; விவேகம் உள்ளவர்: தம் கீழிருக்கும் அதிகாரிகளை அடக்கிவைத்துச் செவ்வையாய் அரசாட்சி செய்யும் திறமை உடையவர். அதனால் ஜனங்களும் அவரிடத்தில் அதிக அன்பு வைத்திருந்தார்கள். அவர் பிரெஞ்சு உத்தியோகஸ்தர்களால் பழக்கப்பட்ட பலமான படையையும் அநேகம் பீரங்கிகளையும் உடையவர்; ஆகையால் காஷ்மீர தேசத்தை எளிதில் கைப்பற்றிக்கொண்டார்.



ஹார்டிஞ்சு பிரபு.

நாற்பது வருஷகாலம் அரசாண்டபின் 1839–ஆம் வருஷத்தில் அவர் மரணம் அடைந்தார். அவருடையராணிகளுள் ஐவர் உடன்கட்டை ஏறினர். அவருடைய மூத்த குமாரர் பட்டத்துக்கு வந்தார்; ஆயினும் அவர் சீக்கிரத்தில் பட்டத்திலிருந்து நீக்கிவிடப்பட்டார். அடுத்த இரண்டு மூன்று வருஷகாலம் பல துராலோசனைகள் ஒன்றன்பின் ஒன்றாக நடந்தன. அநேக அரசகுமாரர்கள் கொலையுண்டார்கள். முடிவில் சீக்கிய சேனாதிபதியான தேஜ் ஸிங்கு என்பவர் சர்வாதிகாரியானார். ஆப்கானிஸ்தானத்திலிருந்து ஆங்கிலேயர் ஓடிவந்தது முதற்கொண்டு சீக்கியப் போர்வீரர்கள் ஆங்கிலேயரை ஜயிப்பதற்குப் போதுமான பலம் தங்களிடத்தில் உண்டென்று எண்ணி டில்லியைக் கொள்ளையடிக்க விரும்பி ஸட்லெஜ் நதியைக் கடந்து பிரிட்டிஷ் இந்தியாவில் புகுந்தனர்.



ரஞ்சித் ஸிங்கு.

ஆங்கிலேயருக்கும் சீக்கியர்களுக்கும் மூன்றுவார காலத்தில் நான்கு பெரிய சண்டைகள் நடந்தன. சீக்கியர்கள் யுத்த முறையில் நன்றாகப் பழக்கப்பட்டவர்களாதலால் மிகவும் கடுமையாக யுத்தம் செய்தனர். இந்தியாவில் ஆங்கிலேயர்களால் எதிர்க்கப்பட்ட சத்துருக்களுள் இவர்களே மிகவும் பலசாலிகள். ஆனால் இவர்கள் 1845–ஆம் வருஷம் டிசம்பர் மாதத்தில் முட்கி, பிரோஜ்ஷா என்னும் இடங்களில் முக்கிய தளகர்த்தராகிய ஸர் ஹியூ கவ் என்பவராலும் கவர்னர்ஜனாலாகிய ஹார்டிஞ்சு பிரபுவாலும், 1846–ஆம் வருஷம் ஜனவரி மாதத்தில் அலிவால் என்னும் இடத்தில் ஸர். ஹச். ஸ்மித் என்பவராலும், ஸோப்ரயான் என்னும் இடத்தில் ஸர் ஹியூ கவ் என்பவராலும் தாக்கி யடிக்கப்பட்டனர்.



அலிவால் சண்டை.

முதலாவது சிக்கிய யுத்தம் உடனே முடிந்தது. சிக்கிய சேனையின் தொகை இருபதினாயிரமாகக் குறைந்துவிட்டது. ஆங்கிலேயர்கள் சட்லெஜ் நதிக்கும் ராவி நதிக்கும் நடுவிலுள்ள பஞ்சாபின் பாகத்தை வசப்படுத்திக்கொண்டனர். அதேகாலத்தில், ரஞ்சித் ஸிங்கின் அதிகாரத்தில் காஷ்மீரத்துக் கவர்னராயிருந்த குலாப் ஸிங்கு என்னும் ராஜபுத்திரரை அத்தேசத்துக்கு அரசராக்கினர். அவர் அதற்குப் பதிலாக முன்நடந்த சண்டையில் உண்டான செலவைக் கொடுத்தார். ரஞ்சித் ஸிங்கின் சிறு புதல்வராகிய துலீப் ஸிங்கு என்பவரைப் பஞ்சாபுக்கு அரசராக நியமித்து, அவர் தக்க பிராயம் அடையும் அளவும் அவர் தாயாரைப் பிரதிநிதியாக இருக்கும்படி ஏற்படுத்தினார்கள்.

## 57. பதின்மூன்றுவது கவர்னர்ஜெனரலாகிய டல்ஹௌஸி பிரபு.

### 1848–1856.

#### பஞ்சாப் ஆங்கிலேயர்கள் வசமானது.

டல்ஹௌஸி பிரபு 1848–ஆம் வருஷத்தில் இந்தியாவுக்கு வந்து எட்டு வருஷகாலம் கவர்னர்ஜெனராலாக இருந்தார். பிரிட்டிஷ் இந்தியாவை ஸ்தாபித்தவர்களில்

இவர் நான்காவது பிரபு. லார்ட் கிளைவ், லார்ட் வெல்லெஸ்லி, லார்ட் ஹேஸ்டிங்ஸ் என்பவர்களைப்போல இவரும் பல சுதேச நாடுகளை ஆங்கிலேய அரசாட்சிக்கு உட்படுத்தினர். இவர்காலத்தில் தேசமானது முன்னிலும் அதிகமான செல்வத்தையும் நன்மையையும் அடைந்தது.



டல்ஹௌஸி பிரபு.

இந்தியாவில் டல்ஹௌஸி பிரபு வந்து சேர்ந்து ஆறுமாதம் ஆவதற்கு முன்னமே, சீக்கியர்களோடு இரண்டாவது முறை யுத்தம் செய்யும்படி நேரிட்டது. மூல்டானில் சீக்கிய கவர்னராயிருந்த மூல்ராஜ் என்பவர் சிறுபிராயமுள்ள இரண்டு ஆங்கிலேய உத்தியோகஸ்தர்களைக் கொன்றுவிட்டு, ஆங்கிலேயரை எதிர்க்குமாறு சீக்கியர்களையும் தூண்டினர். சீக்கியத்தலைவர்களும் அதற்கு உடன்பட்டு மூன்று வருஷங்களுக்குமுன்பு வேலையைவிட்டு நீக்கப்பட்ட பழைய போர்வீரர்களையெல்லாம் ஒருங்குசேர்த்து, ஒரு பலமான படையை ஷியர்ஸிங்கு என்னும் தளகர்த்தன் வசம் அனுப்பி ஆங்கிலேயரை எதிர்த்தார்கள்.

அவர்களோடு சண்டை செய்யுமாறு ஸர் ஹியூ கவ் என்பவர் புறப்பட்டார். சில்லியன்வாலா என்னும் இடத்தில் ஒரு பெருஞ்சண்டை நடந்தது. அதில் ஆங்கிலேயர் ஜயமடைந்தும் மிகுந்த நஷ்டம் அடைந்தனர். ஆனல் உடனே கூர்ஜ்ஜரத்தில் நடந்த சண்டையில் சீக்கியர்கள் முற்றிலும் தோற்றுப்போனர்கள்.

பஞ்சாபில் இடைவிடாது நடக்கும் சண்டையை நிறுத்தும்படிக்கும், ஆப்கானியரிடத்திலிருந்து இந்தியாவைக்



கூர்ஜரத்துச் சண்டை.

காத்துவரும் பொருட்டும், டல்ஹௌஸி பிரபு பஞ்சாப் நாட்டை ஆங்கிலேய அதிகாரத்துக்கு உட்படுத்தினர். ஆறு லக்ஷம் ரூபாய் உபகாரச் சம்பளமாகக் கொடுத்து, துலீப் ஸிங்கு என்பவரை இங்கிலாந்துக்கு அனுப்பிவிட்டனர்; அவ்விடத்தில் அவர் ஓர் ஆங்கிலேய பிரபுவைப்போல் வசித்து வந்தார். பின்பு கவர்னர் ஜனரலான ஜான் லாரேன்ஸ் என்பவர் 'பிரதான கமிஷனர்' என்னும் பட்டத் துடன் அந்நாட்டிற்கு அதிபதியாக நியமிக்கப்பட்டனர். தைரியமுள்ள சீக்கியர்கள், ஆங்கிலேய உத்தியோகஸ்தரிடம் போர்வீரர்களாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள். அவர் களும் கூர்க்கர்களும் சேர்ந்த பட்டாளங்களே இந்தியாவில் இப்போது மிக்க மேன்மையும் பலமும் பொருந்தியவை. பஞ்சாபிலுள்ள நிலங்கள் மிகவும் ஒழுங்காக அளவிடப் பட்டன. ரஞ்சித் ஸிங்கின் காலத்தில் விளைபொருளில் பாதி நிலவரியாக இருந்தது; அப்பால் அது காற்பங்கிற்கும் குறைவாகச் செய்யப்பட்டது. அந்நாட்டின் வழியாய்க் கொண்டுபோகப்படும் பொருள்களின்மேல் ஏற்பட்டிருந்த வரியை நீக்கிக் கள்ளர் கூட்டங்களையெல்லாம் அழித்து அங் கங்கே பல சாலைகளையும் வாய்க்கால்களையும் ஏற்படுத்திக்



ரங்கூனிலுள்ள ஷ்வே தேகன் கோயில்.

கல்வியபிவிருத்தியின் பொருட்டுப் பற்பல பள்ளிக்கூடங்களை ஸ்தாபித்தனர். நியாயமான நல்ல சட்டங்கள் ஏற்படுத்தப்பட்டன. அதற்கு முன் எக்காலந்தும் சிக்கியர்களுக்கு இப்படிப்பட்ட அரசாட்சி இருந்ததேயில்லை.

பர்மா யுத்தம்.

பர்மாதேசத்து அரசர் 1826–ஆம் வருஷத்தில் செய்த யாந்தபூ உடன்படிக்கைக்கு விரோதமாக அடிக்கடி நடந்து

வந்தார். அத்தேசத்தார்கள் ஆங்கிலேயக் கப்பல்களின் மாலுமித்தலைவர்களைச் சிறையில் அடைத்தார்கள். அவ்விதமாக ஏன் செய்தார்கள் என்று ஓர் ஆங்கிலேய உத்தியோகஸ்தரை அனுப்பிக் கேட்டபொழுது, அவர்கள் அவரைக்கொலை செய்ய முயன்றார்கள்.

பிறகு டல்ஹௌஸி பிரபு பெகு என்னும் நாட்டை வேறு இரண்டு சிறிய ராஜ்யங்களோடு சேர்த்து அதற்கு, பிரிட்டிஷ் பர்மா என்னும் பெயரைக் கொடுத்து ரங்கூனைத் தலைநகரமாக்கினார். அதுமுதல் ரங்கூன் முக்கிய துறைமுகப் பட்டினமாக இருந்துவருகிறது. தேசம் முழுவதும் செழித்தும், செல்வம் நிரம்பியும் உள்ளது.

### சுதேச ராஜ்யங்கள் ஆங்கிலேயர்களுக்கு உட்பட்டது.

டல்ஹௌஸி பிரபு பஞ்சாபையும், பர்மாவையும் யுத்தத்தில் வென்றார். சில சுதேச மன்னர்கள் சந்ததியில்லாமல் இறந்துபோனமையால், அவர்களுடைய மனைவிகளுக்குச் சுவீகாரம் எடுத்துக்கொள்ள அதிகாரம் இல்லையென்று சொல்லி அந்த ராஜ்யங்களையும் ஆங்கிலேய ராஜ்யத்தோடு சேர்த்துவிடும்படி செய்தார்.

### சதாரா.

1818–ஆம் வருஷத்தில் பேஷ்வா க்ஷீணதசை அடைந்த பிறகு, **சதாரா** என்னும் மகாராஷ்டிர ராஜ்யமானது, சிவாஜி வம்சத்தைச் சேர்ந்த ஓர் அரசகுமாரருக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. அவர் சந்ததியின்றி இறந்தமையால் 1848–ஆம் வருஷத்தில் அது பம்பாய் ராஜ்யத்தோடு சேர்த்துக் கொள்ளப்பட்டது.

### மத்திய மாகாணங்கள்.

நாகபுரியில் அரசாட்சி செய்துவந்த பான்ஸ்லே வம்சத்தின் கடைசி அரசர் 1853–ஆம் வருஷத்தில் சந்ததியின்றி இறந்தார். அவருடையநாடு ஆங்கிலேய அரசாட்சியில் சேர்ந்து, மத்திய மாகாணங்கள் என்ற பெயருடன் வழங்கலாயிற்று. அதற்கு அதிகாரியாக ஒரு பிரதானீ கமிஷனர் நியமிக்கப்பட்டார். 1803–ஆம் வருஷத்தில்

வெல்லெஸ்லி பிரபுவால் ஹைதராபாத்து நைஸாமுக்குக் கொடுக்கப்பட்டிருந்த பீரார் நாடானது, அவ்விடத்தில் வைக்கப்பட்டுள்ள ஆங்கிலேய சேனையின் பாதுகாப்பின் நிமித்தம், ஆங்கிலேயர்களுக்கு 1853–ஆம் வருஷத்தில் திருப்பிக் கொடுக்கப்பட்டது. இதேவிதமாக ஜான்ஸி ராஜ்யமும் ஆங்கிலேய ராஜ்யத்தோடு சேர்ந்தது.

### அயோத்தி.

அயோத்தி நவாபு தம் குடிகளை வருத்திக்கொடுமை செய்து வந்தபடியால், அவர்கள் ஆங்கிலேயரிடத்தில் பல




தரம் முறையிட்டுக்கொண்டனர். நவாபு தமது நாட்டை நன்ருக ஆளவேண்டுமென்றும், அவ்விதம் செய்யாவிடின்

அவர் நாடு ஆங்கிலேயரால் கைப்பற்றிக் கொள்ளப்படுமென்றும் பெண்டிங்கு பிரபுவும் ஹார்டிஞ்சு பிரபுவும் அடிக்கடி எச்சரிக்கை செய்தனர்; ஆனால் நவாபு அதற்குச் சிறிதும் காதுகொடுக்கவில்லை. அயோத்தியில் கெடுதியே அதிகரித்து வந்தது. அதனால் ஆங்கிலேய துரைத்தனத்தார் அயோத்தியை ஆங்கிலேய அரசாட்சியில் சேர்த்துக்கொள்ளும்படி கவர்னர் ஜனரலுக்கு உத்தரவளித்தார்கள். பின்பு பன்னிரண்டு லக்ஷம் ரூபாய் உபகாரச்சம்பளம் ஏற்படுத்தி அந்த நவாபைக் கல்கத்தாவிற்கு அனுப்பிவிட்டார்கள்.

### சீர் திருத்தங்கள்.

1853—ஆம் வருஷத்தில் தான் முதல் முதல் இருபது மைல் நீளமுள்ள இருப்புப்பாதை ஒன்று இந்தியாவில் போடப்பட்டது. இப்பொழுது இத்தேசத்தில் 26,000 மைலுக்கு அதிகமாக இருப்புப்பாதை உண்டாயிருக்கின்றது. வித்தை விசாரணைக்காக ஒரு சபையும் ஏற்படுத்தப்பட்டது. 1833—ஆம் வருஷத்தில் கம்பெனிக்காரர்களுடைய சட்டங்கள் மாற்றப்பட்டன வென்று சொன்னோம். மறுபடி இருபது வருஷங்களுக்குப் பிறகு இந்தியாவின் விஷயம் பார்லிமெண்டில் விசாரணைக்குவந்தபோது சில புதிய சட்டங்கள் ஏற்பட்டன. பழைய சட்டங்களும் கொஞ்சம் மாறுதலையடைந்தன. வங்காள ராஜதானியை வேறாகப் பிரித்து ராஜ்யபரிபாலனத்துக்காக ஒரு லெப்டினெண்ட் கவர்னரை நியமித்தார்கள். 1853—ஆம் வருஷம் வரையில் இந்தியன் ஸிவில் ஸர்விஸ் உத்தியோக நியமனங்களை ஈஸ்ட் இந்தியா கம்பெனியார்களே வைத்துக்கொண்டிருந்தார்கள். பிறகு அந்த உத்தியோகங்களில், இந்தியர்களும், ஐரோப்பியர்களும் நியமனம் பெறலாமென்றவிதி ஏற்படுத்தப்பட்டு அதற்காக இங்கிலாந்தில் அதுமுதல் ஒரு பரீக்ஷையும் நடத்தப்பட்டுவருகிறது. ஜாதிபேதம் மதபேதம் பாராமல் அந்தப் பரீக்ஷையில் முதலில் தேறுபவர்களுக்கே அந்த உத்தியோகம் அளிக்கப்பட்டு வருகிறது. இந்த ஏற்பாட்டினால் இப்போது சில பிராமணர்களும், ரஜபுத்திரர்களும், மகம்மதியர்களும், பாரசிகர்களும் இந்திய கிறிஸ்தவர்களும் மேற்படி பரீக்ஷையில் தேர்ச்சி பெற்று இந்தியன் ஸிவில் ஸர்விஸில் சேர்ந்திருக்கிறார்கள்.

புகை வண்டிகளுடன் தந்தியையும் டல்ஹௌஸி ஏற்படுத்தினார். தந்தியினாலும் இருப்புப் பாதையினாலும் கிடைத்த லாபத்திற் கொஞ்சம் தாம் எடுத்துக்கொண்டார். தபால் அனுப்பும் வழக்கத்தை முதலில் ஏற்படுத்திய பிரபு அவரே; அரை அணா தலையை ஒட்டிக் கடிதங்களை எந்த இடத்துக்கும் அனுப்பலாமென்று அவர் ஏற்பாடு செய்தார்.

### சாலைகளும், வாய்க்கால்களும்.

சாலைகள் போடவும், கால்வாய்கள் வெட்டவும், அணைக் கட்டுக்கள் கட்டவும், காம்பு நிலங்களைத் திருத்தவும் டல்ஹௌஸி பிரபு பொதுஜனவேலை இலாகா என்ற ஓரிலாகாவை (P. W. Department) ஏற்படுத்தினார். அவருடைய காலத்தில் இரண்டாயிரம் மைல்கள் நீளமுள்ள சாலைகள் போடப்பட்டுப் பல பாலங்களும் கட்டப்பட்டன. கால்வாய்கள் எல்லாவற்றிலும் நீளமான கங்கையின் பெரியகால்வாய் வெட்டப்பட்டது அவர் காலத்திலேதான். ஜலம் பாயாத நிலங்களுக்குத் தண்ணீர் மிகுதியாய்ப் பாய்ந்தது. 18,000 மைல் நீளம் வெட்டப்பட்ட அந்தக் கால்வாயின் ஜலம் பாய்வதால் பலமட்டமான நிலங்கள் செழித்து நன்செய்களாகி விட்டன. இதனால் தேசத்தில் வியாபாரம் விருத்தியாயிற்று.

### கல்வியபிவிருத்தி.

கல்வியபிவிருத்திக்காக இங்கிலாந்தில் உள்ள அதிகாரிகள் சில ஏற்பாடுகள் செய்து லார்ட் டல்ஹௌஸிக்குத் தெரியப்படுத்தினார்கள். வித்தை விஷயங்களைக் கவனிக்கத் தனியாகவே ஓர் இலாகாவை ஏற்படுத்தினார்கள். துரைத்தனத்தாருடைய செலவில், பாடசாலைகளும் காலேஜ்களும், சர்வகலாசாலைகளும் ஏற்படுத்த வேண்டுமென்று சொன்னார்கள். பாடசாலைகளைப் பார்வையிட இன்ஸ்பெக்டர்கள் நியமிக்கப்பெற்றார்கள்.

## 58. கானிங்கு பிரபு
## பதினன்காவது கவர்னர்ஜனரல்.
### 1856–1858.

லார்ட் கிளைவ் பிளாஸிச் சண்டையில் ஜயமடைந்து இந்தியாவில் ஆங்கிலேய அரசாட்சியை நிலைநிறுத்தி நூறு வருஷங்கள் ஆன பின், 1856—ஆம் வருஷத்தில் கானிங்கு பிரபு கவர்னர்ஜனராலாக இந்தியாவுக்கு வந்தார். எங்கும் சமாதானமே குடிகொண்டிருந்தது. யாதோர் அபாயமும் காணப்படவில்லை; ஆனல் திடீரென்று வங்காளத்தில் ஒரு பெருங் குழப்பம் உண்டாயிற்று. அக்குழப்பம் சுதேச சேனையின் கலகமே.

ஆங்கிலேயர்கள் இந்தியாவுக்கு வந்து நூறு வருஷங்களானமையால் ராஜ்யத்தில் ஏதேனும் கெடுதிநேரிடுமென்று சில ஜோஸ்யர்கள் சொன்னர்கள்; சிபாய்களும் அதை நம்பிவிட்டார்கள்.

சுதேச அரசர்கள் சுவீகாரம் எடுத்துக் கொள்ளக் கூடாதென்று சொல்லி ஆங்கிலேய ராஜ்யத்தோடு பெகு ராஜ்யத்தை டல்ஹௌஸி சேர்த்துக்கொண்டதனல், பாக்கியுள்ள சில சுதேச ராஜ்யங்களும் ஆங்கிலேய ராஜ்யத்தோடு சேர்த்துக் கொள்ளப்படுமோ என்று ஜனங்கள் பயந்தார்கள். பாடசாலைகளில் ஆங்கிலபாஷையைக் கற்பிக்கும்படி செய்தது இந்தியர்களைக் கிறிஸ்தவர்களாக்குவதற்காக என்றும், இருப்புப்பாதைகளும் தந்திக் கம்பிகளும் பூமியைக்கட்டுவதற்கு ஏற்பட்ட சங்கிலிகள் என்றும் சில மூட ஜனங்கள் சொல்லிக்கொண்டு கலகஞ்செய்தார்கள். சில துஷ்டர்கள் இந்தமாதிரியான கட்டுக்கதைகளை வங்காளத்திலும் அயோத்தியிலும் இருந்த சிபாய்களிடத்தில் பரவச்செய்தார்கள். அதே சமயத்தில் கொழுப்புத்தடவி யதோட்டாக்கள் கொண்ட புதுமாதிரியான துப்பாக்கிகள் சிபாய்களுக்குக் கொடுக்கப்பட்டன. தங்கள் மதத்தைக்கெடுப்பதற்காகவே தோட்டாவில் கொழுப்பானது தடவப்பட்டதென்றும் ஆதலால் அம்மாதிரியான தோட்டாக்களை உபயோகிப்ப தில்லையென்றும் சிபாய்கள் சொல்லிவிட்டார்கள். அது தெரிந்த ஆங்கி

லேயர்கள் அந்தத் துப்பாக்கிகளுக்குப் பதிலாக வேறு புதிய துப்பாக்கிகளைக் கொடுத்தார்கள். சிபாய்களுக்கு அப்போதும் சந்தேகம் தெளியவில்லை.

அதே காலத்தில் ஆங்கிலேயர்களுடைய விரோதிகள், எரிகிற வீட்டில் நெருப்பு வைப்பதுபோல், சிபாய்களைத் தூண்டினார்கள். அவர்களுள் முக்கியமானவர்கள் நானாசாகேபும், மொகலாய சக்கரவர்த்தியின் சந்ததியார்களும், அயோத்தியிலும் வடமேற்கு மாகாணத்திலும் இருந்த சில அதிகாரிகளுமாவர்.



கானிங்கு பிரபு.

நானாசாகேப் கடைசி பேஷ்வாவின் சுவீகாரபுத்திரர். தகப்பனாருக்குக் கொடுத்து வந்த உபகாரச் சம்பளத்தை ஆங்கிலேயர்கள் நானாசாகேபுக்குக் கொடாமல் நிறுத்திவிட்டதால் அவர் கோபங்கொண்டார்.

மொகலாய சக்கரவர்த்தியின் சந்ததியார்கள் தங்கள் ராஜ்யம் போய்விட்டதே யென்ற வருத்தத்தினால் ஆங்கிலேயர்களுக்கு விரோதமாய்ச் சிபாய்களுக்கு உதவினார்கள்.

நவாபு காலத்தில் அயோத்தியிலும் வடமேற்கு மாகாணத்திலும் சௌக்கியமாயிருந்த தாலூகா அதிகாரிகள் ஆங்கிலேயர்கள் வந்ததில் தங்களுடைய அதிகாரமெல்லாம் போய்விட்டதேயென்று வருத்தமடைந்தார்கள்.

முதலில் சில பட்டாளத்தார் தங்களுடைய மேலுத்தியோகஸ்தர்களுக்குக் கீழ்ப்படிவதில்லையென்று சொன்னார்கள்; பின்பு அந்தப் பட்டாளங்கள் கலைத்து அனுப்பிவிடப்பட்டன. அவர்கள் அங்கங்கே போய் மற்றச் சிபாய்களிடத்தில், தங்களுக்கு நேரிட்டதைத் தெரிவித்தார்கள். 1857-ஆம் வருஷத்தில் டில்லிக்கருகில் ஒரு பெரிய சுதேச பட்டாளம்

தங்கியிருந்த மீரத்து என்னும் நகரத்தில் திடீரென்று கலகம் உண்டாயிற்று. அவர்கள் தங்களுடைய மேலதிகாரிகளைச் சுட்டுக் கொன்றுவிட்டு வெறி கொண்டவர்களைப்போல், தங்களுக்கு எதிரில் தோன்றிய ஐரோப்பியர்களை, குழந்தைகளென்றும் ஸ்திரீகளென்றும் புருஷரென்றும் பாராமல், கொலைசெய்தும், வீடுகளைக் கொளுத்தியும், சிறைச்சாலைகளைத் திறந்து கைதிகளை விடுவித்தும் டில்லிக்குச் சென்றார்கள்.

ஆங்கிலேயால் அதிக அன்பாய் ஆதரிக்கப்பட்டவரும் பழைய மொகலாயரின் சந்ததியாரும் வயோதிகருமான ஷா ஆலம் என்பவர் டில்லியில் இருந்தார்; பகதூர் ஷா என்றும் அவருக்குப் பெயருண்டு. ஆங்கிலேயர்கள் அவருக்கு ஏராளமான உபகாரச்சம்பளம் கொடுத்துவந்தார்கள். அவர் தாம் ஒருவேளை மறுபடியும் மொகலாய அரசராக ஆனாலும் ஆகலாமென்று நினைத்து, தாமும் தம் குமாரருமாகக் கலகக்காரரோடு சேர்ந்து, தாமே ‘இந்துஸ்தானத்தின் சக்கரவர்த்தி’ என்று வெளிப்படையாக விளம்பரம்செய்தார். கலகம் செய்த சிபாய்களிடத்திலிருந்து உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டு ஓடி அவரது அரண்மனையில் அடைக்கலம் புகுந்த ஐம்பது ஆங்கிலேய ஸ்திரீகளும் குழந்தைகளும் அவருடைய உத்தரவினால் கொல்லப்பட்டார்கள்.

கான்பூரில் இருந்த சிபாய்களுக்கு நானாசாகேப் தலைவரானார் அங்கே வாசஞ்செய்துகொண்டிருந்த ஆங்கிலேயர்களையும் அவர்களுடைய ஸ்திரீகளையும் குழந்தைகளையும் நானாசாகேபும் அவருடைய சிபாய்களும் ஒன்றுசேர்ந்து மடக்கிக்கொண்டார்கள்.

மூன்றுவாரம்வரையில் ஆங்கிலேயர்கள் உறுதியாய் நின்று எதிர்த்தார்கள். அவர்களை ஒன்றும் செய்யாமல் அலகாபாத்திற்கொண்டுபோய் விடுவதாகச் சொல்லவே அவர்கள் தங்கள் ஆயுதங்களையெல்லாம் நானாசாகேபினிடம் கொடுத்துவிட்டார்கள். நிராயுதபாணிகளாய் அவர்கள் கங்காநதி வழியாகப் போய்க்கொண்டிருக்கையில் நானாசாகேப் ஆங்கிலேய புருஷர்களையெல்லாம் துப்பாக்கியால் சுட்டுவிட்டு அவர்களுடைய ஸ்திரீகளையும் குழந்தைகளையும் சிறைப்படுத்திக் கொஞ்சகாலத்துக்குப் பிறகு அவர்களையும் துண்டந் துண்டமாக வெட்டிக் கிணறுகளுக்குள் எறிந்து விட்டார்.

லக்னோ நகரத்தில் ஆங்கிலேய சேனைவீரர்கள் இருந்தார்கள். அவர்களை ஐம்பதினாயிரம் பித்தூர் சிபாய்கள் எதிர்த்தார்கள். ஆனால் லக்னோவில் இருந்த சிபாய்கள் இடைவிடாமல் இரவும் பகலும் அவர்களோடு சண்டைசெய்து ஆங்கிலேயர்களைக் காப்பாற்றினார்கள். ஜனரல் ஹாவ்லக்கும், ஜனரல் ஔட்ராமும் தக்க சேனைகளுடன் அங்கே வந்து உதவினார்கள். ஜான்ஸி ராணி எடுத்துக்கொண்ட சுவீகாரத்தை லார்ட் டல்ஹௌஸி அங்கீகரியாமையால் அவள் கோபமடைந்து ஆங்கிலேயர்களுடைய விரோதிகளுடன் சேர்ந்துகொண்டு ஆங்கிலேயர்களை எதிர்த்தாள். ஜனரல் நெயில் என்பவர் ஹாவ்லக்கோடு சேர்ந்துகொண்டு கான்பூரைப் பிடித்தார். நானாசாகேப் காட்டுக்கு ஓடிவிட்டார்; பிறகு அவரைப் பற்றி ஒன்றுமே தெரியாது. ஆங்கிலேய ஜனரல்கள் இருவரும் அப்பால் லக்னோவை விடுவிக்கச் சென்றார்கள். அந்த நகரம் மிகவும் அபாயமான நிலைமையில் இருந்தது. ஸர் ஹென்ரி லாரன்ஸ் என்பவர் மிகவும்தைரியமாய் அதைக் காத்துவந்தார். ஆறுநாள்வரையில் பலமான யுத்தம் நடந்தது. முக்கிய சேனாதிபதியான ஸர் ஹென்ரி காம்பெலும், ஸர் ஜேம்ஸ் ஔட்ராமும் லக்னோவைப் பிடித்துக்கொண்டு கலகஞ் செய்தவர்களையெல்லாம் துரத்திவிட்டார்கள்.

கொஞ்சகாலத்துக்குப் பிறகு ஜனரல் ஹாவ்லக் இறந்தார். சென்னையிலிருந்து ஜனரல் விட்லக்கும், பம்பாயிலிருந்து ஸர் ஹியூ ரோஸும் பலமான படைகளுடன் வந்து சிந்தியா, ஹோல்கார் இந்த இருவர்களுடைய சேனைகளையும் ஜயித்து ஒவ்வொரு கோட்டையாகப் பிடித்துக்கொண்டு வட இந்துஸ்தானத்தை நோக்கிச் சென்றார்கள். மகாராஷ்டிர அரசர்கள் ஆங்கிலேயர்களை எதிர்த்து அநேகரைக் கொன்றார்கள். இவ்வாறு மூன்றுமாதகாலம் ஆங்கிலேயர்கள் மிகவும் கஷ்டப்பட்டார்கள். பம்பாயிலும் சென்னையிலும் ஹைதராபாத்திலும் இருந்த சுதேசிகள் ஆங்கிலேயர்களுக்கு ஒருவகையான கெடுதியும் நேரிடக்கூடாதென்று அவர்களுக்கு வேண்டிய உதவிகள் செய்தார்கள்.

டில்லியிலிருந்த சிபாய்கள் அடங்கினபிறகு, ராஜதுரோகிகளான 30,000 பித்தூர் ஜனங்கள் அங்கே இருந்து கலகஞ் செய்தார்கள். எண்ணாயிரம் போர்வீரர்கள் அடங்கிய ஒரு

சேனை ஐந்து மாதம்வரையில் டில்லிக்கோட்டையைக் காத்துவந்தது. சீக்கியர்களும் கூர்க்கர்களும் ஆங்கிலேயர் களிடம் அன்பு பாராட்டி அவர்களுடன் சேர்ந்துகொண்டு டில்லியைத் தாக்கினார்கள். ஐந்துமாத மானபிறகு ஜனரல் நிகல்ஸன் பெரிய படையோடு அவர்களுக்கு உதவியாக வந்து டில்லியிலுள்ள காஷ்மீர் கேட்டில் மருந்துவைத்துக் கொளுத்திவிட்டார். பின்பு, டில்லி ஆங்கிலேயருடைய வசமாயிற்று. ஆனால் ஜனரல் நிகல்ஸன் டில்லி யுத்தத்தில் இறந்துபோனார். பகதூர்ஷாவும் ஆங்கிலேயர்களிடம் அகப் பட்டுக்கொண்டார். ஹூமாயூன் கோரிக்குப் பக்கத்தில் ஒளிந்துகொண்டிருந்த அவரைப் பிடித்துக் கைதியாக்கி ரங் கூனுக்கு அனுப்பி அவருடைய குமாரர்களைத் துப்பாக்கி யால் சுட்டுவிட்டார்கள். பிறகு பல கோட்டைகள் ஆங்கி லேயர் வசமாயின. 1859–ஆம் வருஷத்தில் தேசமுழுவதி லும் அமைதியே குடிகொண்டிருந்தது.

மேலே சொன்ன சிபாய்க் கலகத்தில் முக்கியமாய் இருந்தவர்கள் தூக்கிலிடப் பட்டார்கள். வங்காளத்தில் சிபாய்கள் கலகம்செய்து இந்தியாவிலிருந்து ஆங்கிலேயர் களைத் துரத்த நினைத்து நிரபராதிகளான புருஷர்களையும் ஸ்திரீகளையும் குழந்தைகளையும் அடித்துக் கொன்றமையால் கலகம் ஓய்ந்தபிறகு ஆங்கிலேயர்கள் சுதேசிகள் தங்களுக் குச் செய்த கெடுதியின்பொருட்டு அவர்கள் வசித்துவந்த கிராமங்களையெல்லாம் கொளுத்தி ஒருவித தீங்கையும் அறி யாதவர்களையும் பலவாறு துன்பப்படுத்தினார்கள். இந்தச்சம யத்தில் லார்டு கானிங்கு நிரபராதிகளாய் உள்ள சுதேசிகளு க்கு ஒருவிதமான துன்பமும் உண்டாகக்கூடாதென்று பெருமுயற்சி எடுத்துக்கொண்டு மிகவும் கோபங்கொண்டி ருந்த ஆங்கிலேயர்களைச் சாந்தப்படுத்தினார். அதனால் அவ ருக்குத் 'தயாள குணசீலர்' என்னும் பட்டம் ஏற்பட்டது. அந்தக்காலத்தில் விக்டோரியா மகாராணியார் இங்கிலாந்தில் அரசாட்சி செய்துகொண்டிருந்தார். 1837–ஆம் வருஷத் தில் அவர் பட்டத்துக்கு வந்தவர். இந்தியர்களிடத்தில் மிகவும் அன்பாய் இருக்கவேண்டுமென்றும் அவர்களுக்கு ஒருவிதமான கெடுதியும் செய்யக்கூடாதென்றும் அவர் கானிங் பிரபுவுக்கு அடிக்கடி மிக்க கருணையுடன் தெரிவித்து

வந்தார். அதுமுதல் ஆங்கிலேயர்களும் இந்தியர்களும் அப்போது இருந்த விரோதத்தை மறந்து ஸ்நேகமாக இருந்து வருகிறார்கள்.



## 59. விக்டோரியா மகாராணியின் அரசாட்சியில் இந்துஸ்தானம்.

### முதல் ஐந்து ராஜப்பிரதிநிதிகள் 1858—1877

### கானிங் பிரபு. 1858—1862

#### துரைத்தன மாறுபாடு.

வங்காளத்தில் சேனைகளின் கலகம் அடங்கினபிறகு இந்துதேச பரிபாலனவிஷயத்தில் சில மாறுபாடுகள் செய்ய ஆங்கிலேய மந்திராலோசனை சபையார் நிச்சயித்தார்கள். 1853—ஆம் வருஷத்தில் ஈஸ்ட் இந்தியா கம்பெனியாரின் விஷயமாக ஏற்பட்ட புதிய சட்டங்களெல்லாம் அச்சிடப்பட்டன. ஆலோசனைசபையில் இந்தியாவின் விஷயத்தைக் கவனித்து இந்துதேச பரிபாலனத்தைக் கம்பெனியாருடைய அதிகாரத்திலிருந்து நீக்கி இங்கிலாந்தின் மகாராணிக்குச் சொந்தமாக்கினார்கள். அதனால் விக்டோரியா மகாராணியார் இந்துஸ்தானத்துக்கு அரசியானார். கவர்னர்ஜனரல் என்ற பெயருக்குப் பதிலாக ராஜப்பிரதிநிதி (வைசிராய்) என்ற புதிய பெயர் ஏற்பட்டது. விக்டோரியா மகாராணியார் ராஜ்யத்தைச் சொந்தத்தில் வகித்தபோது 1858—ஆம் வருஷத்தில் இந்தியர்களுக்கு ஒரு சாஸனம் அனுப்பினார். அதற்கு 'மகாராணியாருடைய சாஸனம்' என்று பெயர். அந்த வருஷம் நவம்பர் மாதம் முதல் தேதி கானிங் பிரபு அலகாபாத்தில் ஒரு மகாசபை கூட்டி அங்கே சுதேச மன்னர்களையும் பிரபுக்களையும் வரவழைத்து அந்தச் சாஸனத்தை எல்லாருக்கும் படித்துக் காண்பித்தார். அதிற் கண்ட விஷயங்களை அறிந்து எல்லோரும் மகாராணியாரை மிகவும் கொண்டாடினார்கள். ஜாதிபேதமும் மதபேதமும் கவனிக்கப்படாமல் ராஜ்யம் ஆளப்பட்டு வருமென்பதும், கல்விக்கும், திறமைக்கும் தக்கபடி அவரவர்களுக்குத் துரைத்தன உத்தியோகங்கள் அளிக்கப்படுமென்பதும், பிரஜைகளெல்லாரும்

ஒரேவிதமாக நடத்தப்படுவார்களென்பதும், அநாதையாயிருப்பவர்கள் காப்பாற்றப்படுவார்களென்பதும், சிபாய்க் கலகத்தில் சம்பந்தப்பட்டவர்கள் மன்னிக்கப்படுவார்களென்பதும், சந்ததியில்லாத சுதேச மன்னர்கள் சுவீகாரம் எடுத்துக்கொள்ளலாமென்பதும் அதில் உள்ள முக்கியமான விஷயங்கள். இவ்வளவு பேருபகாரங்களை மிக்க கருணையுடன் செய்த விக்டோரியா மகாராணியாரை இந்தியர்கள் ஒரு தாய் போல எண்ணிவருகிறார்கள்.

கானிங் பிரபு காலத்தில் சென்னையிலும் பம்பாயிலும் கல்கத்தாவிலும் சர்வகலாசாலைகள் ஏற்படுத்தப்பட்டன. கம்பெனிக்காரர்கள் காலத்தில் இருந்த ஸுப்ரீம் கோர்ட் ஹைகோர்ட்டாக மாற்றப்பட்டது.

முதல் ராஜப்பிரதிநிதியாக வந்த லார்ட் கானிங் 1858–முதல் 1862 வரையில் இந்தியாவின் அரசாட்சியை நடத்தினார். ஜனங்களின் நன்மைக்காக டல்ஹௌஸி பிரபு ஆரம்பித்த காரியங்கள் லார்ட் கானிங்காலத்தில் விருத்தியடைந்து நிறைவேறின. எல்லா இடங்களிலும் சாலைகளும் இருப்புப் பாதைகளும் கால்வாய்களும் தந்திச்சாலைகளும் தபாற்சாலைகளும் ஏற்பட்டன. பள்ளிக்கூடங்களும் வைத்தியசாலைகளும் முன்னிலும் அதிகமாக ஸ்தாபிக்கப்பட்டன.

ஜாதிமத விஷயங்களில் துரைத்தனத்தார் பிரவேசிப்பதில்லை யென்றும் யாவருக்கும் ஒரேவிதமான சுதந்தரம் உண்டென்றும், எல்லோருக்கும் சட்டங்கள் ஒரேவிதமானவைகள் என்றும் தெரிவித்தார்கள்.

## எல்ஜின் பிரபு (1862–63).

எல்ஜின் பிரபு இரண்டாவது ராஜப்பிரதிநிதியாவர். ஆங்கிலேயர்களுக்கு மிக்க நண்பரும் வங்காளத்தில் கலகம் நடந்தகாலத்தில் அவர்களுக்கு மிக்க உதவிபுரிந்தவரும் ஆப்கானிஸ்தானத்து அமீருமான தாஸ்த் மகமது என்பவர் 1863–ஆம் வருஷம் இறந்தார். அவருடைய குமாரர்களில் ஒருவரான ஷிபர் ஆலி என்பவர், பட்டத்துக்கு உரிய தமது தமையனை அப்சல்கானைச் சிறைபடுத்தித் தாமே பட்டத்துக்கு வந்தார். எல்ஜின் பிரபுவும் 1863–ஆம் வருஷத்தில் இறந்தார்.

## லாரன்ஸ் பிரபு (1863—1869).

இவர் சிபாய்க்கலகம் நடந்தபோது பஞ்சாபில் கவர்னராக இருந்தார். ஜனங்களிடத்தில் அதிக அன்பு காட்டி வந்ததனால் அவர்களும் இவரிடத்தில் பிரியமாக இருந்தார்கள். இந்துஸ்தானி பாஷை இவருக்கு நன்றாகத் தெரியும். இவருடையகாலத்தில் நேபாளத்துக்குக் கிழக்கேயுள்ள பூடான் அரசர் இந்தியர்களை வேலைசெய்வதற்காகப் பிடித்துக்கொண்டு போனார். அதனால் இவர் பூடான் அரசரைப் பின்தொடர்ந்து சென்று யுத்தஞ்செய்து இந்தியர்களை மீட்டுக்கொண்டு வந்தனர். இவருடையகாலத்தில் ஒரிஸ்ஸாவிலும் மேற்கு இந்துஸ்தானத்திலும் இரண்டுமுறை பஞ்சம் நேரிட்டது. ஆனால் துரைத்தனத்தார் அக்காலங்களில் அளவற்ற பொருளைச் செலவிட்டுப் பல்லாயிரக் கணக்கான உயிர்களைக் காப்பாற்றினர்.

## மேயோ பிரபு (1869—1872).

மூன்றாம் ராஜப்பிரதிநிதியான மேயோ பிரபுவினுடைய காலத்தில் யுத்தம் ஒன்றும் நடக்கவில்லை. தேசம் அமைதியாய் இருக்கும்பொருட்டும் ஜனங்கள் சௌக்கியமாய் இருக்கும்பொருட்டும் இவர் விசேஷமான பொருளைச் செலவிட்டு ஜனங்களுக்கு உபயோகமான பல நன்மைகளைச்செய்தார். விவசாய சங்கம் ஒன்று ஏற்படுத்தப்பட்டது. அந்தச் சங்கத்தினர்கள் அயல் இடங்களுக்குப் போய் அங்கங்கே நடக்கும் விவசாய முறைகளையும், அங்கேயுள்ளவர்கள் உபயோகிக்கும் கலப்பை முதலிய ஆயுதங்களின் விதங்களையும், பயிரிடும் பயிர்களின் வகைகளையும், நிலங்களுக்குப்போடும் எருக்களின் வேறுபாடுகளையும் அறிந்துவர அனுகூலம் உண்டாயிற்று. சாலைகள் போடுவதிலும், கால்வாய்கள் வெட்டுவதிலும் கல்வியை அபிவிருத்தி செய்வதிலும் மேயோ பிரபு மிக்க ஊக்கம் எடுத்துக்கொண்டார். இவருடைய காலத்தில் விக்டோரியா மகாராணியின் குமாரரான எடின்பரோ பிரபு இந்தியாவுக்கு விஜயம் செய்தார். ஆங்கிலேய அரசபரம்பரையினர் இந்தியாவுக்கு விஜயம் செய்தது இதுவே முதல்முறையாகும். அவரை இந்தியர்கள் அன்புடன் வரவேற்றுத் தங்களுக்கு உள்ள ராஜபக்தியை வெளிப்படுத்தினார்கள்.

ஒருமுறை மேயோ பிரபு அந்தமான்தீவுக்குப் போன போது அங்கே இருந்த ஒரு கைதியாற் கொல்லப்பட்டார்.

### நார்த் புருக் பிரபு (1872–1876).

மேயோ பிரபுவுக்குப் பிறகு ராஜப்பிரதிநிதியாக வந்தவர் நார்த்புருக் பிரபு இவருடைய காலத்தில் யுத்தம் ஒன்றும் இல்லாமல் தேசம் அமைதி பெற்றிருந்தது. ரஷ்யர்கள் மத்திய ஆசியாவை ஜயித்து ஆப்கானிஸ்தானத்துக்கு அருகில் வந்தார்கள். இந்தவிஷயத்தில் தலையிட்டுக்கொள்ளுவது தவறு என்று இவர் சும்மா இருந்தார். இவருடையகாலத்தில் வங்காளத்தில் கொடும் பஞ்சமொன்று நேரிடும்போலிருந்தது; அப்போது இவர் விசேஷ முயற்சி எடுத்துக்கொண்டு ஏராளமான பொருளைச் செலவிட்டு இந்தக் கொடிய நோயைத்தடுத்தார். அதனால் இவருக்கு விசேஷ புகழ் உண்டாயிற்று.

பரோடா மகாராஜா ராஜ்யத்தை ஒழுங்காக ஆளாமையால் அவரை நீக்கி அவருடைய பாம்பரையினருள் ஒருவரை நார்த் புருக் பிரபு சிம்மாசனத்தில் ஏற்றினார். அப்போது வேல்ஸ் இளவரசராக இருந்தவரும் விக்டோரியா மகாராணியாரின் மூத்தகுமாருமான ஏழாம் எட்வர்ட் என்பவர் 1875–ஆம் வருஷத்தில் இந்தியாவுக்கு விஜயம் செய்தார். அக்காலத்தில் சுதேச மன்னர்களும் ஜமீன்தார்களும் பிரபுக்களும் அவரை மிகவும் பிரியமாக வரவேற்று இந்தியா எங்கும் பலவிதமான கொண்டாட்டங்களை நடத்தினார்கள்.

## 60. இந்துஸ்தானம் (தொடர்ச்சி)

### பின்னால்வந்த ராஜப்பிரதிநிதிகள் 1877–1917.

### லிட்டன் பிரபு (1877–1880).

ஆறாவது ராஜப்பிரதிநிதியாக வந்த லிட்டன் பிரபு 1877–ஆம் வருஷம் டில்லிமாநகரில் ஒரு மகாசபை கூட்டினார். அங்கே வந்திருந்தவர்களுடைய முன்னிலையில் அவர், விக்டோரியா மகாராணியார் 'இந்தியா சக்கரவர்த்தினியார்' என்னும் பட்டத்தைத் தரித்துக்கொண்டதாக வெளியிட்டார்.

இரண்டு வருஷகாலம் சரியான காலங்களில் மழை பெய்யாமையால் தக்காணத்திலும், தென்னிந்தியாவிலும் கொடிய

பஞ்சம் உண்டாயிற்று. ஐம்பது லக்ஷம் ஜனங்கள் இறந்தனர். துரைத்தனத்தார் தங்களால் கூடியஅளவு பசியால் வருந்திய எழை ஜனங்களுக்கு உதவிசெய்தார்கள். பஞ்சம் நேரிட்ட இடங்களுக்கெல்லாம் அயலிடங்களிலிருந்து கப்பல் மார்க்கமாகவும் புகைவண்டி வழியாகவும் தானியம் ஏராளமாகக் கொண்டுவரப்பட்டது. பத்துக்கோடி ரூபாய்க்கு அதிகமான தொகை ஜனங்களைக் காப்பாற்றும் விஷயத்தில் செலவிடப்பட்டது.

## ஆப்கானிஸ்தான யுத்தம் (1878–1880).

காபூலுக்கு வந்த ஒருரஷியஉத்தியோகஸ்தரை ஷியர் ஆலி உபசரித்து வரவேற்றார். ஆனால் கவர்னர்ஜனரல் அனுப்பிய ஆங்கிலேய உத்தியோகஸ்தரை அவர் உபசரிக்கவில்லை.

அதனால் ரஷியர்கள் இந்தியாவின்மேல் படையெடுப்பின், தாம் அவர்களுக்கு உதவிசெய்யக் கூடுமென்பதையும் தாம் ஆங்கிலேயர்களுக்கு விரோதியென்பதையும் ஷியர் ஆலி நன்கு புலப்படுத்தினர். ஆகையால் ஆங்கிலேயசேனைகள் ஆப்கானிஸ்தானத்தின்மீது படை யெடுத்தன. உடனே ஷியர் ஆலி ஓடிப்போய் விட்டார். அவர் குமாரரான யாகுப்கான் என்பவர் அமீர் ஆக்கப்பட்ட அளவில் அவர் ஆங்கிலேயருடன் சமாதானம் செய்துகொண்டார். ஸர் லூயி காவக்நாரி என்ற ஆங்கிலேய உத்தியோகஸ்தர் யாகுப்கானைப் பார்க்க அனுப்பப்பட்டபோது அமீருடைய ஆப்கானிய வீரர்கள் அவரையும் அவருடைய காவலாட்களையும் கொலை செய்தார்கள். உடனே யாகுப்கான் காபூல் ராஜ்யத்திலிருந்து இந்தியாவிற்கு அனுப்பப்பட்டார்.



இந்தியா சக்ரவர்த்தினி.

## ரிப்பன் பிரபு (1880–1884).

ஏழாவது ராஜப்பிரதிநிதியாகிய ரிப்பன் பிரபு இரண்டாவது ஆப்கானியச் சண்டையை முடிவுக்குக் கொண்டுவந்தார். யாகுப்கானின் இளைய சகோதரரான அயுப்கான் என்பவர் சிம்மாசனத்தைக் கைப்பற்றிக் கொள்ள முயற்சி செய்தார்; ஆனால் ஜெனரல் ராபர்ட்ஸ் காபூலிலிருந்து கந்தகாருக்குப் போய் அவரைத் துரத்திவிட்டார். அவ் ஸல்தானுடைய மூத்தகுமாரரான அப்துல் ரகிமான் என்பவர் ராஜ்யத்திற்கு நேரான உரிமை உள்ளவர். அவர் ஆங்கிலேயர்களுக்கு நண்பரானமையால் ஆப்கானிஸ்தானத்திற்கு அமீராக நியமிக்கப்பட்டார். அவர் 1912-ஆம் வருஷத்தில் இறந்துபோனபோது அவர் குமாரர் ஹபிப் உல்லா சிம்மாசனம் ஏறினர்.



லிட்டன் பிரபு.

### பிரஜைகளுக்குச் செய்த நன்மைகள்.

ரிப்பன் பிரபு இந்தியர்களின் நன்மைக்காக அநேக காரியங்கள் செய்தார். ஆங்கிலேயர்களுக்கு உட்பட்டு இந்தியர்கள் நாளடைவில் தாங்களே ராஜ்ய பரிபாலனம் செய்யும்படியான திறமையை யடையும்படி பல ஏற்பாடுகள் செய்தார். நகரங்களை இந்தியர்கள் பரிபாலனம் செய்யும்படி முனிசிபாலிடிகளை உண்டாக்கினர். சாலைகள் போடுவது, கல்வியை அபிவிருத்தி செய்வது, வைத்தியசாலைகளை யமைப்பது, நகரங்களைச் சுத்தமாய் வைத்துக்கொள்ளுவது முதலியன நகர பரிபாலன சபையாருடைய வேலைகள். பட்டணங்களை யன்றி வேறு இடங்களிலும் இவ்விதமான ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

கல்வி யபிவிருத்திக்காக ரிப்பன் பிரபு மிகவும் முயன்ருர். இந்தியர்களுக்கு நல்ல உத்தியோகங்கள் அளிக்கப்பட்டன. அன்னியதேசங்களிலிருந்து வரும் சாமான்களுக்கு இருந்த வரி நீக்கப்பட்டது. இந்தியர்கள் ரிப்பன் பிரபுவிடம் மிகவும் அன்பு பாராட்டினுர்கள். சென்னையில் இவருடைய உருவச்சிலை வைக்கப்பட்டிருக்கிறது.

## மைசூர் ராஜ்யம்.

எழுபது வருஷம் வரையில் மைசூர் ராஜ்யத்தை ஆங்கிலேயர்கள் ஆண்டுவந்தார்கள். 1881–ஆம் வருஷத்தில் சாமராஜேந்திர உடையாரிடம் அந்த ராஜ்யத்தை மறுபடியும் கொடுத்துவிட்டார்கள். அவர் அதற்குமுன் இருந்த மைசூர் மகாராஜாவின் சுவீகார புத்திரர். அங்கே திவான்களாக இருந்த ரங்காசார்லு, சேஷாத்திரி ஐயர் ஆகிய இவர்களுடைய அரசாட்சியில், ராஜ்யம் நாளுக்குநாள் விருத்தியடைந்தது.

## டப்பரின் பிரபு (1885–1887).

எட்டாவது ராஜப்பிரதிநிதியான டப்பரின் பிரபு வந்தவுடன், பர்மா தேசத்தை மிகவும் ஒழுங்கீனமாக ஆண்டுவந்த திபா என்னும் அரசர் ஆங்கிலேயருடன் சண்டைக்கு வந்தார். அவரை எதிர்க்கும்படி ஒரு சிறிய ஆங்கிலேய சேனை அனுப்பப்பட்டது. உடனே அவர் தோற்று ஓடிப்போனுர். 1886–ஆம் வருஷத்தில் வடபர்மாவைப் பிரிட்டிஷ் பர்மாவுடன் சேர்த்துக்கொண்டு, தீபாவுக்கு உபகாரச் சம்பளம் கொடுத்து, அவரை இந்தியாவில் வசிக்கும்படி செய்தார்கள். பர்மிய கொள்ளைக்காரர்களில் அநேகர் அடக்கப்பட்டார்கள். வடபர்மாவானது தென்பர்மாவைப்போலவும் இந்தியாவின் மற்றப் பாகங்களைப்போலவும் ஆளப்பட்டு வருகின்றது.

ராஜப்பிரதிநிதியவர்களின் மனைவியான டப்பரின் சீமாட்டியின் நன்முயற்சியால் பல வைத்திய ஸ்திரீகள் இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு அனுப்பப்பட்டார்கள். அதற்காக இந்தியாவிலும் இங்கிலாந்திலும் உள்ள கனவான்கள் ஏராளமான பொருளுதவி செய்தார்கள். அவ்வாறு சேர்ந்த தொகைக்கு டப்பரின் சீமாட்டியின் நிதி என்று பெயர்.

டப்பரின் பிரபு காலத்தில் விக்டோரியா மகாராணி யாரின் ஜூபிலி மகோத்ஸவம் நடந்தது; விக்டோரியா மகா ராணியவர்கள் பட்டத்துக்கு வந்து அப்போது ஐம்பது வருஷகாலமாயிற்று. ஆங்கிலேய ராஜ்யம் முழுவதிலும் ஜனங் கள் அந்த மகோத்ஸவத்தை மிக்க மகிழ்ச்சியுடன் கொண் டாடினார்கள். 1885–ஆம் வருஷத்தில் பம்பாய் நகரத்தில் காங்கிரஸ் மகாசபை முதலில் கூடிற்று. ஆங்கிலேய துரைத் தனத்தில் நடக்கும் விஷயங்களைத் துரைத்தன உத்தியோ கஸ்தர்களுக்குத் தெரிவிப்பதே, இந்தச் சபையின் முக்கிய நோக்கம். அந்தவருஷம் முதல் ஒவ்வொருவருஷமும், கல் கத்தா, பம்பாய், சென்னை, அல்லகாபாத் முதலிய பெரிய நகரங்களுள் ஏதேனும் ஒன்றில் இந்தச் சபை நடைபெற்று வருகிறது.

## லான்ஸ் டௌன் பிரபு (1888–1893).

டப்பரின் பிரபுவுக்குப் பிறகுவந்த லான்ஸ் டௌன் பிரபு காலத்தில் நம்முடைய துரைத்தனத்தில் சில புதிய ஏற்பாடு கள் நடந்தன. நாம் எல்லோரும் பலவகையான சட்டங் களுக்கு உட்பட்டு நடந்து வருகிறோம். இவைகளை ஏற் படுத்தும் அதிகாரம் சட்ட நிரூபண சபையைச் சேர்ந்தது. லான்ஸ் டௌன் பிரபு காலத்துக்கு முன்பு துரைத்தன உத் தியோகஸ்தர்களே இந்தச் சபையின் அங்கத்தினராக நியமிக் கப்பட்டிருந்தார்கள். 1891–ஆம் வருஷம் முதல் நகர பரி பாலன சபைகளிலிருந்தும், ஜில்லாசபைகளில் இருந்தும், சர்வகலா சங்கங்களில் இருந்தும் இதற்கு அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு வருகிறார்கள்.

## எல்ஜின் பிரபு (1894–98).

எல்ஜின் பிரபு ராஜப்பிரதிநிதியாக இருந்த காலத்தில் இந்தியாவில் பஞ்சநோய், பூகம்பம் முதலான துன்பங்கள் நேரிட்டு, ஜனங்களுக்கு மிகுந்த வருத்தத்தை உண்டாக் கின. இந்தியாவிலும் இங்கிலாந்திலும் உள்ள செல்வவான் கள் ஏராளமான பொருளுதவி செய்து பல்லாயிரக்கணக்கான உயிர்களைக் காப்பாற்றினார்கள். பிளேக் என்னும் கொள்ளை நோய், பம்பாயிலிருந்து தேசத்தில் அநேக இடங்களில் பரவிற்று. அதை நீக்கும்பொருட்டு, பலவிதமான முயற்சி

கள் செய்யப்பட்டன. விக்டோரியா மகாராணியார் பட்டத்துக்கு வந்த அறுபதாம் ஆண்டாகிய 1897–ஆம் வருஷத்தில் வைர ஜுபிலி (Diamond Jubilee) கொண்டாட்டம் நடந்தது.

## கர்ஸன் பிரபு (1898–1905).

கர்ஸன் பிரபு பஞ்சாப் மாகாணத்தில் மேற்குப் பாகத்தை வேறாகப்பிரித்து வடமேற்கெல்லை மாகாணத்தை ஒரு தனி ராஜ்யமாகச் செய்தார். வங்காளத்தை இரண்டாகப் பிரித்துக் கிழக்கு வங்காளத்தோடு அஸாமைச் சேர்த்து அவை இரண்டையும் ஒரு ராஜ்யமாகச் செய்தார். டெக்கல் என்பது கிழக்குவங்காளத்தின் முக்கியபட்டணம்.

நைஸாம் தம்முடைய ராஜ்யத்தில் வைத்துக்கொண்ட ஆங்கிலேயசேனையின் செலவுக்காக 1856–ஆம் வருஷத்தில் பீகார் ராஜ்யத்தை ஆங்கிலேயரிடம் விட்டிருந்தார். கர்ஸன் பிரபு காலத்தில், ஆங்கிலேயர்கள் அந்த ராஜ்யத்தைத் தங்களுக்குச் சொந்தமாக்கிக்கொண்டார்கள்.

ஒரு சவரனுக்கு 15–ரூபாயே விலைமதிப்பென்று கர்ஸன் பிரபு சட்டத்தில் ஏற்பாடு செய்தார். இவர்காலத்தில் தேசம் எங்கும் செழிப்பாக இருந்தது. இவர் உப்புக்கு வரியை ஏற்படுத்தி வருமானவரியைக் குறைத்தார். அப்படியிருந்தும் பொக்கிஷத்தில் செல்வம் மிகுதியாக இருந்தது. அந்தத்தொகையைக் கல்வி அபிவிருத்தி விஷயத்திலும், பாசன விஷயத்திலும், போலீஸ்காரர்களின் சம்பளத்தை அதிகப்படுத்துவதிலும், சரித்திரப் பிரசித்திபெற்று இடிந்துபோன பழைய கட்டிடங்களையும் கோவில்களையும் பழுதுபார்ப்பதிலும் செலவிட்டார். 1901–ஆம் வருஷம் ஜனவரி மாதம், 22–ஆம் தேதி விக்டோரியா மகாராணியாரவர்கள் காலம் சென்றமையால் அவருடைய குமாரரான ஏழாவது எட்வர்ட் அரசர் பட்டத்துக்கு வந்தார். 1903–ஆம் வருஷம் ஜனவரி மீ முதல்தேதி கர்ஸன் பிரபு டில்லி நகரத்தில் ஒரு மகாசபை கூட்டி எட்வர்ட் அரசரே இந்தியாவின் சக்கரவர்த்தியென்று பிரசித்தப்படுத்தினர். 1904–ஆம் வருஷத்தில் இந்தியாவிலிருந்த சேனை திபெத்துக்குப் போய் அதன் முக்கிய நகரமாகிய லாஸாவைப் பிடித்துக்கொண்டது. இந்தியா கவர்ன்

மெண்டார் சைனு அரசரோடு ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார்கள். அதன்படி திபெத் அவருடைய ராஜ்யத்தோடு சேர்க்கப்பட்டது. இந்தியாவுக்கும் திபெத்துக்கும் வியாபாரம் அதுமுதல் ஒழுங்காக நடந்துவருகிறது.

## மிண்டோ பிரபு (1905–1910).

கர்ஸன் பிரபு காலத்தில் இந்தியாவில் நடந்த சில ஏற்பாடுகளைப்பற்றி இந்தியர்களில் சிலர் அதிருப்தியடைந்தார்கள். அதை அவருக்குப்பின் ராஜப்பிரதிநிதியாகவந்த மிண்டோ பிரபு தெரிந்துகொண்டு ஜனங்களுக்கு அனுகூலமான பல மாறுபாடுகள் செய்தார். சட்ட நிரூபண சபையின் அங்கத்தினர் தொகையை அதிகமாக்கி அவர்களுடைய அதிகாரத்தையும் அதிகப்படுத்தினர். 1906–ஆம் வருஷத்தில் எட்வர்ட் அரசரின் குமாரரும் வேல்ஸ் இளவரசருமான ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் இந்தியாவுக்கு விஜயம்செய்து இந்தியர்களிடம் தமக்குள்ள அன்பைக் காட்டினர்.

1910–ஆம் வருஷம் மேமீ 10–ஆம் தேதி எட்வர்ட் சக்கரவர்த்தி காலஞ்சென்றார். அவர் ஒன்பது வருஷகாலமே சக்கரவர்த்தியாக இருந்தார். தேசத்தில் சண்டையே இருக்கக்கூடாதென்பதும் அமைதியே குடிகொண்டிருக்கவேண்டுமென்பதும் அவருடைய கொள்கையாதலால் அவருக்கு, 'சமாதான எட்வர்ட்' என்று ஒரு பட்டப்பெயர் உண்டு.

## ஹார்டிஞ்சு பிரபு: (1910–1916).

1910–ஆம் வருஷம் ஹார்டிஞ்சு பிரபு ராஜப்பிரதிநிதியாக வந்தார். இந்தியர்களுக்கு அவரிடத்தில் விசேஷமான பிரியம் உண்டு. டில்லிநகரத்தில் ஒருமுறை சில துஷ்டர்கள் அவரைக் கொல்ல யத்தனித்தும் இந்தியர்களுடைய அதிர்ஷ்டவசத்தால் அவர் உயிர்தப்பினர்.

1911–ஆம் வருஷம் டிசம்பர் மாதம் 12–ஆம் தேதி ஐந்தாம் ஜார்ஜ் சக்கரவர்த்தி மேரி மகாராணியாருடன் இந்தியாவுக்கு விஜயம்செய்து டில்லி நகரத்தில் இந்தியா சக்கரவர்த்தியென்று பட்டம் சூட்டிக்கொண்டார். அதுவரையில் கல்கத்தாவே இந்தியாவுக்கு முக்கியபட்டணமாக இருந்தது. அதுமுதல் டில்லியே பிரதான நகரமாயிற்று. கர்ஸன் பிரபு

காலத்தில் வங்காளம் இரண்டாகப் பிரிந்ததில் ஜனங்களுக்குள்ள அதிருப்தியை அறிந்துகொண்டு மறுபடியும் ஒன்றாக்கினார். பட்டாபிஷேககாலத்தில் கல்வி அபிவிருத்தி விஷயமாகவும் தேசத்தின் நன்மைக்காகவும் பல உதவிகள் சக்கரவர்த்தியால் செய்யப்பட்டன.

1914-ஆம் வருஷம் ஆகஸ்ட்மீ 4-ஆம் தேதியில் இங்கிலாந்துக்கும் ஜர்மனிக்கும் ஒரு பெரிய யுத்தம் ஆரம்பமாயிற்று. இதுவரையில் இப்பேர்ப்பட்ட மகாயுத்தம் எங்கும் நடந்ததில்லை.

1916-ஆம் வருஷம் மார்ச்சுமீ கடைசியில் ஹார்டிஞ்சு பிரபு இந்தியாவைவிட்டு இங்கிலாந்துக்குச் சென்றார். பிறகு செம்ஸ்போர்ட் பிரபு ராஜப்பிரதிநிதியாக இந்தியாவுக்கு வந்தார்.

சிலகாலமாக ஆங்கிலேயர்களுக்கும், ஜர்மானியர்களுக்கும் நடந்துவரும் சண்டையானது இன்னும் முடிந்தபாடில்லை. மாட்சிமை பொருந்திய நமது சக்கரவர்த்தியானவர் அதில் விசேஷமான கவலையைச் செலுத்திவருகிறார். ஆங்கிலேய ராஜ்யங்களிலுள்ள குடிகளெல்லாரும் ஒற்றுமையுடனிருந்து சத்துருக்களாகிய ஜர்மானியர்களை வெல்லுவதற்கு வேண்டிய காரியங்களைச் செய்துகொண்டிருக்கிறார்கள். எந்த இடங்களில் சத்துருக்கள் பலமாக இருக்கிறார்களோ அங்கெல்லாம் இந்தியர்கள் அவர்களுடன் தைரியமாகச் சண்டைபோடுகிறார்கள்.

புதிதாக வந்துள்ள ராஜப்பிரதிநிதியானவர் கல்வி யபிவிருத்திவிஷயத்தில் மிக்க ஊக்கமுள்ளவராக இருக்கிறார். படிப்பினால் நீங்களும் உங்களைப்போன்றவர்களும் விசேஷமான பயனை யடைவீர்கள்.

நாம் வசித்துவரும் சென்னை ராஜதானிக்கு லார்ட் பெண்ட்லண்டு இப்போது கவர்னராக இருக்கிறார்.

நாம் இந்தப் புஸ்தகத்தை முடிப்பதற்கு முன்னே ஒரு முக்கியமான விஷயத்தைக் கவனிக்கவேண்டும். ஆங்கிலேயர்கள் [illegible] அன்னியர்கள். ஜர்மானியர்களோ

அவர்களுடைய பகைவர்கள். அவர்களுக்குள் நடந்து வரும் யுத்தத்தில் ஆங்கிலேயர்களுக்கு ஜயமுண்டாகும் பொருட்டு நம்முடைய துரைத்தனத்தாரும், இந்திய மன்னர்களும், ஜனங்களும் தங்களாற் கூடியஅளவு பிரயாசைப்படுகிறார்கள். நம்முடைய சக்கரவர்த்தி அன்னிய நாட்டினராக இருந்தும் அவரே வெற்றியடைய வேண்டுமென்று நம்முடைய ஜனங்கள் ஏன் கவலைகொள்ள வேண்டும்? ஆங்கிலேயர்கள் நமக்கு அமைதியையும், கவலையின்மையையும் அளித்திருப்பதே இதற்குக் காரணமாகும். நூறு வருஷங்களுக்கு முன்பிருந்த நம்முடைய முன்னோர்கள் இப்போது உயிருடன் இருப்பார்களானால் அக்காலத்தில் அவர்கள் பட்ட கஷ்டங்களையும் இப்போது நாம் அனுபவித்து வரும் சுகங்களையும் நன்கு அறிவார்கள். சுவாதீனத்தின் பெருமையை ஆங்கிலேயர்களே நன்கு அறிந்தவர்கள். ஆங்கிலேயர்களுடைய பாதுகாப்பில் நாம் சுதந்தரமுடையவர்களாக இருக்கவேண்டுமென்பது கடவுளுடைய கட்டளை போல் தோன்றுகிறது. காலக்கிரமத்தில் தேச அரசாட்சியில் முக்கியமான வேலைகளை ஆங்கிலேயர்கள் நமக்கு இன்னும் அதிகமாகக் கொடுப்பார்கள். அதனால் நம்முடைய செல்வம் அதிகமாக விருத்தியடையும். பாடசாலைகளில் இப்போதிருப்பதைக்காட்டிலும் அதிகமான பிள்ளைகள் படிப்பார்கள். நம்முடைய சக்கரவர்த்தி வெகுகாலம்வரையில் அரோக திடகாத்திரராய் இருக்கும்படி செய்வித்தருளும் வண்ணம் நாம் கடவுளைப் பிரார்த்திப்போமாக.

பன்னலமும் வாய்ந்திப் படிபுரக்கும் ஜார்ஜென்னும்
மன்னர்பிரான் வாழ்க மகிழ்ந்து.

# முக்கிய வர்த்தமானங்களும் அவை நடந்த காலமும்.

| | |
|---|---|
| சைசுநாகர்கள்: வர்த்தமான மகாவீரன் .. | கி. மு. 599–527 |
| கௌதம புத்தர் .. .. .. .. .. | கி. மு. 557–477 |
| டேரியஸ் ஹிஸ்டாஸ்பிஸ் இந்தியாவில் தாமதித்தது | கி. மு. 515–500 |
| மகா அலெக்சாந்தர் இந்தியாவில் தாமதித்தது .. | கி. மு. 327–325 |
| மௌரிய சந்திரகுப்தன் .. .. .. .. | கி. மு. 322–297 |
| செலூகஸ் என்பவனுடன் நடந்த யுத்தம் .. | கி. மு. 305 |
| அசோகன் அரசாட்சி .. .. .. .. | கி. மு. 273–232 |
| தக்ஷிணத்தில் ஆந்திரர்களுடைய அரசாட்சி.. | கி. மு. 208–கி. பி. 249 |
| சாகர்கள்.. .. .. .. .. .. | கி. பி. 1–400 |
| குப்தவம்சம் .. .. .. .. .. | கி. பி. 319–520 |
| முதலாம் சந்திரகுப்தன் .. .. .. .. | 319–326 |
| சமுத்திரகுப்தன் .. .. .. .. .. | 326–375 |
| இரண்டாம் சந்திரகுப்தன் (விக்கிரமாதித்தியன்) .. | 375–413 |
| காளிதாசர் .. .. .. .. .. .. | 375 |
| இந்தியாவில் பாகியன் என்பவர் தாமதித்தது .. .. | 399–414 |
| மிகிரகுலன் ரஜபுத்திரர்களால் துரத்தப்பட்டது .. | 515–520 |
| யசோதர்மன் .. .. .. .. .. .. | 528–550 |
| ஹர்ஷவர்த்தனன் (ஸ்ரீகண்டசிலாதித்தியன் II) .. | 606–648 |
| சங்கராசாரியர் .. .. .. .. .. .. | 780–820 |
| போஜராஜன் .. .. .. .. .. .. | 1010–1062 |
| சாளுக்கியர்கள் .. .. .. .. .. .. | 973–1183 |
| முதலாம் சோமேசுவரன் .. .. .. .. | 1040–1069 |
| ஆறாம் விக்கிரமாதித்தன் .. .. .. .. | 1076–1127 |
| தென்னிந்தியாவில் சோழர்கள் .. .. .. .. | 900–1250 |
| இராமானுஜர் .. .. .. .. .. .. | 1127 |
| மகம்மது கோரி பிருதிவிராஜனை வென்றது .. .. | 1193 |

| | |
|---|---|
| கஜினிமகம்மது .. .. .. .. .. .. | 997–1030 |
| கஜினியகம்மதுவின் பன்னிரண்டாம் படையெழுச்சி .. | 1024 |
| மகம்மதுகோரி .. .. .. .. .. .. .. | 1190–1206 |
| அடிமையரசர்கள்: குத்புடீன் அல்டாமஷ் .. .. | 1206 |
| செங்கிஸ்கான் படையெழுச்சி .. .. .. .. | 1221 |
| நாஸர் உதீன் .. .. .. .. .. .. | 1246 |
| அலாவுதீன் தக்காணத்தை ஜயித்தது .. .. .. | 1290 |
| மகம்மது பின் துக்லக் .. .. .. .. .. | 1321 |
| பிரோஸ்ஷா .. .. .. .. .. .. | 1347 |
| பாமினிராஜ்யம் .. .. .. .. .. .. | 1347 |
| முடத்தைமூர் படையெழுச்சி .. .. .. .. | 1398 |
| ஸையத் வம்சம் .. .. .. .. .. | 1413 |
| லோடிவம்சம் .. .. .. .. .. .. | 1451 |
| வாஸ்கோடிகாமா இந்தியாவுக்கு வந்தது .. .. | 1498 |
| பேபர் பானிப்பட்டு யுத்தத்தில் வெற்றியடைந்தது .. | 1526 |
| ஹுமாயூன் .. .. .. .. .. .. .. | 1530–1556 |
| ஹுமாயூன் ஷர்ஷாவினால் துரத்தப்பட்டது .. .. | 1540 |
| ஹுமாயூன் இந்தியாவுக்குத் திரும்பிவந்தது .. .. | 1555 |
| இரண்டாம் பானிப்பட்டு யுத்தத்தில் அக்பரது வெற்றி .. | 1556 |
| அக்பருடைய அரசாட்சி .. .. .. .. | 1556–1605 |
| பிரதாபசிங்கர் அடைந்த வெற்றி .. .. .. | 1580 |
| சாந்துபிபியின் தோல்வி .. .. .. .. | 1600 |
| ஜிஹாங்கீர் .. .. .. .. .. .. .. | 1605–1627 |
| ஜிஹாங்கீர் நூர்ஜஹானை விவாகம் செய்துகொண்டது .. | 1611 |
| ஷாஜிஹான் .. .. .. .. .. .. .. | 1627–1658 |
| ஔரங்கசிப் .. .. .. .. .. .. .. | 1658–1707 |
| தேவர்கியர் என்னும் ஐரோப்பியர் இந்தியாவுக்கு வந்தது .. | 1661 |
| பகதர்ஷா .. .. .. .. .. .. .. | 1708–1712 |
| மகம்மதுஷா .. .. .. .. .. .. .. | 1719–1748 |
| நாதர்ஷா இந்தியாவுக்கு வந்தது .. .. .. | 1739 |
| பானிப்பட்டில் மூன்றும் யுத்தம் .. .. .. | 1761 |
| பம்பாய் ஆங்கிலேயருக்குக் கிடைத்தது .. .. | 1661 |

| | |
|---|---|
| சிவாஜியின் மகுடாபிஷேகம் .. .. .. .. | 1674 |
| சிவாஜியின் மரணம் .. .. .. .. .. | 1680 |
| ஐக்கிய ஈஸ்ட் இந்தியா வர்த்தகசங்கம் ஏற்பட்டது .. | 1700 |
| பாலாஜிராவ், முதல் பேஷ்வா.. .. .. .. | 1708–20 |
| மகம்மதுஷா .. .. .. .. .. .. | 1719–48 |
| முதல் பாஜிராவ், இரண்டாம் பேஷ்வா, சிந்தியா, ஹோல்கார், கெயிக்வார் .. .. .. .. | 1720–40 |
| மகாராஷ்டிர ராஜ்யம் ஏற்பட்டது .. .. .. | 1620–40 |
| ஹைதராபாத், அயோத்தி, வங்காளம் ஆகிய மகம்மதிய ராஜ்யங்கள் .. .. .. .. .. | 1730–40 |
| நாதர்ஷா படையெடுத்து டில்லியை அழித்தது .. | 1739 |
| பாலாஜி பாஜிராவ், மூன்றும் பேஷ்வா .. .. | 1740–61 |
| மகம்மதுஷாவின் மரணம் .. .. .. .. | 1748 |
| நைஸாமல்முல்கின் மரணம் .. .. .. .. | 1748 |
| ஸாகுவின் மரணம் .. .. .. .. .. | 1748 |
| ஆங்கிலேயர்களுக்கும் பிரஞ்சுக்காரர்களுக்கும் நடந்த யுத்தம் .. .. .. .. .. .. | 1744–48 |
| டியூப்ளே சென்னையைப் பிடித்துக்கொண்டது .. | 1746 |
| ஆற்காட்டு முற்றுகை .. .. .. .. .. | 1752 |
| கல்கத்தா இருட்டறை .. .. .. .. .. | 1756 |
| பிளாஸி யுத்தம் .. .. .. .. .. | 1757 |
| ஆங்கிலேயர்களுக்கும் பிரஞ்சுக்காரர்களுக்கும் நடந்த இரண்டாம் யுத்தம் .. .. .. .. .. | 1756–63 |
| ஸெண்ட்டேவிட் கோட்டையைக் கௌண்ட் லாலி பிடித்துக்கொண்டது .. .. .. .. | 1758 |
| வடசர்க்காரை ஆங்கிலேயர் பிடித்துக்கொண்டது .. | 1759 |
| வந்தவாசி யுத்தம் .. .. .. .. .. | 1760 |
| புதுச்சேரியை ஆங்கிலேயர்கள் பிடித்துக்கொண்டது.. | 1761 |
| பர்த்துவானையும், சிட்டாங்கையும் மிதுனபுரியையும் ஆங்கிலேயர்கள் வாங்கியது .. .. .. .. | 1761 |
| ஹைதர்ஆலி மைசூர் ஸுல்தானனது .. .. .. | 1761 |
| ஷாஆலம் சக்கரவர்த்தியானது .. .. .. .. | 1761 |

| | |
|---|---|
| வடமேற்கு மாகாணங்கள் ஏற்பட்டது .. .. | 1801 |
| இரண்டாம் மகராஷ்டிர யுத்தம் .. .. .. | 1803–1804 |
| டில்லியையும் ஆக்ராவையும் பிடித்துக்கொண்டது .. | 1803 |
| ஷாஆலம் உபகாரச்சம்பளம் பெற்றது .. .. | 1803 |
| மூன்ரும் மகராஷ்டிர யுத்தம் .. .. .. .. | 1804 |
| கார்ன்வாலிஸ் பிரபுவின் மரணம் .. .. .. | 1805 |
| ஸர் ஜார்ஜ் பார்லோ, கவர்னர் ஜனரல் .. .. | 1805–1807 |
| வேலூரில் நடந்த சிபாய்க் கலகம் .. .. .. | 1806 |
| மிண்டோ பிரபு, ஆருவது கவர்னர்ஜனரல் .. .. | 1807–1813 |
| ஹேஸ்டிங்க்ஸ் பிரபு, ஏழாவது கவர்னர்ஜனரல் .. | 1813–1823 |
| பிந்தாரியர்கள் பிடிபட்டது .. .. .. .. | 1813 |
| கூர்க்கர்கள் யுத்தம் .. .. .. .. .. | 1813–16 |
| நான்காம் மகராஷ்டிர யுத்தம் .. .. .. .. | 1817 |
| பேஷ்வா ஓடிப்போய் உபகாரச்சம்பளம் பெற்றது .. | 1818 |
| பம்பாய் ராஜ்யம் பூர்த்தியானது .. .. .. | 1818 |
| ஆம்ஹர்ஸ்ட் பிரபு, எட்டாம் கவர்னர்ஜனரல் .. | 1823–28 |
| முதல் பர்மா யுத்தம் .. .. .. .. .. | 1824–26 |
| யாந்தபூ உடன்படிக்கை .. .. .. .. | 1826 |
| வில்லியம் பெண்டிக் பிரபு, ஒன்பதாம் கவர்னர்ஜனரல். | 1828–1835 |
| மைசூர் அரசர் துரத்தப்பட்டது .. .. .. | 1830 |
| ஸர் சார்லஸ் மெட்காப் .. .. .. .. | 1835–36 |
| வாரப்பத்திரிகைகள் ஏற்பட்டது .. .. .. | 1835 |
| ஆக்லண்ட் பிரபு, பத்தாவது கவர்னர்ஜனரல் .. | 1836–42 |
| எல்லன்பரோ பிரபு, பதிஞேராம் கவர்னர்ஜனரல் .. | 1842–44 |
| ஜனரல் பாலக் ஆப்கானியர்களைத் துரத்தியது .. | 1842 |
| சிந்து அமீருடன் யுத்தம் .. .. .. .. | 1843 |
| ஆங்கிலேய ராஜ்யத்தோடு சிந்துதேசம் சேர்ந்தது .. | 1843 |
| ஹார்டிஞ்சு பிரபு, பன்னிரண்டாம் கவர்னர்ஜனரல். | 1844–48 |
| சீக்கியர்களோடு யுத்தம் .. .. .. .. .. | 1845–46 |
| ஸட்லெஜ் நதிக்குக் கிழக்கில் இருக்கும் தேசம் ஆங்கிலேய ராஜ்யத்திற் சேர்ந்தது .. .. .. | 1846 |
| டல்ஹௌஸி பிரபு, பதின்மூன்ரும் கவர்னர்ஜனரல். | 1848–56 |

| | |
|---|---|
| சதாரா ஆங்கிலேய ராஜ்யத்தில் சேர்ந்தது | 1848 |
| சீக்கியர்களோடு இரண்டாம் யுத்தம் | 1848–49 |
| பஞ்சாப் ஆங்கிலேய ராஜ்யத்தோடு சேர்ந்தது | 1849 |
| இரண்டாவது பர்மா யுத்தம், ரங்கூன் பிடித்துக்கொள்ளப்பட்டது | 1852 |
| பெகு ஆங்கிலேய ராஜ்யத்தோடு சேர்ந்தது | 1852 |
| நாகபுரி ஆங்கிலேய ராஜ்யத்தில் சேர்ந்தது | 1853 |
| நைஸாம் பீராரை ஆங்கிலேயருக்குக் கொடுத்தது | 1853 |
| வங்காளம், லெப்டினென்ட் கவர்னரது ஆட்சிக்கு வந்தது | 1853 |
| அயோத்தி ஆங்கிலேய ராஜ்யத்தில் சேர்ந்தது | 1856 |
| கானிங்கு பிரபு, பதினொன்காவது கவர்னர்ஜனரல் | 1856–58 |
| சிபாய்களின் கலகம் | 1857 |
| விக்டோரியா மகாராணியாரது அரசாட்சியின் தொடக்கம் | 1858 |
| கானிங்கு பிரபு, முதல் வைஸ்ராய் | 1858–62 |
| எல்ஜின் பிரபு, இரண்டாம் வைஸ்ராய் | 1862–63 |
| ஸர் ஜான் லாரன்ஸ், மூன்றாம் வைஸ்ராய் | 1863–69 |
| பூடானோடு சண்டை | 1865 |
| ஓரிஸ்ஸாவில் கொடிய பஞ்சம் | 1866 |
| மேயோபிரபு, நான்காம் வைஸ்ராய் | 1869–72 |
| விவசாய சங்கம் ஏற்பட்டது | 1869–72 |
| நார்த் புருக் பிரபு, ஐந்தாவது வைஸ்ராய் | 1872–76 |
| வங்காளத்தின் பஞ்சத்தை யடக்கினது | 1874 |
| ஏழாவது எட்வர்ட் சக்கரவர்த்தி இந்தியாவுக்கு விஜயம் செய்தது | 1875 |
| லிட்டன் பிரபு, ஆறாம் வைஸ்ராய் | 1877–1880 |
| விக்டோரியா சக்கரவர்த்தினியின் டில்லி தர்பார் | 1877 |
| தட்சிண இந்தியாவின் பஞ்சம் | 1877 |
| இரண்டாவது ஆப்கானிஸ்தான யுத்தம் | 1878 |
| மூன்றாவது ஆப்கானிஸ்தான யுத்தம் | 1879 |
| ரகிமானை அமீராகச்செய்தது | 1881 |

| | |
|---|---|
| ரிப்பன் பிரபு, எட்டாவது வைஸ்ராய் .. .. | 1880–84 |
| டப்பரின் பிரபு.. .. .. .. .. .. | 1885–1887 |
| மூன்றும் பர்மா யுத்தம்.. .. .. .. .. | 1885 |
| பர்மா பிரிட்டிஷ் ராஜ்யத்தோடு சேர்ந்தது .. .. | 1886 |
| லான்ஸ்டௌன் பிரபு, ஒன்பதாவது வைஸ்ராய் .. | 1888–93 |
| எல்ஜின் பிரபு, பத்தாவது வைஸ்ராய் .. .. | 1894–98 |
| கர்ஸன் பிரபு, பதினோராம் வைஸ்ராய் .. .. | 1899–1905 |
| ஏழாவது எட்வர்ட் மன்னர் இந்தியாவின் சக்கரவர்த்தியானது .. .. .. .. .. .. | 1901 |
| மிண்டோ பிரபு, பன்னிரண்டாம் வைஸ்ராய் .. | 1905–1910 |
| ஐந்தாவது ஜார்ஜ் மன்னர் இந்தியா சக்கரவர்த்தியானது .. .. .. .. .. .. | 1910 |
| ஹார்டிஞ்சு பிரபு, பதின்மூன்றும் வைஸ்ராய் .. | 1910–1916 |
| டில்லியில் நடந்த முடிசூட்டு வைபவம் .. .. | 1911 |
| டில்லி இந்தியாவுக்கு முக்கிய நகரமானது .. .. | 1911 |
| பதினான்காம் வைஸ்ராயான செம்ஸ்போர்டு பிரபு இந்தியாவுக்கு வந்தது .. .. .. .. | 1916 |




Printed at the S. P. C. K. Press, Vepery, Madras—1917.

